# சங்க இலக்கியத்தில் நால்வகை மாந்தரின் வாழ்வியல் நிலைகள்

திருச்சிராப்பள்ளி பாரதிதாசன் பல்கலைக்கழகத்திற்கு

முனைவர் பட்ட ஆய்விற்காக அளிக்கப்பெறும் ஆய்வேடு


ஆய்வாளர்

**திருமதி.க.இந்திரா,** எம்.ஏ., எம்.ஃபில்.

பதிவெண்: 35249/Ph.D.K6/Tamil/PT/Oct.2012

நெறியாளர்

முனைவர் **வீ.சிவபாதம்,** எம்.ஏ., எம்.ஃபில்., பிஎச்.டி.

இணைப்பேராசிரியர்

**தமிழ்த் துறை – உயராய்வு மையம்**

**அ.வீரையா வாண்டையார் நினைவு**

**திரு புட்பம் கல்லூரி (தன்னாட்சி),**

பூண்டி, தஞ்சாவூர் மாவட்டம் – 613 504


**அக்டோபர் 2018**

முனைவர் **வீ.சிவபாதம், எம்.ஏ., எம்.ஃபில்., பிஎச்.டி.**
தமிழ்த்துறை,
இணைப்பேராசிரியர் & ஆய்வுநெறியாளர்,
அ.வீ.வா.நி.திரு புட்பம் கல்லூரி (தன்னாட்சி),
பூண்டி - 613 503, தஞ்சாவூர் மாவட்டம்.

# நெறியாளர் சான்றிதழ்

**'சங்க இலக்கியத்தில் நால்வகை மாந்தரின் வாழ்வியல் நிலைகள்'** என்னும் தலைப்பில் அமைந்த இவ்வாய்வு, திருச்சிராப்பள்ளி பாரதிதாசன் பல்கலைக் கழகத்தில் முனைவர் பட்டத்திற்காக ஆய்வாளர் **க.இந்திரா** அவர்களால் என் மேற்பார்வையில் தன்னிசையாகச் செய்யப்பட்டதாகும். அ.வீரையா வாண்டையார் நினைவு திரு புட்பம் கல்லூரி, தமிழ் உயராய்வு மையத்தில் இவர் செய்த இவ்வாய்வின் மீது இதற்கு முன் வேறு எந்தப் பட்டமும் அளிக்கப்பெறவில்லை எனச் சான்றளிக்கின்றேன்.

இடம் : பூண்டி

நாள் : **நெறியாளர் கையொப்பம்**

**க.இந்திரா,**
முனைவர் பட்ட ஆய்வாளர்,
தமிழ்த்துறை,
அ.வீ.வா.நி.திரு புட்பம் கல்லூரி (தன்னாட்சி),
பூண்டி - 613 503, தஞ்சாவூர் மாவட்டம்.

# ஆய்வாளர் உறுதிமொழி

**'சங்க இலக்கியத்தில் நால்வகை மாந்தரின் வாழ்வியல் நிலைகள்'** என்னும் தலைப்பில் முனைவர் (பிஎச்.டி) பட்டத்திற்காக எழுதப்பெற்ற இவ்வாய்வேடு என் சொந்த முயற்சியால் உருவானதாகும். இவ்வாய்வேடு இதற்குமுன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் அளிக்கப்பெறவில்லை என்றும் உறுதி அளிக்கிறேன்.

இடம் : பூண்டி

நாள் : **ஆய்வாளர் கையொப்பம்**

# நன்றியுரை

**சங்க இலக்கியத்தில் நால்வகை மாந்தரின் வாழ்வியல் நிலைகள்** என்னும் பொருளில் முனைவர் பட்டத்திற்கான ஆய்வினை மேற்கொள்ள அனுமதியளித்த பாரதிதாசன் பல்கலைக்கழகத்திற்கு முதற்கண் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

முனைவர் பட்ட ஆய்வு மேற்கொள்வதற்கு வாய்ப்பளித்த பூண்டி, அ.வீரையா வாண்டையார் நினைவு திரு புட்பம் கல்லூரியின் செயலர் மற்றும் தாளாளர் கல்விக்காவலர் **திருமிகு பூண்டி ஐயா** அவர்களுக்கும் என் நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

இந்த ஆய்வு எழுத வழிகாட்டியாக இருந்து நல்லமுறையில் அமைந்திட ஆக்கமும், ஊக்கமும் தந்து வழி நடத்திய இணைப் பேராசிரியர் **முனைவர் வீ.சிவபாதம்,** எம்.ஏ., எம்.ஃபில்., பிஎச்.டி. அவர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

அ.வீரையா வாண்டையார் நினைவு திரு புட்பம் கல்லூரியின் முதல்வர் **மேஜர் முனைவர்.ஆர்.வெங்கடாசலம்,** எம்.எஸ்சி., எம்.ஃபில்., பிஎச்.டி. அவர்களுக்கும், கலைப்புலத் தலைவர் **பேரா.என்.இராஜேந்திரன்** அவர்களுக்கும், துறை ஒருங்கிணைப்பாளர் **முனைவர் ரவிச்சந்திரன்** அவர்களுக்கும் மற்றும் துறைப்பேராசியர்களுக்கும் எனது நன்றி என்றும் உரியது.

இந்த ஆய்வுக்குத் தொடர்பான நூல்களைத் தந்து உதவிய அ.வீரையா வாண்டையார் நினைவு திரு புட்பம் கல்லூரி (தன்னாட்சி) **நூலகத்திற்கும்**, **தஞ்சை சரஸ்வதி மகால் நூலகத்திற்கும்** மற்றும் **தமிழ் பல்கலைக்கழகத்திற்கும்** என் நன்றியை உரிதாக்குகின்றேன்.

என் முதற்கடவுள்களான பெற்றோர்களுக்கும், சகோதர, சகோதரிக்களுக்கும், எனது கணவர் **இரா.சாமிநாதன்** அவர்களுக்கும், நட்பு பாராட்டும் நண்பர்களுக்கும் என் இனிய தமிழுக்கும் என்றென்றும் நன்றி உடையேன்.

எனது ஆய்வேட்டினை நன்முறையில் அச்சிட்டுக் கொடுத்த **தஞ்சை சந்தோஷ் கணினி** நிறுவனத்தாருக்கு எனது நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

**க.இந்திரா**

# பொருளடக்கம்

# முடிவுரை

*சங்க இலக்கியத்தில், 'நால்வகை மாந்தரின் வாழ்வியல் நிலைகள்' என்ற தலைப்பிலான இவ்வாயில் ஆரிய வர்ணம் கூறும் நால்வகை மாந்தரான அந்தணர், அரசர், வணகர், வேளாளர் பற்றி சங்க இலக்கியம் வழி 1. வர்ணம் - ஓர் அறிமுகம், 2. அந்தணர், 3. அரசர், 4. வணிகர், 5. வேளாளர் ஆகிய ஐந்து இயல்களில் இவ்வாய்வு எடுத்துரைக்கின்றது. அந்தந்த இயல்களில் கண்டறியப்பட்ட உண்மைகள் தொகுப்புரையாக இயல்முடிவில் தரப்பட்டுள்ளன.*

**ஆய்வில் பெற்ற உண்மைகளின் குறிப்பிடத்தக்கன:**

*வர்ணம் என்ற சொல் சமஸ்கிருதச் சொல்லாகும். அது 'தேர்வு' என்ற பொருளை உடையது. இதன் பொருள் வேதகாலத்திற்கு முன்னும் புராண காலத்திலும் அவரவர் செய்யும் தொழிலையேக் குறித்தது. இதிகாச காலத்தில் திறமையின் அடிப்படையில் 'குருவால்' வர்ணம் நிர்ணயிக்கப்பட்டது.*

*வேத காலத்தில் முதலில் செய்யப்படும் தொழில், பின் தொழிலை மாற்றலாம்; பிறகு மாற்ற முடியாத குல அடிப்படைத் தொழிலாகவும் இருந்தது. இக்காலத்தில் எழுதப்பட்ட 'மனு'வின் 'மனுதர்மசாத்திரம்' எனும் நூல் முதலில் நால்வர்ணம் பற்றி எடுத்துரைத்த நூலாகும்.*

*தமிழின் தொன்மையான இன்றும் போற்றப்படும் முதல் இலக்கண நூலான தொல்காப்பியமும் நால்வகை மாந்தர் தொழில் பற்றி எடுத்துரைக்கின்றது.*

*சங்க இலக்கியம் குறிப்பிடும் ஐந்திணைகளில் இந்நால்வகை மாந்தரில் எவரும் தலை மக்கள் இல்லை. இந்நால்வருள் மேலாண்மை, அதிகாரம் ஆகியவற்றினால் அரசனே முதன்மையானவனாகவும் அவனே அந்தணர், வணிகர், வேளாளர் ஆகியோரைப் புரக்க வல்லவனாகக் காட்டப்படுகின்றான். தொழில் அடிப்படையில் திமிலர், சாகாட்டாளர்,*

உமணர், கணியர், காழியர் எனப்பல பெயர்கள் வழங்கப்பட்டன. ஆனால் மேல் குறிப்பிட்டுள்ள மூவரையும் காப்பதன் அவசியத்தைப் புலவர் பலர் எடுத்துரைத்துள்ளனர்.

'வர்ணம்' என்பதற்கு 'சாதி' என்று பொருள் கூறும் தற்போதைய நிலைக்குக் காரணம் நம் நாட்டை அடிமைப்படுத்தி ஆண்ட ஆங்கிலேயர் கி.பி.1700 ஆம் ஆண்டு நிர்வாக வசதிக்காக உண்டாக்கிய இன மற்றும் மதரீதியான பிரிவு அதன் முடிவில் அவர்களின் கி.பி.1871 ஆம் ஆண்டு மக்கள் தொகைக் கணக்கெடுப்பு ஆகியவையே எனலாம்.

'வர்ணம்' என்பதற்கு வேதம், கீதை, புராணம், இதிகாசம் ஆகியவை தொழிலையே முதன்மைபடுத்தியது. ஆனால் ஆரிய வர்ணமோ நிறம், பிறப்பு ஆகியவற்றையே முதன்மைப்படுத்தியுள்ளது. நம் சங்க இலக்கியமோ நாட்டை ஆளும் அரசர்களே அந்தணர், வணிகர், வேளாளர் ஆகியோரையும் அவர்களின் தொழிலுக்கு வேண்டிய வசதிகளையும் செய்து தர வேண்டுமென்கிறது.

சங்க இலக்கியம் அந்தணர் தோற்றம் பற்றி, 'உறி தாழ்ந்த கரகம், முத்தேவர்களை ஒன்றென உரைக்கும் முக்கோல் மெல்லிய நடை' என்று வெளிப்படுத்துகின்றது.

அந்தணர் வேதமோதுவது நாட்டை வளமடையச் செய்தது. குருவாக விருந்து ஓதுவித்தனர்; கௌணியன் விண்ணத்தாயன் என்ற அந்தணர் அவரே வேள்வி செய்து ஈதலும் செய்தார். நாடு வளம் பெற, தாம் வேண்டியது நிறைவேற அரசர்கள் அந்தணர் கொண்டு வேட்டித்தனர். வேள்வி முடிவில் அந்தணர் விரும்பியதை அரசர் கொடுக்க அவர்கள் ஏற்றனர். இவ்வறுவகைத் தொழில் தவிர தூதனாகவிருந்து போரைத் தவிர்த்தனர். புரோகிதனாக இருந்து நற்காரியங்களுக்கு நல்நிமித்தம் பார்த்துக் கொடுத்தனர். யாகம் செய்யாத பார்ப்பான் சங்கனுக்கும் வேலையையும் செய்தான்.

அந்தணர்களுக்கு அளிக்கப்பட்ட பிரம்மதேயங்களே அவர்களின் பெருமையைப் புலப்படுத்துகின்றது.

அந்தணர்க்கென்று தனி பள்ளி இருந்தது. அவர்கள் பசு மற்றும் கிளி வளர்த்தனர். அந்தண மகளிர் நோன்பு நோற்றல் மற்றும் சமையலில் சமர்த்தராக இருந்தனர்.

மன்னன் எனும் சொல் மருதநிலம் சார்ந்த சிறிய ஊர்களின் தலைவனைக் குறித்து சீறூர் மன்னன், தண்ணடை மன்னன், பருத்தி வேலிச் சீறூர் மன்னன் என்று வழங்கப்படுகின்றது. மன்னர் மன்னன், மன்னர் கோவே, மன்னவர் மன்ன என்ற அடைமொழிகள் சேர, சோழ, பாண்டியர்களையேக் குறிப்பதனால் அவர்களின் வாழ்வியல் உண்மைகளே இங்கு எடுத்துரைக்கப்படவுள்ளது.

சங்க காலத்தில் சேரநாடு மலைபடுவளமும், சோழநாடு நெல்வளமும், பாண்டிய நாடு முத்துவளமும் மிக்கதாயிருந்தது.

மூவேந்தரும் போர் வெற்றியே சிறந்த வெற்றியாகவும், போர் இறப்பையே ‘வீர இறப்பாகவும்’ கருதினர். அரசனின் செல்வ ஆதாரமாக படைவளத்தையேக் கருதினர். சான்றாக சோழன் நலங்கிள்ளியின் படைவளத்தைக் கூறலாம்.

அரசன், தானைத்தலைவன், தலைமை வீரர்கள் ஆகியோர் இரண்டு கழல்கள் அணிந்திருந்தனர்.

மூவேந்தரும், ‘கொடைமடம் படுதல்லது படைமடம்படார்’ இந்தியா முழுவதும் ஆண்ட பெருமை மூவேந்தருக்குமுண்டு.

மூவேந்தரில் சங்கம் வைத்து தமிழ் வளர்த்த பெருமை பாண்டியர்க்கே உரியது. சோழர்களிடையே சகோதரப் போர், வாரிசுரிமைப் போர் நடந்தது.

வேந்தர், புலவர் நட்பு, கொடை, சான்றாண்மை அறநெறிதவறா ஆட்சி, வீரம் ஆகியவை அரசர்களிடம் சிறப்புடன் இருந்தது.

உழவும் தொழிலும் உண்டாக்கிய உணவுப் பொருட்களை விற்பனை செய்தவர்கள் 'வணிகர்கள்' எனப்பட்டனர்.

உப்பு வணிகமே, 'உள்நாட்டு வணிகத்தில்' முதன்மை பெற்றிருந்தது. அதில் 'பண்டமாற்று முறையே' இருந்தது. உப்பிற்குப் பதிலாக நெல், கள், இறைச்சி, தயிர், பயறு, தேன், மீன் ஆகியவை மாற்றிக் கொள்ளப்பட்டன. உமணர்கள் தம் வாகனமாக எருது, கோவேறு கழுதை ஆகியவற்றைப் பயன்படுத்தின.

நாளங்காடிக்குப் புகாரும்; அல்லங்காடிக்கு மதுரையும் சிறப்புற்றிருந்த நகரங்களாகும் அங்கு வட இந்தியா, எகிப்து, கிரேக்கம், பாபிலோனியா, ரோம், நாட்டுப் பொருட்கள் அரேபியக் குதிரை என எல்லாமும் நிலம் தெளியக் குவிந்து உலகச்சந்தை போல் காட்சியளித்தன.

ரோமர்களின் புதுச்சேரியில் உள்ள குடியிருப்பு, வீராம்பட்டினத்து குடியிருப்பு ரோம - இந்திய வணிக வளர்ச்சியை வெளிப்படுத்துகின்றது. இவர்கள் ரோம நாணயங்களை இங்கேயே அச்சிட்டு வணிகத்தில் பயன்படுத்தியதை அறிய முடிகின்றது.

ஏற்றுமதியும் இறக்குமதியும் துறைமுகங்களின் வழியே சிறப்புற நடந்தது. அங்கு சேமிக்க 'பண்டகசாலைகள்' இருந்தன. புகாரின் கலங்கரை விளக்கம் வணிகம் இரவுபகல் பாராது நடைபெற்றதைக் காண்பிக்கின்றது.

கி.பி.1958ல் சட்டமாக்கப்பட்ட 'வணிக முத்திரை' சங்க காலச் சோழரின் புலி உருவ முத்திரை தமிழரின் அறிவை வெளிப்படுத்துகின்றது.

மிளகிற்கு முசிறியும்; முத்திற்குக் கொற்கையும்; எல்லாப் பொருட்களின் ஏற்றுமதி, இறக்குமதிக்குப் புகாரும் சிறப்பு சேர்த்தது.

வேளாண்மையே நாட்டின் முதுகெலும்பு என்பதை அன்று அரசர்கள் அறிந்திருந்ததால் அணைகள் கட்டினர். ஆறுகளில் பெருக்கெடுத்தோடி வரும் நீரை வாய்க்கால் வழி ஏரி; குளங்கள் வெட்டிச் சேமித்து வேலி நிலத்தில் ஐந்நூறு மூட்டை நெல் விளைய உதவினர். நீர்நிலைகளைப் பாதுகாக்க காவலர்களை நியமித்திருந்தனர்.

சங்க கால 'புரவு வரி' இன்றைய 'பயிர்காப்பீட்டுத் திட்டத்தின் முன்னோடி' எனலாம். நிலக்கடன்கள் கொடுக்கப்பட்டதும் அது மழைப்பொய்க்கும் காலங்களில் தள்ளுபடி செய்யப்பட்டதையும் புறம் கூறுகின்றது.

வேளாளர்கள் பெயருக்கேற்ப ஈகைக்குணமுடையோராகவும் பெரிய இல்லங்களில் வசிப்போராகவும் இருந்தனர்.

இன்றைய 'பொங்கல் விழா' அன்று 'அறுவடை விழா' என்றும்; இன்றைய 'ஆடிப்பெருக்கு' அன்று 'நீர் விழா' என்றும் அழைக்கப்பட்டதை அறியலாகின்றது.

வேளாண்மை செழித்த மருதநிலத்தில் கலை வளர்ந்தது; விழாக்களும் நடைபெற்றன; அதே சமயத்தில் பரத்தமையும் வளர்ந்தது.

வேளாளர்கள் 'வேளிர்' என்ற பெயரில் அரசர்களாகவும்; மையூர்கிழான் போன்றோர் அமைச்சர்களாகவும் இருந்துள்ளனர். இவர்கள் அரசர்களிடையே பெண் கோடல் மரபிருந்ததை அதற்காக அவர்கள் செய்த போரைக் கூறலாம்.

# முன்னுரை

**ஆய்வுத்தலைப்பு - விளக்கம்**

*தொல்காப்பியர் காலத்தில் தமிழகத்தில் அயல்நாட்டினர் எவரும் குடியேறவில்லை. தனித் தமிழினத்தாரே வாழ்ந்து வந்தனர். தொல்காப்பியர்க்கு முன்னரே சங்கத் தமிழகத்தில் பல்வகைத் தொழில்புரிந்த மக்கள் வாழ்ந்துவந்தனர். அவர்களின் தொழிலில் செந்தண்மையாளுதல், அரசாளுதல், வணிகம், வேளாண்மை ஆகியவை வாழ்வியல் பண்பாட்டின் வளத்தை மேம்படுத்தவும், வளம்பெறவும் செய்ததால் மனிதனை மனிதனாக உலகிற்கு காட்டியது.*

*நால்வகை மாந்தரான அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் ஆகியோரால் ஒரு நாடு வளமுடையதானது. மேலாண்மை, அதிகாரம் காரணமாக அரசர்கள் முதன்மை பெற்றிருந்தாலும் அவர்கட்கு இணையாக வைதீக நெறியால் அந்தணரும், செல்வத்தால் வணிகரும், ஈகையால் வேளாளரும் இருந்தனர். இந்நாற்வகை மாந்தரே ஆரியரால் நால்வருணத்தார் என்று அழைக்கப்படுகின்றனர். இவ்வாய்வு மேற்கண்ட நாற்வகைமாந்தரின் வாழ்வியல் நிலைகளை தெளிவுற எடுத்துரைக்கின்றது.*

**ஆய்வின் நோக்கம்**

*ஆரியரால் நிறம், பிறப்பு அடிப்படையில் உருவான நால்வருணம், தமிழகத்தில் எப்படியிருந்தது என்பதையும் புராணம், இதிகாசம், கீதை, வேதம், தொல்காப்பியம் ஆகியவை கூறும் கருத்தையும்; சங்க இலக்கியத்தின் மூலம் நால்வகை மாந்தரின் வாழ்வியலை எடுத்துரைப்பதே இவ்வாய்வின் நோக்கமாகும். இதில் மாந்தர் எனும் சொல் அகமாந்தரையோ புறமாந்தரையோ குறிக்கவில்லை.*

**கருதுகோள்**

*சமூகத்தில் பல்வேறு தொழிலினர் வாழும்போது நால்வகைமாந்தர் முதன்மை பெற்றிருக்கும் காரணம், சிறப்பு முக்கியத்துவம் பற்றி அவர்களின்*

வாழ்வியல் நிலைகளே எடுத்துரைக்குமென்பதால் 'சங்க இலக்கியத்தில் நால்வகை மாந்தரின் வாழ்வியல் நிலைகள்' என்ற தலைப்பில் ஆய்வு மேற்கொள்ளப்பட்டது.

**ஆய்வு எல்லை**

சங்க காலத்தில் தமிழகத்தை சேர, சோழ, பாண்டிய அரச மரபினரே ஆண்டு வந்தனர். இம்மூவர் மட்டுமே முடிசூடி ஆளும் நிலையெய்தினர். குறுநில மன்னரும், சீறூர் மன்னரும், வேளிரும் முதுகுடிமன்னரும் இம்மூவரின் ஆட்சிக்குட்பட்டவர்களாகவே இருந்தனர்.

'முற்றிய திருவின் மூவர்' பொதுமை சூட்டிய மூவருலகம் 'தமிழ்கெழு மூவர் காக்கும்' என்ற அடிகள் இம்மூவர்க்கு மட்டுமே உரிமையுடையது என்பதை உணர்த்துவதனால் சேர, சோழ, பாண்டிய வேந்தர்களைப் பற்றி மட்டுமே 'அரசர்' என்னும் தலைப்பில் ஆராயப்பட்டுள்ளது.

முதன்மை ஆதாரங்களாக எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, தொல்காப்பியம், மனுதர்மசாத்திரம் ஆகியவையும்; துணைமை ஆதாரங்களாக சிலப்பதிகாரம், மணிமேகலை, பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள், ஆய்வு நூல்கள், அகராதிகள், இதழ்கள் ஆகியவையும் எடுத்துக்கொள்ளப்பட்டுள்ளன.

**ஆய்வுப் பொருள் பாகுபாடு**

சங்க இலக்கியத்தில் நால்வகை மாந்தரின் வாழ்வியல் நிலைகள் என்ற ஆய்வுப் பொருண்மை ஐந்து இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளது.

முன்னுரை

இயல் 1 வருணம் ஓர் அறிமுகம்

இயல் 2 அந்தணர்

இயல் 3 அரசர்

இயல் 4 வணிகர்

இயல் 5 வேளாளர்

முடிவுரை

**இயல்களில் கூறப்படும் கருத்துக்கள்**

வருணம் - ஓர் அறிமுகம் என்ற முதல் இயலில் அதன் பொருள் பற்றியும்; வேதம், கீதை, புராணம், இதிகாசம் ஆகியவை 'வருணம்' பற்றி கூறும் செய்திகள்; உலகத்தோற்றம் பற்றிக் கூறும் மனுதருமசாத்திரம் நால்வருணம் பற்றிக் கூறும் செய்திகள்; 'வருணம்' என்பதன் பொருள் 'தொழில்' என்ற நிலை மாறி 'சாதி' என்றானது ஆங்கிலேயரால் தான் என்பதையும்; தொல்காப்பியம் மற்றும் சங்க இலக்கியம் நால்வகை மாந்தர் பற்றிக் கூறும் செய்திகள் ஆகியவை எடுத்துக்காட்டப் பெற்றுள்ளது.

'அந்தணர்' என்னும் தலைப்பிலான இரண்டாவது இயலில் அந்தணன் என்பதன் வேறு பெயர்கள், பொருள், கோத்திரம், வேதமோதும் அந்தணனின் பெருமை, வேதத்தின் சிறப்பு, வேள்வியின் சிறப்பு, அந்தணனின் தோற்றம், பழக்கவழக்கங்கள், உணவு, உடை, உறைவிடம், கல்வியறிவு, அந்தணமகளிரின் கற்புநிலை, திறமை, நோன்பு பற்றியும்; அந்தணப்புலவர்கள் மற்றும் அவர்களுக்கு வழங்கப்பட்ட பிரம்மதேயங்கள் பற்றியும் எடுத்துரைக்கின்றது.

'அரசர்' என்னும் தலைப்பிலான மூன்றாவது இயலில் அரசனைக் குறிக்கும் வேறுபெயர்கள், அரசர் - மன்னர் வேறுபாடு பற்றியும்; மூவேந்தர் மரபு, எல்லை, நாட்டுவளம், தலைநகர்ச் சிறப்பு பற்றியும்; வீரத்தையும், வீர இறப்பையும் விரும்பு அரசர்கள் செய்த போர்கள், போருக்கான காரணங்கள், போருக்கான ஆயத்த நிகழ்வுகள், படைவளம், மறவரின் வீரம், தோல்வியுற்ற மற்றும் வெற்றி பெற்ற வேந்தனின் நிலை பற்றியும், மேலும் அரசனின் கொடி, குடை, முரசு, தார், முடி, அரியனை, தலைநகர், அரண்மனை, அரசுரிமை, ஆட்சியுரிமை பற்றியும்; அரசனது கடமைகள், அரசியல் உறுப்புக்கள், நாட்டின் நீதி, நிர்வாகம், வரி, வருவாய்

பற்றியும்கூறப்பட்டுள்ளது. மேலும் அரசர்களுக்குப் பாடவும் தெரியும் என்பதை ‘அரசர்களில் புலவர்’ எனும் உட்தலைப்பு விளக்குகின்றது.

‘வணிகர்’ எனும் தலைப்பிலான நான்காவது இயல் சங்க காலத்தில் நடைபெற்ற வணிகம், ஏற்றுமதி, இறக்குமதி அதற்கு உதவிய துறைமுகங்களான முசிறி, கொற்கை, புகார் பற்றியும், உள்ளூர் விற்பனை நிலையங்களாக செயல்பட்ட புகாரின் நாளங்காடி, மதுரை அல்லங்காடி அங்கு குவிக்கப்பட்ட அனைத்துப் பொருட்கள் பற்றியும்; ஏற்றுமதிப் பொருட்களுக்கு விதிக்கப்பட்ட வரி, இடப்பட்ட முத்திரை பற்றியும், பண்டமாற்றுமுறை உள்நாட்டு வணிகத்திற்கும், நாணயப் பரிமாற்றம் வெளிநாட்டு வணிகத்திற்கும் உதவியது பற்றியும்; வணிகத்திற்காக ரோமர்கள் ஏற்படுத்திய குடியிருப்பு, வணிகர்களின் நீதி, குடியிருப்பு, வளவாழ்வு, ஆடை, அணிகலன், விளையாட்டு, நுண்ணறிவு ஆகியவற்றையும் எடுத்துரைக்கின்றது.

‘வேளாளர்’ எனும் தலைப்பிலான ஐந்தாவது இயலில் பெயரின் பொருளுக்கேற்ப விருந்தோம்பலில் சிறந்தவர்களாக இருந்தனர் என்பதையும்; வேளாளரில் உழுவித்துண்பவர்கள் ‘கிழார்கள்’ எனப்பட்டனர். அவர்களின் பேரில்லம், கூழுடைக்குதிர்கள், பாழியில் செல்வத்தை புதைத்த நிலை பற்றியும்; உழுதுண்பவர்கள் ‘வினைஞர்’ எனப்பட்டனர். அவர்கள் ‘வேளாளரின் தூண்கள்’ ஆவர். அவர்களின் கவிழ்ந்த குடில்கள், உணவு, உடை பற்றியும், ‘கிழார்கள்’ எனப்பட்ட வேளாளர்கள் பெருஞ்செல்வர்களாகவும், குறுநில மன்னர்களாகவும் அமைச்சர்களாகவும் அரசர்களோடு மணஉறவும் கொண்டிருந்தனர். வேளாளர்களின் பயிரிடுதல் முறை, அவர்களின் நலன்கருதி அரசர்கள் வெட்டிய குளம், ஏரி, ஆறு, காப்பீட்டுத்திட்டம், கடன் தள்ளுபடி பற்றியும் வேளாளரின் வழிபாடு, நடத்திய விழாக்கள், பரத்தமை ஒழுக்கம், வேளாளரின் உணவு, உடை, உறைவிடம், அணிகலன் பற்றியும் வேளாளருள் மன்னனாக விளங்கிய சிறுகுடிகிழான் பண்ணனின் கொடைத்தன்மை பற்றியும் எடுத்துக்காட்டப்பட்டுள்ளன.

## ஆய்வு அணுகுமுறை

'சங்க இலக்கியத்தில் நால்வகை மாந்தரின் வாழ்வியல் நிலைகள்' என்ற தலைப்பிலான இவ்வாய்வு 'விளக்க ஆய்வு' முறையில் ஆய்வு செய்யப்பட்டுள்ளது.

# இயல் - 1

# வருணம் - ஓர் அறிமுகம்

'வருணம்' என்பது ஒரு சமஸ்கிருத வார்த்தை அதன் முதன்மைப் பொருள் 'தேர்வு' என்பதாகும்.[1] மேலும் வருணம் என்பதற்கு வண்ணம், ஒழுங்கு என்றும் பொருள் கூறுகின்றனர். 'தேர்வு' என்பது தனிமனிதனின் விருப்பத்தேர்வு என்பது புலனாகின்றது. எந்த ஒரு தனிமனிதனும்தனது விருப்பத்தின்படி அன்றைய சமூகத்தில் நிலவிய நான்கு வர்ணங்களில் ஏதேனும் ஒன்றைத் தேர்வு செய்து கொள்ளலாம் என்ற நிலையே பண்டைய இந்தியாவில் இருந்தது.

ஒருவர் தன்னுள் எழும் ஆர்வத்தினால் திறமை பெறும் தொழில் சார்ந்த வாழ்க்கை முறைக்கு 'வருணம்' என்று பெயர்.[2] இவ்வர்ணம் நான்காகப் பிரிக்கப்பட்டிருந்தது.

| | | |
|---|---|---|
| பிராமணர் | : | துறவிகள், ஆசிரியர் |
| சத்திரியர் | : | ஆட்சியாளர், போர்வீரர்கள்,<br>நிர்வாகம் செய்பவர்கள் |
| வைசியர் | : | பொருட்களை விற்பவர்கள் |
| சூத்திரர் | : | தொழிலாளர்கள், முதலாளிகள் [3] |

இந்நான்கு வர்ணங்களில் ஒன்றையோ, பலவற்றையோ தேர்ந்தெடுத்து வாழ்ந்தார்கள் என்பதை வேத காலத்திற்கு முந்தைய சான்றுகளும்; வேதகால, புராண, இதிகாச காலச் சான்றுகளும் கூறுகின்றன.

### 1.1 வருணம் தொழில்:

வேதகாலத்திற்கு முந்தைய காலத்தில் செய்யப்படும் தொழிலாகவே வருணம் இருந்தது என்பதற்கு ஆதாரமாக மீமாம்ச பாஷ்யம் எழுதிய 'சாபரமகரிஷி' வேடரின் மகனாவார். ஆனால், இன்று சாபரர் குலம் தாழ்த்தப்பட்ட குலமாகும்.

ஆன்மீக உலகின் பொக்கி மாக விளங்கும் சாபர (பாஷ்யத்தின்)

குலம் தாழ்த்தப்பட்ட குலமாகக் கருதப்படுவதிலிருந்து அன்று வருணம் தொழில்தான் என்பதை புலப்படுத்த முடிகின்றது.

"சத்யகாமனின் தந்தை" கௌதம மகரிஷியின் குருகுலத்தில் வேத மந்திரங்களைக் கற்று அந்தண மகரிஷியானார் என்று சாந்தோக்கிய உபநிடதம் கூறுகின்றது; தாசியின் மகனான, 'கவாச மகரிசி' வேதமந்திரங்களை ஞானக்கண்ணால் கண்ட 'மந்திரதிரஷ்டா' எனப்படும் மிகவும் உயர்ந்த ஆன்மீக மகரிசி ஆவார்.

### 1.2. புராணம் கூறும் வர்ணம்:

புராணம் என்பது 'பழைய வரலாறு'. புராணம் என்றால் விஷ்ணு புராணம், நாரத புராணம், சீமத் பாகவத புராணம், கருடபுராணம், பத்மபுராணம், வராகபுராணம், பிரமபுராணம், பிரமாண்ட புராணம், பிரம வைவார்த்த புராணம், மார்க்கண்டேய புராணம், பவிசய புராணம், வாமன புராணம், மத்சய புராணம், கர்ம புராணம், லிங்க புராணம், சிவபுராணம், கந்தபுராணம், அக்னிபுராணம் ஆகிய பதினெட்டு புராணங்களையே குறிப்பிடுவர்.

பவிசய புராணத்தின்படி பராசரரின் அன்னை சூத்திரர் ஆவார். பராசரருக்கும் மீனவப் பெண்ணுக்கும் பிறந்தவரே நான்கு வேதங்களையும் தொகுத்தளித்த மாமுனிவரான 'வேதவியாசர்'ஆவார். 'ஐதரேய பிராம்மணத்தை' எழுதிய மகிசாச மகரிசியும் சூத்திர குடும்பத்தில் பிறந்தவரே ஆவார். இவற்றிலிருந்து வருணம் புராண காலத்தில் தொழிலாகத்தான் இருந்தது என்பதை அறிய முடிகின்றது.

### 1.3 இதிகாசம் கூறும் வர்ணம்:

இதிகாசம் என்பது இராமாயணம், மகாபாரதம் ஆகியவற்றைக் குறிக்கும். மகாபாரதம் குருகுலமுறை ஏற்பது பற்றிக் கூறுகின்றது. இதில் ஆச்சார்யா எனும் குரு, பன்னிரெண்டாண்டு காலத்திற்கு மாணாக்கருக்குப் பயிற்சி அளித்து அதன் அடிப்படையில் மாணவரின் வருணம் நிர்ணயிக்கப்பட்டது. இதில் 'வருணம்' பிறப்படிப்படையில்

ஏற்படுத்தப்படாததை புலப்படுத்த முடிகின்றது.

### 1.4 வேதம் கூறும் வர்ணம்:

கி.மு.1500 ? 500க்கு இடைப்பட்ட காலம் வேதகாலமாகும். இவ்வேதகாலத்தில் வருணாசிரமம் மூன்று மாறுபாடுகளைக் கொண்டிருந்தது என்கிறார் அண்ணல் அம்பேத்கார் முதல் கால கட்டத்தில் வருணம் என்பது ஒரு குறிப்பிட்ட காலத்திற்கு ஒருவரால் செய்யப்படும் தொழிலாக இருந்தது. இதில் ஒருவர் வருணத்தை மாற்றிக் கொள்ள முடியும்; இரண்டாம் காலகட்டத்தில் வாழ்க்கையின் ஒரு குறிப்பிட்ட காலகட்டத்தில் ஒருவரது வருணம் நிர்ணயிக்கப்படும் ஆனால் அதனைப் பின்னர் மாற்றிக் கொள்ள முடியாது; மூன்றாவது காலகட்டத்திலேயே வருணம் குல அடிப்படையில் மாறியது.[4]

வருணம் நிர்ணயிக்கப்பட்ட இரண்டாம் காலகட்டத்தில் வருணத்தை மனு மற்றும் சப்தரிஷிகள் போன்றோர் தீர்மானித்தனர்.[5] நேர்முகத்தேர்வில் தீர்மானித்தனர் இவ்வருண ஒதுக்கீடானது ஒரு'யுகம்' எனப்பட்ட நான்கு ஆண்டுகளுக்கு ஒருமுறை நடைபெற்றது. அப்போது மனு மற்றும் சப்தரிசிகள் எனப்படும் முதுமக்கள் குழுவும் மாற்றியமைக்கப்பட்டது என்பதை வேதம் கூறுகின்றது.

### 1.5 பகவத் கீதையும் வர்ணமும்:

பகவத் கீதை (ஸ்ரீகிருஷ்ணர்) கண்ணன் அருச்சுனனுக்கு கூறிய அறிவுரையே ஆகும். அதன் காலத்தை சரியாக வரையறுக்க முடியாது. 5200 ஆண்டுகளுக்கு முற்பட்டது என்கின்றனர். கீதையை 'கடவுளின் குரல்' என்கின்றனர். சமஸ்கிருதத்தில் எழுதப்பட்ட கீதையை கி.பி.1795ல் சார்லஸ் வில்கின்ஸ் என்பவர் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தார்.

வருணம் என்றால் 'தோற்றம்' என்று பொருள் கூறுகின்றார் ஸ்ரீகிருஷ்ணர். உடல் உண்மையான தோற்றம் அல்ல உங்களுடைய அக எண்ணவோட்டம் எதுவோ அதுவே உண்மையான தோற்றம் என்கிறார்.[6]

*வருணம் பற்றி கூறுகையில் கீதை, 'வருணம் என்பது கர்மத்திறனை மதிப்பிடுகின்ற அக அளவியல் குறியீடு' என்கிறது. ஆனால் காலப்போக்கில் மக்கள் அனைவரும் இங்கு நிச்சயிக்கப்பட்ட கர்மத்திறனை விட்டுவிட்டு வெளியில் உள்ள சமுதாயத்தில் பிறப்பை அடிப்படையாகக் கொண்டு சாதிகளை உருவாக்கிக் கொண்டு அவற்றையே 'வருண அமைப்பு' அல்லது சாதி அமைப்பு என்று உருவாக்கிவிட்டனர். காலப்போக்கில் வருணத்தை நிச்சயம் செய்வது பிறப்பை மட்டுமே அடிப்படையாகக் கொண்டு அமைந்துவிட்டது.*

*பகவத் கீதையில் கிருஷ்ண பகவான் சாதியைப் பற்றியோ எந்த சாதியின் பெயரையோ குறிப்பிடவில்லை. பகவான் வருணத்தை மட்டுமே விளக்கியுள்ளார். வருணம் என்பது ஒருவரின் செயல்களினால் தோன்றுவது; பிறப்பால் தோன்றுவது வருணம் இல்லை.*[7]

**சாதியை எதிர்க்கும் பகவத் கீதை:**

*தற்போதைய சாதியும் பழங்கால வருணமும் ஒன்று கிடையாது. ஏனெனில் வருணம் செய்கின்ற தொழிலாலும்; சாதி 'பிறப்பாலும்' நிர்ணயம் செய்யப்படுகின்றது.*

*"யான் எல்லா உயிர்களுக்கும் உற்றவன்"*

*இந்த சுலோகம் இறைவன் எல்லா உயிர்களுக்கும் நண்பன் என்று குறிப்பிடுகின்றது. இது அன்று வருணவேறுபாடு இல்லை என்பதை சுட்டிக் காட்டுகின்றது.*

*"யான் எல்லா உயிர்களிடமும் சமமான அன்பு*
*வைத்து இருக்கிறேன். இறைவனை நினைவு கொண்டவர்கள்*
*உள்ளத்தில் என்றுமே நான் குடியிருப்பேன். அவர்களும்*
*என் உள்ளத்தில் குடியிருப்பார்கள்"*[9]

*என்ற வரிகள் "இறைவன் எல்லா உயிர்களுக்கும் சமமானவர்" என்கிறது.*

*"எல்லா உயிர்களின் இதயத்திலும் குடியிருப்பேன்"*[10]

என்ற குறிப்பிடுவதிலிருந்து குறிப்பிட்ட சாதியினர் எவரையும் அவர் குறிப்பிடவில்லை.

"நான்கு வர்ணங்களும் மனிதர்களின் குணங்களைப் பொறுத்தே பகுக்கப்பட்டுள்ளன"[11]

தாழ்வாக கருதக் கூடாது என்கிறார்.

பிராம்மண, சத்திரிய, வைசிய, சூத்திரர்களை அவரவர் குணங்களுக்கும் திறமைகளுக்குமேற்ப பகுக்கப்பட்டுள்ளது.

இதனை நாமேற்கும் வகையில் பிராம்மணனுக்கு பிறந்த பரசுராம் போரில் கலந்து கோண்டு சத்திரியன் ஆகிறார் என்ற செய்தி உள்ளது.

**பிறப்பால் யாரும் பிராம்மணன் ஆக முடியா**

"சாந்தம், மன அமைதி, எளிமை, தெளிவு, உளத்தூய்மை, எல்லா உயிர்களிடையேயும் அன்பு, மன்னிக்கும் சுபாவம், நேர்மை, ஞானம், நம்பிக்கை, தெளிவான சிந்தனை இவை யாவும் பிராம்மணர் ஆக தகுதிகள்"[12]

பிறக்கும் போதே யாரும் இக்குணங்களுடன் பிறப்பதில்லை எனவே பிறப்பால் யாரும் பிராம்மணர் ஆக முடியாது.

**சத்திரியரின் குணங்கள்:**

வீரமுடைய எண்ணம், மாண்பு, தைரியம், பெருந்தன்மை, உயர்ந்த குணம், தாராளம், தன்னலமற்ற வாரி வழங்குகிற ஈகை குணம், சிறப்பாக தலைமை வகிக்கும் குணம்.[13]

**பகவத் கீதையின் சிறப்பு:**

பிராம்மணனை அவர் உயர்வாகக் கூறியிருந்தால் அவர் மாடு மேய்ப்பவராக வாழ்ந்திருக்கமாட்டார். அவர் கீதையில், "உன் திறமைக்கேற்ற தொழிலைச் செய்து தருமநெறி தவறாமல் வாழ்ந்து வா" என்கிறார்.[14]

### *1.6 மனுவும் வர்ணமும்:*

*மனு வாழ்ந்த காலம் கி.மு.1500 என்பதை சதபத பிராமணத்திலும், சொராசிட்டிரமத நூலான சென்ட் அவுஸ்தாவிலும் காணமுடிகின்றது. இதிலிருந்து மனுவின் காலம், 'வேத காலமே' என்பதை தெளிவுறுத்த முடிகின்றது.*

*வேதங்களான ரிக், யசூர், சாம, அதர்வணம் ஆகியவற்றில் ரிக் வேதம் 'மனுவை' ரிஷிகளில் ஒருவராகக் குறிப்பிடுகின்றது. யசூர் வேதத்தில் மனுவை 'ரசாபதி' என்றும்; அதர்வண வேதத்தில் சரணயூவுக்கும் வாஸ்துவுக்கும் பிறந்த, 'பிர்ஷ்' என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது.*[15]

*ரிக்வேத கால நதிகளான சரஸ்வதி, திருட்டாதுவதி ஆகியவற்றின் கரைகளில் ஏற்பட்ட வெள்ளத்தில் அங்குள்ள பிரம்மவர்த்தபகுதிகள் அழிந்தன. அங்கு வாழ்ந்தவர்கள் பின்பு விந்திய மலைவடபகுதிகளில் (தற்கால நேபாளம், உத்திரபிரதேசம், பீகார், மத்தியபிரதேசம், வங்காளம், குஜராத், கிழக்கு இராசஸ்தான்) குடியேறினர். அப்போது அங்கு வாழ்ந்தவர்கள் மனுவை அணுகி இயற்கை சீற்றங்களை எவ்வாறு எதிர் கொள்வது மற்றும் சமூக வாழ்க்கை நெறிமுறைகளை வகுத்து வாழும் முறை பற்றி கேட்டபோது மாமுனி 'மனு' வகுத்துக் கொடுத்ததே 'மனுஸ்மிருதி' என்று நம்பப்படுகிறது. 'மனுஸ்மிருதி' என்பது சமஸ்கிருதச் சொல் ஆகும். இதனைத் தமிழில் மனுதர்மசாத்திரம் என்பர்.*

### *1.6.1 மனு தர்ம சாத்திரம்:*

*இந்நூல் இந்துக்கள் பிறப்பு முதல் இறப்பு வரை வாழ்க்கையில் பின்பற்ற வேண்டிய சடங்குகள், சம்பிரதாயங்கள் அற ஒழுக்க விதிமுறைகளை ஒழுங்குபடுத்திக்கூறும் நூலாகும். இதனைத் தொகுத்தவர் 'மனு' ஆவார். இதில் 2685 செய்யுட்கள், 3 பகுதிகள், 12 அத்தியாயங்கள் அமைந்துள்ளது. இதனை முதன்முதலில் கல்கத்தா உச்சநீதிமன்றத்தின் நீதியரசரானட் 'வில்லியம் ஜோன்ஸ்' என்பவர் கி.பி.1794ல் சமஸ்கிருதத்திலிருந்து ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தார். இந்நூலுக்கு,*

‘மானவதர்மம்’ என்ற பெயரும் உள்ளது. இதற்கு ‘மானுட அறம்’ என்றும் பொருள் கூறுவர்.

### 1.6.2. சிறப்பம்சங்கள்:

மனு தர்மசாத்திரம் என்பது நமது மதத்திற்கு ஆதாரமாகக் கையாண்டு வருவதும்; நடைமுறையில் கையாண்டு வருவதும்; அரசாங்கத்தில் ஏற்படுத்தப்பட்டிருக்கிற சிவில் கிரிமினல் சட்டதிட்டங்களால் அனுசரிக்கப்பட்டதுமாகும். இந்திய தண்டனை சட்டங்கள் மற்றும் குடியுரிமைச் சட்டங்கள் இயற்றுவதற்கு முன்பு இந்தியாவை ஆண்ட இசுலாமியர்களும் பிரித்தானியர்களும் இந்து மக்களுக்கு குற்றம் மற்றும் குடியுரிமை வழக்குகளில் மனுதர்மசாத்திர அடிப்படையிலேயே தீர்ப்புகள் வழங்கினர். மேலும் இந்நூலைப் பின்பற்றியே சந்திரகுப்த மௌரியரின் தலைமை அமைச்சர் கௌடில்யர் என்ற சாணக்கியர் ‘அர்ததசாத்திரம்’ என்ற அரசு நிர்வாக நூலை எழுதி புகழ் பெற்றார்.[16]

### 1.6.3. உள்ளடக்கம்:

பரம்பொருளான பகவான் தமது விருப்பத்தின் காரணமாக பிரம்மனைப் படைத்து அவன் மூலம் அண்ட சராசரங்களைப் படைத்தார். மனித குலத்தைப் பெருக்க மரிசி, ஆங்கிரசர், அத்திரி, புலத்தியர், புலகர், கிருது, பிரசேதகர் வசிட்டர், பிருகு, நாரதர் என்றும் பத்து பிரசாபதிகளைப் படைத்தார். இந்த பிரசாபதிகள் மூலம் மனு உட்பட ஏழு மனுக்களும்; தேவர்கள், சுவர்க்கலோகம், மாமுனிகள் பட்சர்கள், காந்தர்வர்கள், விண்ணரர்கள், கிம்புருபர்கள், அசுவினி குமாரர்கள், அட்டதிக்கு பாலகர்கள், அசுரர்கள், அப்சரசுகள் இராக்கதர்கள், பைசாசர்கள், நாகர்கள், கருடர்கள், சர்ப்பங்கள், பிதுர்கள், தாவரங்கள், விலங்கினங்கள், நீர்வாழ் உயிரினங்கள் ஆகியவை தோன்றின. பின்னர் மக்கள் தொகை அதிகரிக்க அதிகரிக்க மக்கள் கட்டுக்கோப்பாக இயங்க வருண மற்றும் ஆசிரம தருமங்களை மனு வகுத்துக் கொடுத்தார். இது ஆசாரப் பகுதி, விவகாரப்பகுதி, பிராயச்சித்தப்பகுதி என்ற மூன்று பகுதிகளையும் பன்னிரெண்டு அத்தியாயங்களையும் கொண்டுள்ளது.

**முதலாவது அத்தியாயம்:**

உலகத்தோற்றம், அண்ட சராசரங்களின் தோற்றம்; தேவர்கள், மனிதர்கள், அசுரர்களின் தோற்றம், காலக்கணக்கிடு, நால்வகை வருண சமூகம், நால்வகை ஆசிரமம், அதன் கடமைகள், பொறுப்புகள் ஆகியவற்றைக் கூறுகின்றது.

**இரண்டாவது அத்தியாயம்:**

பிரம்மச்சரியம், பூணூல் அணிதல் (உபநயனம்) குருபக்தி, வேதம்படித்தல், வழிபாட்டு முறைகள், குருகுல நிலை ஆகியவற்றைக் கூறுகின்றது.

**மூன்று - ஐந்தாவது அத்தியாயங்கள்:**

அந்தணரின் தருமங்களாக இல்லறத்தின் மேன்மைகள், திருமண உறவுகள், யக்ஞம், விருந்தோம்பல், பலியிடுதல் இறந்த முன்னோர்களுக்கு செய்ய வேண்டிய பிதுர் கடன்கள், தகாத உறவுகள், கலப்புத் திருமணங்கள், விலக்க வேண்டிய வேதம் ஓதுதல், ஓதுவித்தல், ஒழுக்கநெறிகள், உணவுமுறைகள், தூய்மை, பெண்டிர் விதிகள், உண்ணத்தகாதாவை, இறப்பு, தீட்டு ஆகியவற்றைக் கூறுகின்றது.

**ஆறாவது அத்தியாயம்:**

வனப்பிரத்தம், துறவறம், காட்டில் வாழ்தல், உணவுமுறைகள், ஒழுக்கவிதிகள், செபம், தவம், வேதாந்த விசாரம் ஆகியவை அந்தணர்க்குரியன என்று கூறுகின்றது.

**ஏழாவது அத்தியாயம்:**

சத்திரியரின் தருமங்களாக சத்திரியரின் மாண்புகள், பண்புகள், கடமைகள், பொறுப்புகள், அரசின் அதிகாரிகள், தலைநகரம், போர் அறம்,

உள்ளாட்சி நிர்வாகம், நிர்வாக வரி, வரி விதித்தல், பகை, அரசர்களின் பலம், பலவீனம் போர் முறை, போர் வெற்றி, புலவர்களுக்கும் அந்தணர்களுக்கும் பரிசு வழங்குதல், வேள்விகள் செய்தல், சமூகத்தில் வருணாசிரம தரும நெறிகள் காத்தல் ஆகியவற்றைக் குறிப்பிடுகின்றது.

***எட்டாவது அத்தியாயம்:***

நீதிநெறி சட்டங்களாக குடிவகுப்பு, நீதிமன்றம் உடைமைகள், புதையல், கடன்கள், வட்டி, காப்புப் பொருள், பொருள் விற்பனை, விலை நிர்ணயம், கலவரம், பலாத்காரம், நிலத்தகராறு, நட்டாடு, மான நட்ட ஈடு, உடன்படிக்கைகள் நம்பிக்கை துரோகம், செய்கூலி, கலப்படம், தகாத செயல்கள் ஆகியவற்றினைக் குறிப்பிடுகின்றது.

***ஒன்பதாவது அத்தியாயம்:***

வைசியரின் அறம், திருமணம், மகப்பேறு, பாகப்பிரிவினை, கடமைகள் ஆகியவற்றினைக் குறிப்பிடுகின்றது.

***பத்தாவது அத்தியாயம்:***

சூத்திரர், வர்ண கலப்பு சாதிகள், ஆபத்து, தர்மம், கடமைகள், கலப்புச் சாதிகளின் தோற்றம் மற்றும் தகுதிகளைக் கூறுகின்றது.

***அத்தியாயம் பதினொன்று:***

தெரிந்தும் தெரியாமலும் செய்த குற்றங்கட்கு செய்ய வேண்டிய கழுவாய்கள், பாவங்களின் விளைவுகள், குற்றவகைகள், உண்ணத் தகாதவைகள், மறுபிறப்பு, முக்குணம் ஆகியவற்றைக் குறிப்பிடுகின்றது.

***அத்தியாயம் பன்னிரெண்டு:***

வினைப்பயன்கள், விளைவுகள், வேதங்கள், வேதாங்கங்களின் வாய்மை, ஆன்ம ஞானம் ஆகியவற்றைக் குறிப்பிடுகின்றது.

### *1.7 தொல்காப்பியர் கூறும் வர்ணம்*

தொல்காப்பியம் தமிழர்க்குக் கிடைத்த முழுமையான இலக்கண

நூல். இது அகத்தியத்தின், ‘வழி நூல்’ என்பர். இயற்றியவர் தொல்காப்பியர் காலத்தால் பழமையானது. இலக்கணம் என்பதற்கு, ‘‘அழகு, ஒழுங்கு, சிறப்பியல்பு, அடையாளம், மொழியை அழகுபடுத்துதல், குறிக்கோள், விளக்கம்’’ என்று பொருள் கூறுவர். தொல்காப்பியம் தோன்றிய காலத்தில் வேறு எந்த மொழியிலும் இதுபோன்றதொரு சிறப்பான இலக்கணநூல் தோன்றவில்லை என்பதே இதன் தனிச்சிறப்பாகும். உலகில் தோன்றிய இலக்கண நூல்கள் எல்லாம் எழுத்துக்கும் சொல்லுக்கும் இலக்கணம் கூறுகின்றன. ஆனால், தொல்காப்பியம் மட்டுமே பொருளுக்கும் இலக்கணம் தருகின்றது.

### *1.7.1 காலம்:*

தொல்காப்பியம் தோன்றிய காலம் குறித்துப் பல்வேறு கருத்துக்கள் நிலவுகின்றன. எஸ்.இலக்குவனார் கி.மு.5320 - கி.பி.500க்கு இடைப்பட்டது என்கிறார். வெள்ளைவாரனார், ‘கி.மு.5320’ என்கிறார். மறைமலையடிகள், ‘5000 ஆண்டுகள் பழமையானது’ என்கிறார். புலவர் குழந்தை 4000 ஆண்டுகள் பழமையானது என்கிறார். சோமசுந்தர பாரதியார், ‘கி.மு.1000’ என்றும்; மதிவாணன், ‘கி.மு.865’ என்றும் கூறுகின்றனர். ஏ.எஸ்.ஞானசம்மந்தன், ‘கி.மு.8ம் நூற்றாண்டு’ என்கிறார்.

### தொல்காப்பியம் கூறும் நால்வர்ணப்பகுப்பு :

தொல்காப்பியம் எழுத்து, சொல், பொருள் என மூன்று அதிகாரங்களையும், இருபத்தேழு இயல்களையும் கொண்டுள்ளது. நால்வர்ணப் பகுப்புப் பற்றி பொருளதிகாரத்தில் மரபியலில் தொல்காப்பியர் கூறியுள்ளார்.

**அந்தணர்:**

நூலே கரகம் முக்கோல் மணையே
ஆயுங் காலை அந்தணர்க் குரிய[17]

அறிவுநூல், கமண்டலம், முக்கோல், மணை (இருக்கைப்பலகை) போன்றவை அந்தணர்க்கு உரியவாகும். இதனை குறுந்தொகையிலும் பாலைக்கலியிலும் காணமுடிகின்றது.

அந்தணாளர்க்கு அரசு வரைவின்றே[18]

புரோகிதன், சேனாதிபதி, அமைச்சராகிய வழி அந்தணர்க்கு அரசர் தன்மையும் உண்டு என்கிறார்.

**அரசர்:**

படையுங் கொடியுங் குடையும் முரசும்
நடைநவில் புரவியும் களிறுந் தேரும்
தாரும் முடியும் நேர்வன பிறவும்
தெரிவுகொள் செங்கோல் அரசர்க் குரிய[19]

நால்வகைப்படையும், தனக்கென ஒரு கொடியும், வெண்கொற்றக் குடையும், முரசும் குதிரையும், யானையும், தேரும், தனக்கென ஒரு மாலையும் தலையில் அணியும் முடியும், அரியணை, அரண் போன்றனவும் செங்கோல் அரசர்க்கு உரியவையாகும். மேலும்

அந்தணாளர்க் குரியவும் அரசர்க்கு
ஒன்றிய வரூஉம் பொருளுமார் உளவே[20]

அந்தணர்க்குரிய அறுவகைத் தொழிலில் ஓதுவித்தல், ஏற்றல் தவிர ஈதல், வேட்டல், வேட்பித்தல், ஓதல் என்றும் நான்கு தொழிலும் அரசர்க்குரியனவாம். ஆனால் இந்நூற்பாவில் கூறியபடி,

“பரிசில் பாடாண் திணைத் துறைக்கிழமைப் பெயர்
நெடுந்தகை செம்மல் என்றிவை பிறவும்
பொருந்தச் சொல்லுதல் அவர்க்குரித்து அன்றே”[21]

பரிசில் கடாநிலை, பரிசில் விடை போல்வன பாடாண்திணைக்கு உரிய கைக்கிளைப் பொருள் பற்றியும், கொடைத்தொழில் பற்றியும் பெயர்பெறும் ‘நெடுந்தகை’, ‘செம்மல்’ என்றாற்போல்வன பிறவும்

அரசர்க்கே உரியன. அந்தணர்க்குரியவை இல்லை.

**வணிகர்:**

வைசியன் பெறுமே வாணிக வாழ்க்கை[22]
மெய்தெரி வகையின் எண்வகை உணவின்
செய்தியும் வரையார் அப்பாலான[23]
கண்ணியுந் தாரும் எண்ணினர் ஆண்டே[24]

வைசியன் வாணிகம் செய்து பெறும் வாழ்க்கையைப் பெறுவான். எண்வகைக் கூலங்களான பயிறு, உளுந்து, கடுகு, கடலை, எள், கொள்ளு, அவரை, துவரை ஆகியவற்றை உற்பத்தி செய்தலும், விற்பனை செய்தலும் வணிகர்க்கு உரியதாகும். மேலும் அரசர்க்குரிய தலையில் சூடும் பூவும் மாலையும் வணிகர்க்கும் உண்டு.

**வேளாளர்**

வேளாண் மாந்தர்க்கு உழுதூண் அல்லது
இல்லென மொழிப பிறவகை நிகழ்ச்சி[25]

வேளாளர்க்கு உழுது உண்ணும் வாழ்க்கை அல்லது வேறுவாழ்க்கை இல்லை என்று கூறுவர் அறிஞர்.

### 1.8 சங்க இலக்கியத்தில் வர்ணம்:

தென்மதுரையைத் தலைநகராகக் கொண்டு முதற்சங்கமும், கபாடபுரத்தைத் தலைநகராகக் கொண்டு இடைச்சங்கமும், மதுரையைத் தலைநகராகக் கொண்டு கடைச்சங்கமும் இருந்தது.

வி.ஆர்.தீட்சிதர், ''சங்கத்தின் தொடக்கம் 'கி.மு.5ம்' நூற்றாண்டு'' எனவும்; இறுதிக்காலம் கி.பி.5ஆம் நூற்றாண்டு என்றும் கூறுவர்.[26]

சங்க இலக்கியத்தில் வரும் ஐந்திணைப் பாடல்களில் நால்வர்ணப்பாகுபாட்டில் வரும் எவரும் தலைமக்கள் கிடையாது. அந்தணர் வேதம் ஓதுபவராகவும், புரோகிதனாகவும், அமைச்சராகவும், தூதுவர் ஆகவும் காட்டப்பட்டுள்ளனர்.

அரசர்கள் பற்றி அதிகமாக புறநூல்களே பேசுகின்றன. சிறுபான்மை அகநூல்கள் எடுத்துரைக்கின்றன.

வணிகர்களில் பெருவணிகர், சிறுவணிகர் என்ற இருபெரும்பிரிவினரும், அவர்கள் கூட்டமாகச் சென்றதால் 'சாத்துக்கள்' என்று அழைக்கப்பட்டதையும், வேளாளர் என்பவர் உழுவித்துண்ணும் தலைவரான வேளிரையே (குறுநில மன்னர்) குறித்தது.

சங்க காலத்தில் நால்வர்ணப்பகுப்புமுறை இருந்ததென்பதை உறுதிப்படுத்தும் வகையில்

வேற்றுமை தெரிந்த நாற்பால் உள்ளும்
கீழ்ப்பால் ஒருவன் கற்பின்
மேற்பால் ஒருவனும் அவன்கட் படுமே[27]

என்று புறம் கூறுகின்றது. கல்வி கற்ற ஒருவனால் அதனை மீற முடியும் என்கிறார் அருணன்.[28]

### 1.9 தொழிற்குலங்கள்

நால்வருணப்பகுப்பில் உள்ளவர்தவிர பொதுவாக சங்க இலக்கியத்தில் தொழிற்பெயராலேயே குலப்பெயர்கள் அமைந்திருந்தன. குறிஞ்சியில் வேட்டுவரும், முல்லையில் ஆயரும் மருதத்தில் உழவரும், நெய்தலில் பரதவரும் மலையில் மறவரும் இருந்தனர்.

மேற்கண்ட ஐவகை நில மக்கள் தவிர குயவர்[29], திமிலர்[30](ஓடக்காரர்), தோணியர்[31], வலையர்[32], தச்சர்[33], கொல்லர்[34] (கலன்களை வடிப்பவன்), பொற்கொல்லன்[35] (கம்மியன்), உமணர்[36], கணிச்சியோன்[37] போன்றோரும் காழியர் (வண்ணான்), நாழிலைக் கணக்கர், கூவியர் (அப்ப வணிகர்), சங்கறுப்போர் (சாலியர்), தையற்காரர் (துன்னகாரர்), பறையர், துடியர், பாணர், புலையர், பொருநர் போன்றோரும் தொழிற்பெயரிலேயே அழைக்கப்பட்டனர்.

### 1.10 சாதி:

சாதி என்பது பிறப்பால் நிர்ணயிக்கப்படுகின்றது. இன்றைய

காலகட்டத்தில் பெற்றோரின் சாதியே அவர்களின் குழந்தைகளின் சாதியாக இருக்கின்றது. ஆனால் மனிதன் தனியாக வருகிறான். தனியாகவே போகிறான். அவன் வாழ்கின்ற காலத்தில் தனியாக வாழ முடியாது. அதனால்தான் நாகரிகம் தோன்றிய காலத்தில் மக்கள் இயல்பாகவே கூட்டமாகவும், குழுக்களாகவும் வாழத் தொடங்கினர். இவை சமூகங்களாக மாறி உலகின் எல்லா கலாசாரங்களிலும் பரவத் தொடங்கியது. இத்தகைய சமூகக் குழுக்கள் தொழில், பழக்கவழக்கங்கள், நம்பிக்கைகள் போன்ற பொதுவான அம்சங்களால் தங்களை அடையாளப்படுத்திக் கொண்டன. இதே போன்று பாரத நாட்டில் தோன்றிய சமூக அமைப்புகளின் இன்றைய வடிவமே சாதிகள் ஆகும்.[38]

### 1.10.1 சாதியம்:

ஒரு குறிப்பிட்ட சாதி ‘மேல்சாதி’ என்றும்; மற்றவை ‘கீழ்சாதி’ என்றும் எண்ணும் போக்கே ‘சாதியம்’ எனப்படும். ஆனால் ஒவ்வொரு சாதியிலும் தாம் உயர்ந்தவர்; பிறர் தாழ்ந்தவர் என்கிற எண்ணம் வேரூன்றியுள்ளது என்பதே நிதர்சனமாக காணும் உண்மை.[39]

### 1.10.2. வருணம் சாதியானது

வருணம் தொழில் அடிப்படையில் மாற்றிக் கொள்ளக்கூடிய தன்மை உடையதாக, சுதந்திர தன்மையுடையதாக இருந்தது. வேத காலத்திற்குப் பின்னரே வர்ண அமைப்பு சாதிய அமைப்பாக மாறியது.

‘வேத நெறிக்கெதிராக சில பழங்கால நூல்கள் சாதியம் பேசுகின்றன. அவை கூறும் சாதியக் கருத்துக்களை மாற்றலாம் என்று இந்துமதம் கூறுகின்றது. அவை தர்மசாஸ்திரங்கள் எனப்படும் ‘ஸ்மிருதிகள்’ ஆகும்.

### 1.10.3 சாதி உருவானது:

சாதி முறை என்பது இனரீதியில் உருவானது. கைபர் போலன் கணவாய் வழியாக படையெடுத்த ஆரியர்கள் இங்குள்ள பூர்வீக வாசிகளான திராவிடர்களை அடிமைப்படுத்தி அவர்களை சூத்திரர்களாக்கினார்கள். பிராமணர்களை ‘ஆரிய வந்தேறிகள்’ என்று ரிக்வேதமே கூறுகிறது. ‘இல்லை’ என்பதை தற்கால மரபணு ஆராய்ச்சி, ‘பிராமண சாதியினருக்கும்

நம் தேசகாடுகளில் வசிக்கும் வனவாசி மக்களுக்கும் மரபணுத்தொடர்பு இருப்பதாக நிரூபிக்கிறது’[40] மேலும் சிந்து சமவெளி அகழ்வாராய்ச்சியாளர் ஜிம் ஈப்பர், ‘வெளியிலிருந்து படையெடுப்புகள் ஏதும் நிகழ்த்தப்படவில்லை’. பண்டைய பாரத பண்பாட்டு வளர்ச்சி இந்த மண்ணிலேயே ஏற்பட்ட கலாச்சார பரிமாணமே என்கிறார்.[41]

### 1.10.4 சாதி உருவாகக் காரணம்:

ஆங்கிலேயர் இந்தியாவை ஆளத் துவங்கிய கி.பி.1700 களில் அவர்களின் நிர்வாக வசதிக்காக இம்மண்ணின் மதங்களான வைணவம், சைவம், சாகித்தம், காணபத்யம், கௌமாரம் மற்றும் சௌரம் ஆகியவற்றை ஒரே பிரிவாக வைத்து ‘ஹிந்துமதம்’ எனப் பெயரிட்டனர்.

கி.பி.1857ல் நடந்த இந்திய சுதந்திரப் போரும் அதற்கு முன்பே இந்திய மக்கள் ஒன்றிணைந்துப் போராடத் துவங்கியதும் அவர்களைப் பிரித்தாள வழி தேடிய ஆங்கிலேயர்க்கு வழி கிடைத்தது. அதன் மூலம் அவர்கள் செய்தது. கி.பி.1871 ஆம் ஆண்டு முதல் சாதிவாரி மக்கள் தொகைக் கணக்கெடுப்பைத் தொடங்கி சமுதாயத்தில் குழப்பத்தையும் சச்சரவுகளையும் ஏற்படுத்தி வைத்தனர்.

## 1.11 ஆரியத்தின் நால்வருணமும் தமிழின் நால்வகுப்பும்

ஆரியம் ‘வருணம்’ என்பதற்கு நிற அடிப்படையில் பிராமணனுக்கு வெண்ணிறமும் சத்திரியனுக்குச் செந்நிறமும் வைசியனுக்கு பொன்னிறமும் சூத்திரனுக்குக் கருநிறமும் சார்த்திக் கூறி வருணப்பாகுபாட்டை ஏற்படுத்தியது. மேலும், பார்ப்பாரையும் அந்தணரையும் ‘பிராமணர்’ என்றும்; அரசரைச் சத்திரியர் என்றும்; நிலவணிகம், நீர்வணிகம் செய்வோரை ‘வைசியர்’ என்றும்; உழவும், கைத்தொழிலும் செய்வோரை ‘வேளாளர்’ என்றும் பாகுபடுத்தியுள்ளது.

பேருலக வடிவான பரம்பொருளின் முகத்தினின்று பிராமணனும்; தோளினின்று சத்திரியனும்; தொடையினின்று வைசியனும்; பாதத்தினின்று சூத்திரனும் தோன்றினர் என்ற செய்தி தமிழரோடு ஆரிய பிராமணனுக்கு தொடர்பு ஏற்பட்டதை வெளிப்படுத்துகின்றது. வேதம் பத்தாம்

மண்டலத்தில் செருகப்பட்டது என்கிறார் ஞா.தேவநேயப் பாவாணர்.[42]

தமிழ் நால் வகுப்பு தொழிலொன்றையே அடிப்படையாகக் கொண்டது எனலாம். ஏனெனில் 'அந்தணர்' எனப்படுவோர் 'அழகிய குளிர்ந்த அருள் கொண்டவர்' என்றே கூறுகின்றது. 'அரசர்' என்பவர் ஆளும் தன்மை கொண்டவர்; 'வணிகர்' என்பார் பண்டமாற்று அல்லது வாணிகம் ஒன்றே செய்பவர்; 'வேளாளர்' என்பார் பயிர்த்தொழில் ஒன்றே செய்பவர் என்கிறது.

ஆரிய வருணம் பிராமணனே முதன்மையானவன். அவரவர்க்குரிய தொழிலை அவரவர் மட்டுமே செய்ய வேண்டும் என்கிறது. ஆனால் தமிழரின் நால்வகுப்பில் 'கீழ் உள்ளவன் கற்றறிந்த அறிஞன் எனில் அவன் சொல்கேட்டு மேல் உள்ளவனும் நடப்பான்' என்று புறம் 183ம் பாடல் கூறுவதிலிருந்து கல்வி எல்லோருக்கும் பொது என்கிறது. திறமையும் விருப்பமும் உடையவன் எத்தொழிலையும் செய்யலாம் என்கிறது.

**தொகுப்புரை:**

'வருணம்' என்பதற்கு விருப்பத்தேர்வு என்றே பொருள் கூறுகின்றது. அதாவது தம் விருப்பத்திற்கேற்ப தொழிலைத் தேர்ந்தெடுத்து அதைச் சிறப்புறச் செய்வதேயாகும். வேதகாலத்திற்கு முந்தைய காலத்தில் அவ்வாறே இருந்திருக்கின்றது. சாபர மகரிஷி வேடரின் மகன். அதேபோல் வேதமந்திரங்களை ஞானக்கண்ணால் கண்ட 'கவாச மகரிஷி' தாசியின் மகன் ஆவார். வேத காலத்தில் ரிஷிகளால் வருணம் நிர்ணயிக்கப்பட்டது. கீதையும் வருணம் என்பது செயலடிப்படையிலானது. பிறப்பை அடிப்படையாகக் கொண்டதில்லை என்கிறது.

வேத காலத்தில் வாழ்ந்த மனு என்பவர் வகுத்து கொடுத்த சட்டதிட்ட நூலே நால்வருணத்தார் பற்றி முதன் முதலில் கூறுகின்றது. தொல்காப்பியம் நால்வகுப்பினரின் தொழில் பற்றியே குறிப்பிடுகின்றது. சங்க இலக்கியம் நால்வகுப்பினரில் எவரையும் உயர்த்தியோ தாழ்த்தியோ குறிப்பிடவில்லை. நால்வகுப்பினரும் நாட்டிற்குத் தேவை என்றே கூறுகின்றது.

# இயல் - 2

# அந்தணர்

***அந்தணர்:***

*பழந்தமிழ் சமுதாயத்தில் பெரும்பிரிவினராகிய நால்வகை மாந்தரில் அந்தணர் என்பார் முதன்மை பெற்று விளங்குகின்றார். மனித சமுதாயத்துக்கும் மன்னுயிர்கட்கும் தம் வாழ்க்கையை அர்ப்பணித்து வாழ்ந்தவர்கள் அந்தணர்கள் என்பார் பி.சேதுராமன்.*

## *2.1 அந்தணர் பெயர்க்காரணம்:*

*அந்தண ரென்போர் அறவோர்மற் றெவ்வுயிர்க்கும்*
*செந்தண்மை பூண்டொழுக லான்.*

*இதில் வள்ளுவர் அந்தணர் என்போர் அறவோர் எவ்வுயிர்க்கும் இரக்கம் காட்டும் பெருந்தன்மையுடையார் என்பதைக் குறிப்பிடு கின்றார். சரியானது யாது, தவறு யாது என்று வேறுபாடு காணும் சட்டத்தின் அறம், நியாய உணர்ச்சி, செம்மை, இளகிய உள்ளம், தாராள மனப்பான்மை ஆகியவை பெற்ற அறிவுரையாளர்கள் 'அந்தணர்' எனப்பட்டனர்.*[2]

*உலகப்பற்றை முற்றத்துறந்து எல்லாவுயிர்களிடத்தும் அருள் பூண்டமையால் 'அந்தணர்' எனப்பட்டனர்.*

## *2.2 அந்தணர் என்பதன் வேறு பெயர்கள்:*

*கற்பித்தல் தொழிலைச்செய்து இல்லற வாழ்வு வாழ்கின்றவர்கள் 'பார்ப்பார்' என்றும். துறவற வாழ்வு மேற்கொள்பவர்கள் 'அந்தணர்' என்று இருபாற்பட்டனர் என்கிறார் ஞா.தேவநேயப்பாவாணர்.*[3]

*பார்ப்பார், இருபிறப்பாளர், மறைகாப்பாளர், ஆன்றோர், சான்றோர், வேதியர் என்று பலபெயர்கள் சங்க இலக்கியத்தில் இடம் பெற்றுள்ளன.*

*அந்தணன் 'நான்மறை முதல்வர்' என்றும் அடைக்கப்படுகின்றனர்.*

அந்தணன் என்பதற்கு ‘அழகிய தட்பமுடையவன், முனிவன், சிவன், பிரமன்’ என்று செந்தமிழ் அகராதி பொருள் கூறுகிறது.[5]

### 2.3 கோத்திரம்

ஆரம்பத்தில் ‘கோத்திரம்’ என்ற சொல் ஆடுமாடுகளை வளர்த்து பாதுகாக்கும் இடத்தையே குறித்தது. பின் ஆடு, மாடுகள் வளர்க்கும் கூட்டத்தைக் குறித்தது. இயல்பாகவே கூட்டமாக வாழ்ந்த இவர்கள் பழக்கவழக்கம், பண்பாடு ஆகியவற்றில் ஒத்திருந்தார்கள். இவர்களில் சிலர் துறவிகளாகவும், சிலர் ஒன்றிற்கு மேற்பட்ட மனைவியரையும் கொண்டிருந்தனர். சத்திரிய குலத்தைச் சேர்ந்த விசுவாமித்திரர் தம் வர்ணத்தை மாற்றிக் கொண்டு பிரம்ம ஞானம் பெற்று கௌசிக முனிவரானார். பொதுவாக அனைத்து கோத்திரங்களுமே புகழ்பெற்றி ரிசிகளின் பெயர்களையே கொண்டு விளங்கியது.

50க்கு மேற்பட்ட கோத்திரங்கள் இருந்தன அவற்றுள் பரத்வாச, பார்கவ, பிர்கு, சந்திரதிதேர, ஜமதக்னி, ஸ்ரீவத்ச, உபமன்யா, வசிஷ்ட்ரா, விசுவாமித்ரா, விஸ்ரவா என சில கோத்திரங்களை மட்டும் குறிப்பிட்டு கூறலாம். இதில் பிர்கு, ஆங்கிரசா கோத்திரத்தைச் சேர்ந்தவர்கள் திருமணம் செய்து கொள்ள மாட்டார்கள்.[6]

### 2.4 அந்தணர் என்பதன் பொருள்

அந்தணர் = அம்+தண்மை+ அர் என்பதில் அம் என்றால் ‘நல்ல தூய்மை’ என்றும்; ‘தண்மை’ என்றால் இனிமையான, குளிரான என்றும் பொரும், மேலும் இதற்கு ‘அழகிய குளிர்ந்த அருளையுடையவன்’ எனப் பொருள் கூறுகிறது[7].

அந்தணர் என்பதற்கு ‘இறைபணி நின்ற மெய்க்காட்சியாளர்’[8] என்றும்; ‘அருள் நிரம்பிய மேலோர்’[9] என்றும்; ‘சான்றோர்’[10] என்றும் பொருள் கூறப்பட்டுள்ளது. மேலும் வேதாந்தத்தை நெருங்கியவர் என்றும் பொருளில் ‘அந்தணர்’ எனப்பட்டதாக நச்சினார்க்கினியர் கூறுவார்.[11] ‘செந்தண்மை பூண்பொழுகுவாரே’ அந்தணர் என்பார் வள்ளுவர்.

அந்தணர் என்பதற்கு 'விழுத்தவ முதல்வர்'[12] என்றும்; 'பார்ப்பார்'[13] என்றும்; 'அறவர்'[14] என்றும்; 'இருபிறப்பாளர்' என்றும் பெயர்கள் வழங்கப்படுவதை பரிபாடல் கூறுகின்றது.

### 2.5 அந்தணரின் பெருமை:

அந்தணர்க்கு நாட்டையாளும் அரசர் அளித்த மரியாதையிலிருந்து அவர்களின் பெருமையை அறியலாம். இறைவனுக்கு நிகராக கருதப்பட்டனர் என்பதனை

இறைஞ்சுக பெரும நின்சென்னி சிறந்த
நான்மறை முனிவ ரேந்துகை எதிரே[15]

பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமி பெருவழுதியை வாழ்த்தும்போது 'சிறப்புடைய நான்கு வேதத்தினையுடைய அந்தணர் நின்னை 'நீ வாழ்க' என வாழ்த்தும் போது நினது முடி தாழ்ந்து வணங்குக' என்று கூறுவதிலிருந்து அறிய முடிகின்றது. இவ்வாறு கூறக்காரணம் இறைவனுக்கு அடுத்த நிலையில் தூய உள்ளம் உடையவர்கள் 'அந்தணர்' என்பதை வெளிப்படுத்துகின்றது.

### 2.6 அந்தணரின் வாய்மொழி புலமை

நான்மறையான வேதத்திற்கு பொருளிலக்கணம் இன்மையால் வேதமோதும்போது அவற்றின் பொருளை புலப்படுத்துவதைவிட, நல்ல ஓசைப்பாட்டின்வழி அதன் பெருமையை விளக்குவதன் மூலம் அந்தணர்கள் வாய்மொழி புலமை பெற்றவர்களே என்று கன்றம்பூதனார் கூறுவதிலிருந்து அறிய முடிகின்றது.

ஒருவரின் சிறப்பை அவர்க்கு அளிக்கப்படும் மரியாதையிலிருந்து அறியலாம். நல்லியக் கோடனின் அரண்மனை வாயில் பொருநர், புலவர் மட்டுமின்றி உணர்தற்கரிய மெய்ந்நூலை இடையறாது ஓதும் அந்தணர்க்கும் திறந்தே இருக்கும் என்பதை

பொருநர்க் காயினும் புலவர்க் காயினும்
அருமறை நாவின் அந்தணர்க் காயினும்

கடவுள் மால்வரை கண்டுவிடுத் தன்ன
அடையா வாயில்[16] என்று கூறுகின்றது.

## 2.7 அந்தணரின் பேறு

கிடைத்தற்கரிய வாய்ப்பு 'பேறு' எனப்படும். சிவபெருமானின் கண்ணி மற்றும் மாலையான கொன்றையையும், ஊர்தியும் கொடியுமான ஆனேற்றையும் கறைமிடறு, பெண்ணுறுதிறன், தலையிற்சூடிய பிறை ஆகியவற்றை புகழ்ந்து கூறும் வாய்ப்பு அந்தணர்க்கு கிடைத்திருப்பதால் அவர்கள் பேறு பெற்றவர்கள் என்று புறநானூற்றில் பெருந்தேவனார் கூறுயுள்ளார்.[17]

## 2.8 அந்தணரின் அறம்

எவ்வுயிர்க்கும் தீங்கு செய்யாதவர்கள் அந்தணர்கள் அதுவே அவர்களது அறத்திற்கு சான்றாகும். இதனைப் பரிபாடல்

விறன்மிகு விழுச்சீர் அந்தணன் காக்கும்
அறனும்[18] என்கிறது.

## 2.9 அந்தணரின் தோற்றம்:

ஒருவரைப் பார்த்தவுடனேயே அவர் எச்சமயத்தவர், எந்நாட்டைச் சேர்ந்தவர் என்பதை வெளிப்படுத்துவது புறத்தோற்றம் ஆகும். அகத்தோற்றம் அவரது ஒழுக்கத்தைக் கூறும். புறத்தோற்றமே 'ஒருவருடைய, தோற்றமாக' எண்ணப்படுகின்றது.

அந்தணரின் தோற்றம் பற்றித் தொல்காப்பியர்,

'நூலே கரகம் முக்கோல் மணையே
ஆயுங் காலை அந்தணர்க் குரிய'[19]

என்று கூறுவதிலிருந்து 'நூல்' என்பது ஓதும் அல்லது ஓதப்படும் நூல், கரகம், முக்கோல், மணை ஆகியவற்றை அந்தணர்க்குரியவையாக கூறலாம். இதைப்பற்றிய சங்க இலக்கியப் பதிவுகளாவன.

வெயிலுக்காக கையில் ஓர் குடை; கையில் ஓர் உறி அதில் ஓர்

*கமண்டலம்; தோளில் புகழ்பெற்ற முக்கோல்; மனதில் இறைவனின் சிந்தனை என பாலை வழியில் நடந்து செல்லும் அந்தணர்களை பாலைக்கலி கூறுகின்றது.*[20] மேலும் பார்ப்பனர்த் தோற்றத்தை, 'சிவந்த பூவினையுடைய முருக்க மரத்தினது நல்லபட்டையை நீக்கியதன் தண்டோடுப்பிடித்த தாழ்கின்ற கரகத்தை உடையவர்கள்; விரதவுணவை உண்பவர்கள்; அவர்களது வாய்மொழி இலக்கியமாக வேதம் உள்ளது' என்பதனையும் ஏனாதித் நெடுங்கண்ணன்[21] வெளிப்படுத்துகின்றார்.

### 2.9.1 அந்தணரின் தோற்றமும் நற்குணமும்:

*சுட்டெரிக்கும் வெயிலைத் தாங்கிக் கொள்ள ஓர் குடை; தோளில் தண்டின் முனையிலே தொங்கும் உறியும் அதில் ஓர் பிச்சைப்பாத்திரம்; புகழ்பெற்ற முக்கோலுடன் இறைவனன்றி வேறு நினைவின்றி பல தலங்களைச் சென்று காணும் ஆசையால் பாலை வழியைக் கடந்து செல்லுகின்றனர் அவர்களைப் பார்த்து அந்தணீர்! என் மகன் இன்னொருத்தியின் மகளுடன் செல்வதைக் கண்டீர்களா! என்று கேட்பதிலிருந்து அவர்கள் உண்மையைக் கூறுபவர்கள் என்பதை அறியலாம். மேலும் அக்கேள்விக்கு அவ்வந்தணர் "ஆண்மையின் அழகெல்லாம் சேர்ந்து உருவான இளைஞனுடன் அரிதான பாலை வழி செல்லத் துணிந்து விட்டாள் மாட்சிமை மிக்க மடவாளின் தாயே! நீர் மன அமைதியுடன் வீடு திரும்பிச் செல்வீராக" என்று கூறுவதிலிருந்து அந்தணர் வெளியில் செல்வதை வழக்கமாகக் கொண்டிருப்பதையும் அவர்கள் முகம்பார்த்துக் குறிப்பு சொல்லும் திறமை மிக்கவராகவும் இருப்பதைப் பெருங்கடுங்கோ பாலைக்கலியில் விளக்கி உள்ளார்'*[22]

### 2.10 அந்தணரின் மேன்மை

*அறம்புரி யந்தணர் வழிமொழிந் தொழுகி*
*ஞால நின்வழி யொழுகப் பாடல்சான்று*
*நாடுடன் விளங்கு நாடா நல்லிசைத்*
*திருந்திய வியன்மொழித் திருந்திழை கணவ*[23]

*எனும் பதிற்றுப்பத்து அடிகள் அந்தணர் வழியில் நடக்கும் அரசர், உலகம்*

முழுவதும் தம் வழிப்பட்டு நடக்கும் படியான பெரும் புகழை அடைவர் எனக் கூறுதல் வழி அந்தணரின் மேன்மையையும் துணையையும் அறிய முடிகின்றது.

### 2.10.1 அந்தணரின் சிறப்பு:

ஒருவரின் சிறப்பு அவர்களின் கல்வியறிவு ஒழுக்கம், கேள்வியறிவு, நாவன்மை ஆகியவற்றைக் கொண்டே வெளிப்படும். அதற்கேற்ப அவர்களுக்கு மரியாதையும் கிடைக்கும். இங்கு அந்தணர் வகித்த இடம், நாநயம் ஆகியவற்றைக் காணலாம்.

ஆன்ற கேள்வி அடங்கிய கொள்கை
நான்மறை முதல்வர் சுற்றமாக[24]

என்றவர்கள் மூலம் சிறந்த கேள்வியறிவினையும் ஐம்புலனுமடங்கிய கொள்கையினையும் நான்கு வேதங்களை கற்ற அந்தணரைச் சுற்றமாக உடையவன் நெடுஞ்செழியன் என்று மாங்குடி மருதனார் கூறுவதன் மூலம் கேள்விச் செல்வம்தான் எல்லாவற்றிற்கும் முதன்மையானது என்பதை அரசர்கள் நன்கு உணர்ந்திருந்ததை அறிய முடிகின்றது. அதனால்தான், அவற்றுள் சிறந்து விளங்கிய அந்தணரை சுற்றமாக கொண்டிருந்திருக்கின்றனர். மேலும்

நிலையின் திரியாது அடங்கியான் தோற்றம்
மலையினும் மாணப் பெரிது[25]

என்ற குறளுக்கேற்ப பணிவுடையராக ஒழுகும் சிறந்த பண்புடையவர்கள் அந்தணர்கள் என்பதை அறிந்த அரசர்கள் அவர்களை சற்றமாக வைத்திருந்திருக்கின்றனர் மேலும் சுற்றம் என்பதைப் பற்றி,

பொதுநோக்கான் வேந்தன் வரிசையா நோக்கின்
அதுநோக்கி வாழ்வார் பலர்[26]

என்ற வள்ளுவர் வாக்கிற்கிணங்க அரசன் பொதுவாக நோக்காமல் அவரவர் சிறப்பிற்கேற்றவாறு நோக்கினால் அவனைச் சுற்றி வாழ்கின்றவர் பலர் என்று கூறுவதை மெய்ப்பிக்கும் வகையிலும் நெடுஞ்செழியனின் செயல் உள்ளது. மேலும் ‘சுற்றம்’ என்பதற்கு அமைச்சர்.

உரும்பில் சுற்றமோ டிருந்தோற் குறுகி[27]

பெரும் 447

என்ற கடியலூர் உருத்திரங்கண்ணனர் கூறுவதிலிருந்து அந்தணர் 'அமைச்சராக' இருந்திருக்கலாம் என்று கருத இடமுண்டு.

### 1.10.2 அந்தணரின் நாநயம்

ஆர்புனைத் தெரியனின் முன்னோ ரெல்லாம்
பார்ப்பார் நோவன செய்யலர்[28]

அந்தணர் எவ்வுயிர்க்கும் தீங்கு செய்ய நினையாதது போல் அவர்கட்கும் யாரும் தீங்கு நினைக்கக்கூடாது என்பதை அந்தணரான தாயப்பல்கண்ணனார், 'ஆத்தியாற் புனையப்பட்ட தாரையுடைய நினக்கு முன்னுள்ளோர் யாவரும் பார்ப்பார் வெறுக்கத்தகுவன செய்தவர் யாருமிலர்' என்று நயமாக சோழன் மாவளத்தானிடம் அவன் தவற்றை அவன் குலப்பெருமை கூறி எடுத்துரைக்கும் நாவன்மை அவர்கட்கேயுரியது என்பதைக் காட்டுகின்றது. மேலும் இதனை உறுதிப்படுத்தும் வகையில் மனிதனை திருத்துவது மட்டுமல்ல ; இறைவனின்ன பெருமைகளை எடுத்துரைக்கும் வேதத்தை எடுத்தோதும் பண்பும் அவர்கட்கேயுரியது என்பதை

நாவல் அந்தணர் அருமறைப் பொருளே[29]

என்ற அடியும் புலப்படுத்துகின்றது. மேலும்

நான்மறை விரித்து நல்லிசை விளக்கும்
வாய்மொழிப் புலவீர்[30]

என்ற அடியின் மூலமும் அறியலாம்.

## 2.11 பழக்கவழக்கங்கள்

### 2.11.1 அந்தணரின் நடை

ஓதல், தூதின் காரணமாக வெளிநாடு செல்லும் அந்தணர்கள் எவ்வுயிர்க்கும் தீங்குழைக்கக் கூடாது என்பதாலென்னவோ மெல்லிய அசைந்து செல்லும் நடையினை உடையவர்[31] என்று ஓதலாந்தையார் கூறுகின்றார்.

### *2.11.2 தூய்மை:*

*கற்றோய்த் துடுத்தப் படிவப் பார்ப்பான்*

*முக்கோ வசைநிலை கடுப்ப*[32]

*இவ்வடிகள் காவிக்கல்லின் சாயம் தோய்க்கப்பட்ட உடையினை உடுத்துபவர்கள் என்பதையும்; தவவேடமும், விரதவுணவும் உண்பவன் என்பதையும்; தூய்மை கருதி தன் உடையினை தன் முக்கோலிலே காய வைப்பதையும் தெளிவுறுத்துகின்றது. மேலும் இது உள்ளத்தூய்மை, உடைத்தூய்மை என இரண்டையும் புலப்படுத்துகின்றது.*

### *2.11.3 தியானம்:*

*மனதிற்கு அமைதியும் நிம்மதியும் தரும் தியானம். அந்தணர்கள் மந்திரங்களை நினைந்தவராகத் தியானம் செய்வது*[33] *நெய்தற்கலியில் கூறப்பட்டுள்ளது. அத்தியானம் கடற்கரையில் கண்மூடி அமர்ந்திருக்கும் நாரைக்கு உவமை கூறப்பட்டுள்ளது.*

### *2.11.4 இனிய காலைப்பொழுது*

*மதுரை நகரில் இனிய காலைப்பொழுது அந்தணரின் வேதப்பாடலோடு துவங்குவதை மதுரைக் காஞ்சி எடுத்துரைக்கின்றது.*[34]

### *2.11.5 அந்தணச் சிறுவனின் குடுமி*

*அந்தணச் சிறுவர்கள் முன்குடுமி வைத்துக்கொள்ளும் படிக்கமிருந்ததைக் கபிலர் கூறுகின்றார்.*[35]

### *2.11.6 சங்க காலத் திருமணமும் அந்தணரும்*

#### *மரபுத் திருமணம்:*

*ரோகிணியுடன் சந்திரன் கூடிய நல்ல நாளில் வீட்டில் விளக்கேற்றி மாலைகளைக் கட்டித் தோரணம் போல் தொங்க விடுவர். செறிந்த இருள் நீங்கிய அதிகாலையில் முதுபெண்டிர் புதிய பானைகளைத்தர, அதைப் பெற்றுக் கொண்ட புதல்வரைப் பெற்றெடுத்த (புதல்வியரை அல்ல) மங்கலப் பெண்டிர் நால்வர் கூடி, ‘கற்பு நிலை வழுவாமல் பெற்றோர் விரும்பும் துணையாகுக’ என்று வாழ்த்தி நெல்லும் மலரும் இடப்பட்ட நீரைத்*

தலையில் சொரிவர். இதற்கு வதுவை மணம் அல்லது குளிப்பாட்டு கல்யாணம் என்பார். நச்சினார்க்கினியர் இம்மரபுத்திருமணத்திற்கு மாறாக

வரையிழி யருவியிற் றோன்று நாடன்
தீதில் நெஞ்சத்துக் கிளவி நம்வயின்
வந்தன்று வாழி தோழி நாமும்
நெய்பெய் தீயி னெதிர் கொண்டு
தான் மணந் தனைய மெனவிடுத்த[36]

இது நெய்யூற்றி மூட்டப்பட்ட தீயின் முன்னர் நடக்கும் திருமணத்தைக் குறுந்தொகை குறிப்பிட்டுள்ளது.

மேலும் அந்தணர் கொடுக்கக் கொள்ளும் திருமணத்தைப் பற்றிக் கபிலர் இருபாடல்களில் குறிப்பிட்டுள்ளார். முதலில் இருங்கோவேளிடம் அழைத்துச் செல்கின்றார். இருங்கோவேள் பதினெண்குடி வேளிருள் ஒருவன். தமிழகத்தின் வடபகுதியாகிய மைசூர் நாடு வரை ஆண்டான் வேள் பதிணென்வேளிருள் நாற்பத் தொன்பதாவது தலைமுறையினன் இவனது குடி முதல்வன் 'புலி கடிமால்' என அழைக்கப்படுகின்றான். இவ்வேளிடம் பாரி மகளிரைக் கொணர்ந்த கபிலர்

அந்தணன் புலவன் கொண்டுவந் தனனே
.........      .......      .......      .......
யான்தர விவரைக் கொண்மதி[37]

என்று இருங்கோ வேளைப் பார்த்து நான் ஒரு அந்தணன் மேலும் புலவன்; இவர்கள் முல்லைக்குத் தேரீந்த, நற்புகழ் நிறுவிய பாரியின் மகளிர். யான் பாரிக்குத் தோழன் எனவே இவர்களுக்கு தந்தையாகும். அந்தணனும் மகட்கொடை தேர்தற்குரியன் என்பதைத் தெளிவுப்படுத்துகின்றதை கபிலர் கூறுகின்றார். இது அந்தணன் கொடுக்கக் கொள்ளும் திருமண முறைக்குச் சான்றாகும்.

**தற்காலத் திருமணம்**

தற்போதைய திருமணமான தீவலம் வந்து திருமணம் செய்வதைச் சங்க காலத்திலேயே நடந்ததாக கலித்தொகையில் காமக்கிழத்தியர் கூற்றில் அமைந்துள்ள மருதக்கலி பாடலில் மருதனிளநாகனார்.

*காதல்கொள் வதுவை நாள் கலிங்கத்துள் ஒடுங்கி*

*மாதர்கொள் மான் நோக்கின் மடந்தை தன் துணையாக*

*ஓதுடை அந்தணன் எரிவலம் செய்வான்*[38]

*என்று காதலரிருவரும் விரும்பும் திருமண நாளில் ஆடைக்குள் ஒடுங்கிய வளாகக் காதல் கொண்ட மருண்ட மான் நோக்கினையுடைய மடந்தையும் உடன்வருகின்றாள். ஒத்தினையுடைய அந்தணன் இருவரையும் எரியை வலம் செய்யுமாறு சொல்லக் காதலனும், தலை கவிழ்ந்த காதலியும் அதனை வலம் வருவர் என்று கூறுவதிலிருந்து காதலர்கள் அந்தணர் முன் தீவலம் வந்து திருமணம் செய்து கொள்ளும் வழக்கம் இருந்ததை அறிய முடிகின்றது.*

### *2.12 அந்தணரின் உணவுப் பழக்கம்:*

#### *உணவு முறை:*

*மாதுளங்காயை மிளகுப்பொடியும் கருவேப்பிலையும் இட்டு பசுவெண்ணெயில் பொரித்து உண்பர். மேலும் பெண்கள் விருந்தினர்க்கு மாவடு ஊறுகாயோடு உணவு பரிமாறுவர் என்பதையும்*

*சேதா நறுமோர் வெண்ணெயின் மாதுளத்*

*துருப்புறு பசுங்காய்ப் போழொடு கறிகலந்து*

*கஞ்சக நறுமுறி அளைஇப் பைந்துணர்*

*நெடுமரக் கொக்கி னறுவடி விதிர்த்த*

*தகைமாண் காடியின் வகைபடப் பெறுகுவீர்*[39]

*என்று பெரும்பாணாற்றுப் படை எடுத்துரைக்கின்றது. மேலும், மறைகாப்பாளர்கள் 'இராசான்னம்'*[40] *என்ற ஒரு வகை நெல்லரிசியை உணவாக உட்கொண்டனர் என்பதை இந்நூல் எடுத்துரைக்கின்றது.*

*'வற்றல்' என்பது அரிசி, கிழங்கு ஆகியவற்றின் மாவினையரைத்து பிழிந்து காயவைத்தும் மற்றும் காய்கறிகளான வெண்டைக்காய் கொத்தவரங்காய், சுண்டைக்காய் போன்ற பலவற்றினை உப்பும் மோருமிட்டு வெயிலில் காய வைத்தும் அதனை நெய்யிலோ, எண்ணெயிலோ பொரித்து உண்பர். இது உலர்ந்த வற்றல்களைக் காயும் நெய்யிற் பொரித்தல் அவர்கள் நன்கு அறிந்த ஓர் உணவுவகை என்பதை நெய் துள்ளிய வறை முகக்கவும்*[41] *என்று புறம் கூறுகின்றது.*

### 2.13 அந்தணர் இல்லத்தின் சிறப்பு

வீடு பசிய சாணத்தால் மெழுகப்பட்டிருந்தது. அவ்வீட்டின் முன் சிறிய கால்களை உடைய பந்தல், போடப்பட்டிருந்தது அதனுள், நன்றாக பாலுண்ட செழுங்கன்று பிணிக்கப்பட்டிருந்தது.

பார்ப்பாரிற் கோழியும் நாயும் புகலின்னா[42]

என்ற கபிலரின் வாய்மொழிக்கேற்ப கோழியும் நாயும் அவ்வில்லத்தில் இல்லை. வேதத்தின் ஓசையைக் கேட்டு திரும்ப சொல்லும் கிளிகள் வளர்க்கப்பட்டன[43] என்ற செய்தியைப் பெரும்பாணாற்றுப்படை புலப்படுத்துகின்றது.

### 2.13.1 அந்தணர் குடியிருப்பு

ஊரின் சிறப்பிற்கு உறுதுணையாக இருப்பதுவும் அந்தணர் குடியிருப்பது என்ற பொருளில்

அந்தணர் அருகா அருங்கடி வியனகர்[44]

என்ற அடியானது 'அந்தணரான சான்றோர்கள் நிரம்பியிருக்கின்றனர்' என்று ஆமூரின் சிறப்பிலொன்றாக நல்லூர் நத்தத்தனார் கூறுகின்றார். இதிலிருந்து 'ஊருக்கழகு குளமும் கோவிலும்' என்பது முதுமொழி அதில் 'குளம்' வளத்தைக் கொடுக்கின்றது. 'கோவில்' மக்களுக்கு மன அமைதியைக் கொடுக்கிறது. இவற்றுடன் பண்புடைய மனிதர்க்கழகு சான்றோர் நிறைந்திருப்பது. சங்க காலத்தில் 'ஓதுதல்' அதாவது கற்பித்தல் தொழிலை அந்தணரே செய்ததனால் அவர்கள் நிறைந்திருப்பது ஊருக்குப் பெருமையாக கருதப்பட்டதை அறிய முடிகின்றது.

### 2.14 அந்தணரின் பள்ளி

சிறந்த வேதங்களை பொருள் உணர்ந்து தெளிவாகப் பாடியும்; ஓதியதற்குத் தக்கவாறு ஒழுகியும் அறம், பொருள், இன்பம், வீடு இவற்றுள் நான்காவதை இவ்வுலகத்திலே பெற்றவராகவும்; அறநெறியிலிருந்து தவறாதவராகவும்; எவ்வுயிரிடத்தும் அன்பு செலுத்தும் பெரியோராய் வாழும் அந்தணர் எப்போதும் மகிழ்வுடையராய் தங்கி இருக்கும் அந்தணர் பள்ளியினது தோற்றமானது.

"குன்று குயின்றன்ன அந்தணர் பள்ளியும்"[45]

மலையை உள்ளும் வெளியும் குடைந்தாற் போன்று உள்ளது என்று மாங்குடி மருதனார் கூறியுள்ளார். இது அந்தணர் தமக்கொன்று பள்ளியை நிறுவி ஓதலை முறைப்படி செய்திருப்பதைக் காட்டுகின்றது. இச்செய்தி, "பரம்பரை வைதிகக் கல்வியை அந்தணர்கள் போற்றியிருத்தல் வேண்டும்"[46] என்ற க.நா.சுப்பிரமணியனின் கருத்தை மெய்ப்பிக்கின்றது.

## 2.14.1 அந்தணரின் கல்வியறிவு:

கல்வியறிவு பெற்ற அந்தணர்கள் அமைச்சர்களாக இருந்ததை சங்க இலக்கியத்தில் அறிய முடியவில்லை. ஆனால் அந்தணர் அறிவுரைக்கு அரசர் அடங்கி நடக்க வேண்டும்[47] என்ற செய்தி அவர்களின் கல்வியறிவையும் அவர்களின் அறிவுத் திறனையும் காட்டுகின்றது. மேலும் சிலப்பதிகாரம் "பிராம்மணர்கள் மட்டுமே அரசனது புரோகிதர்களாக இருந்தனர்"[48] புரோகிதனை ஆசான் அல்லது கரும வினைஞன் என்றும் அழைக்கப்பட்டதைக் கூறுகின்றது. இதிலிருந்து அவர்கள் 'அரசர்களுக்கும்' ஆசானாக இருந்ததை அறிய முடிகின்றது.

## 2.15 அந்தணரின் தூய்மையும் கலக்கமும்

வையையாறு பெருக்கெடுத்தோடி வருகின்றது புறஞ்சேரியில் செல்லுதற்கரிய நிலையினராக மெலியோர் உள்ளே புக முடியவில்லை. ஆனால் வலியவர் புதுநீரில் புகுந்து விளையாடி நீராடியதனாலே; பூவந்தி, திரிபலை, புணர் கருங்காலி, நாவல் முதலிய துவர்களும்; சந்தனம், அகில் போன்வற்றின் குழம்பும்; நறுமண எண்ணெயும்; சூடிய பூக்களும் என பலவும் கலந்து வையை ஓடி வருவதனால் அது தூய்மையிழந்ததென அந்தணர் எண்ணினர். மேலும் வையையாறு பல்வேறு மணங்கமழ; மகளிரும் மைந்தரும் பூசின மணப்பொருள்களைக் கழுவின கலங்கிய நிரைக் கண்டதால் அது மாறுபட்டதென எண்ணி, மருட்சியடைந்தனர். அதனால் அந்நீரில் நீராடவுமில்லை; வாய்பூசுதலும் செய்யாதராய் கலக்கம் எய்தியதாக நல்லந்துவனார் விளக்கியுள்ளார்.[49] இதிலிருந்து அந்தணர்கள் பொதுக் குளங்களிலும், ஆறுகளிலும் நீராடியதை அறிய முடிகின்றது. ஆனால் எல்லாவகையான மக்களுடன் கலந்து நீராடவில்லை என்பதை அறிய

முடிகின்றது.

### 2.16 அந்தண மகளிரின் கற்பு:

''உயிரினும் சிறந்தன்று நாணே நாணினும்
செயிரீதீர் காட்சிக் கற்புச் சிறந்தன்று''[50]

என்ற தொல்காப்பியர் வாக்கிற்கேற்பவும் மேலும் கற்புடைய மகளிரின்

'அருந்ததி அனைய கற்பின்' [51]

என்று கற்பிற்கு அருந்தி உவமையாகக் கூறப்பட்டுள்ளதைப் போன்று பெரும்பாணாற்றுப்படையிலும்

''பெருநல் வானத்து வடவயின் விளங்கும்
சிறுமீன் புரையுங் கற்பி னறுநுதல்''[52]

என்று அதாவது பார்ப்பனி பெரிய நன்றாகிய வானத்தின்கண் வடதிசையில் நின்று ஒளிரும் அருந்ததியை ஒக்கும் கற்பினையுடையவள் ஒளிமிகுந்த நெற்றியினையுடையவள் என்று அந்தண மகளிரின் கற்பை ஆசிரியர் சிறப்பித்துக் கூறுகின்றார்.

### 2.16.1 அந்தண மகளிரின் திறமை

மழைக்காலத்திற்கு வேண்டிய உணவை கோடைக்காலத்திலேயே சேமிக்கும் எறும்பைப்போல அவர்கள் மாவடு ஊறுகாயோடு உணவைப் பரிமாறினர்[53] என்ற செய்தியும்: வற்றல்களை காயும் நெய்யில் பொரித்து உண்டன என்ற செய்தியும் பார்ப்பன மகளிர் சமையல் செய்வதில் சமர்த்தர் என்பதை நிரூபிக்கின்றது. ஏனென்றால் மாங்காய், மாம்பழம் என்றாலே அனைவர்க்கும் பிடித்தமானதொன்று, 'மாதா ஊட்டாத உணவை மாங்காய் ஊட்டும்' என்பார்கள் முன்னோர்கள். எனவே மாங்காயும் ஊறுவகாயும் வற்றல் வகையும் அவர்களின் திறமையை வெளிப்படுத்துகின்றது.

### 2.16.2 அந்தணர் வழிபாடும், மகளிர் நோன்பும்

பின்பனிப்பருவமாகிய பௌர்ணமி திருவாதிரை நாளில் விரிந்த மெய்ந்நூல்களை உணர்ந்த அறவோர் அத்திருவாதிரைத் தெய்வமாகிய சிவபிரானுக்கு திருவிழாவைத் தொடங்கினர். முப்புரியாகிய பூணூலை அணிந்த பார்ப்பனர் அந்த விழாவின் போது இறைவனுக்குரிய

பலிப்பொருள் பெய்த பொற்கலங்களை ஏந்தி நின்றனர் வளையலை அணிந்த கன்னிப்பருவ மகளிர் வையையாற்றிலே பனியையுடைய அவ்வைகறைப் பொழுதிலே நீராடினர். அவர்கள் அம்பா ஆடலை நன்கு அறிந்திருந்தனர். அக்கன்னி மகளிர் சடங்கறிந்த முதிய பார்ப்பனி மார் நோன்பு செய்யும் முறைமையினை அறிவிக்க அவர்களும் அக்குளிரில் ஈர ஆடையுடன் அம்பா ஆடலையாடி "இந்நிலவுலகம் ஞாயிற்றின் வெப்பத்தால் மென் மேலும் வெப்பமுடையதாக ஆகாமல் மழையாலே குளிர்வதாக"[54] என்று வேண்டிய நோன்பு செய்தனர். அப்போது வீசிய குளிர்ந்த வாடைக்காற்றானது அம்மகளிர் மேல் பட்டு மேலும் குளிர்விக்க அதனை, 'கன்னியர் நோன்பு, அம்பா ஆடல்; முதிய பார்ப்பனிமார் வழி நடத்த; அந்தணர் பொற்காலங்களில் பலிப்பெருள் ஏந்துதல் மட்டுமல்லாது வேள்வித்தீ வளர்த்தல்' என்ற இறைவழிபாட்டில் மகிழ்ச்சியும் நிறைவும் எய்துவதை அறிய முடிகின்றது.

## *2.12 அந்தணனின் ஒழுக்கக் கேடான செயல்*

நிலவிற்குள்ளும் கலங்கம் இருப்பதைப் போன்று பார்ப்பாருக்குள்ளும் ஓர் ஒழுக்கங்கெட்ட பார்ப்பான் இருப்பதைக் கண்ட கபிலர் அதைக் குறிஞ்சிக்கலியில், 'மயிர் சொட்டையாய்ப்போன வழுக்கைத்தலை; அதன் மேல் ஒரு முக்காடு; கருங்குட்டத்தால் குறைந்து போன கால், கைகள்; ஒழுக்கங்கெட்டவன்' என அவனது தோற்றத்தை வெளிப்படுத்துகின்றார். அவன் இரவில் தலைவனை சந்திக்க வந்த தலைவியிடம், 'நீ என்னிடம் அகப்பட்டு கொண்டாய் நீயோர் பெண்பிசாசு; நான் ஓர் ஆண் பிசாசு என்னை ஏற்றருள்க! என்று பிதற்றுவதையும் வெளிப்படுத்தியுள்ளார்'[55]

## *2.18 அந்தணர் வழிபாட்டு முறை:*

அந்தணர்கள் தம் கடமையை சிறப்பாகச் சேய்து இறைவனை வழிபாடு செய்த முறையை நக்கீரர் பாடலின் வழி அறியலாம்.

இருமூன் றெய்திய இயல்பினின் வழாஅது
இருவர்ச் சுட்டிய பல்வேறு தொல்குடி
அறுநாள் கிரட்டி இளமை நல்லியாண்டு

ஆறனிற் கழிப்பிய அறனவில் கொள்கை
மூன்றுவகைக் குறித்த மூத்தீச் செல்வத்து
இருபிறப் பாளர் பொழுதறிந்து நுவல
ஒன்பது கொண்ட மூன்றுபுரி நுண்நான்
புலராக் காழகம் புலர உடீஇ
உச்சிக்கூப்பிய கையினர் தற்புகழ்ந்து
ஆறெழுத் தடக்கிய அருமறைக் கேள்வி
நாவியல் மருங்கின் நவிலப் பாடி
விரையுறு நறுமலர் ஏந்திப்பெரிதுவந்து
ஏரகத் துறைதலும் உரியன்[56]

நக்கீரர் இப்பாடல் வழி, அந்தணர்கள் ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் என்னும் நன்மை பொருந்திய ஆறு வாழ்வியல் இலக்கணத்தில் வழுவாதவர்கள். உலகத்தார் உயர்ந்தோர் எனத் தாய் தந்தையரை போற்றுவதற்குரிய பிரம்மசரிய விரதத்தை நாற்பத்தெட்டாண்டுகள் மேற்கொண்டவர்கள். நாற்சதுரம், முச்சதுரம், வில்வடிவம் ஆகியவற்றின் வழி ஆகவனீயம், தக்கிணாக்கினியம், காருகபத்தியம் என்று மூன்று வகைத் தீயினை வளர்த்தவர்கள். நூலணிவதற்கு முன் உள்ள பகுதி ஒரு பிறப்பாகவும், பின்னர் ஒரு பிறப்புமாகிய இரு பிறப்பாளர்கள் ஆவர். புரிக்கு மூன்று என்று ஒன்பதை முப்புரிநூலாக அணிந்தவர்கள். நீராடியபின் ஈர உடையை அணிந்து உடலிலே புலரவிட்டு இறைவனை தலைமேலே குவித்த கையை உடையவர்கள் ‘சரவணபவ’ என்னும் ஆறெழுத்து மந்திரத்தை ஓதிக் கொண்டிருப்பார். மேலும், கேட்டற்கரிய மறையை அறிந்து மந்திரத்தை தன் நரப்புடைக்க ஓதிக் கொண்டிருப்பர். மேலும் மணம் மிக்க நறிய பூவை எடுத்து தூவி வழிபடுவதைக் கண்டு மகிழ்ந்து இறைவன் திருவேரகத்திலே வீற்றிருக்கின்றார் என்று நக்கீரர் விளக்குவதிலிருந்து அந்தணர்களின் வழிபாட்டு சிறப்பையும் பெருமையையும் அறிய முடிகின்றது.

### 2.19 அந்தணர் தொழில்:

அந்தணர்க்குரியனவாக தொல்காப்பியர் ஓதல், ஓதுவித்தல், வேட்டல்,

வேட்பித்தல், ஈதல், ஏற்றல் என்று கூறுகின்றார். இதனைக் கூறும் நூற்பா

அறுவகைப் படட பார்ப்பனப் பக்கமும்[57] இதனைப் பதிற்றுப்பத்தும்

ஓதல் வேட்டல் அவை பிறர்ச்செய்தல்
ஈதல் ஏற்றல்என் றாறுபுரிந் தொழுகும்
அறம் புரி அந்தணர்[58] என்று கூறுகின்றது.

### *2.19.1 ஓதல்*

ருக்கு முதலிய மறைகளையும் இல்ககணங்களையும் அறநூல்களையும் அறங்களையும் பயிலுதல் ஓதல் வேண்டும். இதன் படி பயின்று இறைவனை அந்தணர் வழிபட்டதை 'இறை வழிபாடு' என்ற தலைப்பிலே கொடுக்கப்பட்டுள்ளது மேலும்

பகைவர் புல்லார்க பார்ப்பா ரோதுக[59]

என்று ஐங்குறு நூற்றில் அந்தணர் நூலோதுவதினால் ஒரு நாட்டின் மழைவளம் பெருகும்; அறிவு பெருகும்; அறம் முதலிய உறுதிப்பொருள் நிலைத்திருக்கும் என்று ஓரம்போகியார் கூறுவதில் இருந்து ஓதலின் சிறப்பு பற்றி அறிய முடிகின்றது.

### வேதம்:

வேதம் 'வித்' என்னும் வடமொழிச் சொல்லடியிலிருந்து தோன்றியது. 'வித்' என்னும் வடமொழிச் சொல்லுக்கு 'அறிதல்' என்பது கருத்து[60] அறிதல் என்றால் 'அறிவு' என்று பொருள். அறிவில் இரண்டு வகை உண்டு. அவற்றுள் ஒன்று மனிதன் தன் வாழ்க்கையை இனிதாக்குவதற்கு உலகிலுள்ள பொருள்களை எவ்வெவ்விதமாகப் பயன்படுத்துவது உலகமுமே எதற்காக என்பதை அறிவது ஆகும்.

### வேதத்திற்கு வேறு பெயர்கள்

வேதத்தை 'எழுதாமறை' என்றும், 'சுருதி' என்றும் அழைப்பர். 'மறை' என்ற சொல்லுக்கு மறைத்து வைக்கப்பட வேண்டிய நூல் என்பதல்ல; 'மறைந்து நிற்கும் பரம்பொருளை விளக்கும் நூல்' என்பதுதான் பொருள் என்கிறார்.[61]

'எழுதாக்கிளவி' என்றும் அழைக்கப்படும். 'எழுதாக்கிளவி' என்றால் எழுதிப்படிக்கப்படாமல், காதிற்கேட்டு வாய்வழியாக பயிலப்பட்டது என்று பொருள்.[62]

வேதத்திற்கு 'சுருதி' என்றொரு பெயருண்டு. 'சுருதி' என்றால் காதால் கேட்பது, 'ஆதியில் வேதங்கள் எழுதி வைக்கப்படாமலிருந்த காலத்தில் குரு சீட முறையில் ஒருவர் சொல்ல மற்றவர் அதனைக் காதால் கேட்டு மனதில் வைத்து மனனம் செய்தனர்'. இவ்வாறு வாய்மொழிவழி கேட்டு பல நூற்றாண்டுகளாகப் பாதுகாக்கப்பட்டதனால் 'சுருதி' என்ற பெயர் பெற்றது.

**வேதகாலம்:**

வேதம் அருளப்பட்ட காலத்தை, 'மாக்ஸ்முல்லர் கிறித்து பிறக்க ஆயிரத்து இருநூறு ஆண்டுகளுக்கு முற்பட்டது என்கிறார்; பாலகங்காதர திலகர் எட்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்டது என்கிறார்; அவினாச சந்திர சக்கரவர்த்தி இருபத்தைந்தாயிரம் ஆண்டிருக்கும் என்கிறார்'[63]. இதிலிருந்து வேதம் அருளப்பட்ட காலம் இன்னும் நிர்ணயம் செய்யப்படவில்லை என்பது புலனாகின்றது.

**வேதத்தின் உட்பிரிவுகள்**

வேதத்தை இருக்கு, யசூர், சாமம், அதர்வணம் என்ற நான்காகப் பிரித்திருந்தனர். தேவர்களால் துதிக்கப்படும் வேதம் 'இருக்கு' என்றும் பூசிக்கப்படும் வேதம் 'யசூர்' என்றும்; சாந்தமளிப்பது 'சாமம்' என்றும்; ஞானச் சுடர் அளிப்பது அதர்வணம் என்றும் அழைக்கப்படுகின்றது.[64]

நான்கு வேதத்திற்கும் மந்திரப்பகுதி, பிராமணப் பகுதி என்ற இரண்டு பகுதிகளுண்டு. பிராமணப் பகுதியிலே 'உபநிடதம்' என்றொரு பகுதியுமுண்டு. இவற்றுள் 'மந்திரம்' என்றால் தெய்வங்களை நோக்கிக் கூறப்படும் துதிப்பாடல்களாகும். பிராமணம் என்றால் மந்திரங்களை வாய் உச்சரிக்கும் போது செய்ய வேண்டிய செயல்களை விவரிப்பது ஆகும்.

இவையிரண்டையும் ஒட்டியெழும் தத்துவங்களை ஆராய்வனவே உபநிடதங்கள் ஆகும்.

## வேதநெறியும் தமிழ்நெறியும்

'வேதம்' வடநூல் என்றாலும் வேதங்களில் முதன்மையானதாகக் கருதப்படும் ருக்க வேதத்திலே இந்திரனும் வருணனுமே சிறப்பாகப் பேசப்படுகின்றனர். அதேபோல் தமிழிலே மிகப் பழமையான தொல்காப்பியத்திலே

வேந்தன் மேய தீம்புனல் உலகம்
வருணன் மேய பெருமணல் உலகம்[65]

என்று இந்திரனும் வருணனுமே பேசப்படுகின்றனர். இதேபோல் புறநானூற்றில் இடம் பெற்றுள்ள 'நீலமணி மிடற்று ஒருவன்' என்ற சொல் ரிக் வேதத்திலே இடம் பெற்றள்ள சொல்லாகும். இவை 'ஆரியர் இந்திய நாட்டினுள் புகுமுன்பே இந்திய நாட்டிலே நிலவிய கருத்துக்கள் வேதங்களில் இடம் பெற்ற பின் தமிழ் நூல்களிலும் இடம் பெற்றுள்ளன'[66] என்கிறார். கி.லட்சுமண்.

## வேதத்தின் உட்பொருள்

வேதத்திற்கு எழுதப்பட்ட இலக்கணம் இல்லாததனால் அதன் உட்பொருளை அந்தணர்க்கு தான் உணர முடியும் என்பதை பரிபாடலில் கீரந்தையார்.

'நாவல் அந்தணர் அருமறைப் பொருளே'[67] என்று கூறியுள்ளார்.

## வேதத்தின் பெருமை

அறிதற்கரிய மறைபொருளை உடைய வேதமானது வேதமாகிய நீரோடையில் தாமரை மலரில் அவதரித்தவன் பிரமதேவன் அவனுடைய தந்தை திருமால் என்பதை உணர்த்தும் வகையால் அதன் பெருமையை நல்லந்துவனார்.

'வாய்மொழி யோடை மலர்ந்த
தாமரை பூவினுட் பிறந்தோனுந் தாதையும்
நீயென மொழியுமா லந்தணர் அருமறை'[68]

என்று கூறுகின்றார்.

## வேதத்தின் சிறப்பு

உயர்தற்கரிய இறைவனுடைய பண்புகளை உணர்த்துவனவாய் அந்தணரின் வேதம் உள்ளது என்பதை நல்லந்துவனார் பாடல் அடிகள்

'அன்னோ ரல்லா வேறுமுள அவை
நின்னோ ரன்னோ ரந்தணர் அருமறை'[69]

உணர்த்துகின்றன.

## வேதத்தின் வேறு பெயர்கள்

மறை[70], முதுநூல்[71], முதுமொழி[72], எழுதாக்கற்பு[73] என்பன.

## இறை தத்துவம் கூறும் வேதமும் வேள்வியும்

இறைவனைக் கண்ணால் காண முடியாது. அவனுடைய தோற்றத்தின் மேன்மையை உட்பொருளைக் கூறுவது பொருளிலக்கணமற்ற வேதமே, திருமாலின் மேனி நீலமணி போன்றது. கண்கள், தாமரையையும்; வாய்மை, தப்பாது வரும் நாளையும்; பொறுமை, நிலத்தையும்; 'அருள்' முகிலையும் ஒப்பாகும் என்று அருமறை சிறப்பாக விளக்குகின்றது. மேலும் 'மறைமொழி' இறைவனின் உருவமாக உள்ளது. வேள்வித்தூணாக திருமால் உள்ளார். வேள்வியில் பிணிக்கப்படும் 'பசு' இறைவனது உணவாகும். இவ்வாறு அந்தணர் முறையாக வளர்க்கும் வேள்வித்தீயில் 'இறைவன்' கண்கூடாகக் காட்சியளிப்பதாக கீரந்தையார் பரிபாடலில் கூறியுள்ளார்.[74]

## படைப்பின் இரகசியம் கூறும் வேதம்

உலகத்தில் தோன்றியுள்ள நெருப்பு காற்று, வானம், நிலம், நீர் என்னும் ஐம்பெரும் பூதங்களும், திங்கள் மற்றும் செவ்வாய் முதலிய கோள்களைந்தும்; ஆதித்தர் பன்னிருவரும்; வசுக்கள் எண்மரும்; உருத்திரர் பதினொருவரும்; அசுவினி தேவர், இயமனும்; மூவேழுலகமும் அவற்றிலுள்ள உயிரினங்களும் ஆகிய இவையெல்லாம் திருமாலினிடத்து தோன்றி விரிந்தன என்று அந்தணரின் அருமறை கூறுகின்றது. மேலும்,

பிரமதேவனும் அவனது தந்தை திருமால் பற்றியும் அருமறை கூறுவதாக கடுவன் இளவெயினார் பரிபாடலில் கூறியுள்ளார்.[75]

**முக்தியளிக்கும் வேதம்:**

அரசனுக்கு சிறப்பென்பது போரில் விழுப்புண் பட்டு இறப்பது. அந்த வாய்ப்பு கிடைக்காத நிலை அதியமானின் வெற்றியால் வந்தது. அதனைக் கண்டபோது அதியமானைப் பார்த்து திண்மையான பிணிப்பையுடைய முரசம் இழுமென்னும் ஓசையையுடையதாய் ஒலிப்பு மேற்சென்று போரை வெல்லும் வாய்ப்பு இல்லை. அப்படி யாரேனும் எதிர்த்து வந்தால் நினது தூசிப்படைக்கு பொறுக்கமாட்டாராய் தோற்றுப்போவதை விரும்பாத அரசர்கள் நோயினால் இறக்க நேரிட்டால் அவர்கள் வாளாற்படாத குற்றம் போக்குவதை மட்டுமல்லாமல் அவர்களுக்கு முக்தியும் கிடைக்கிறது என்பதை

அறம்புரி கொள்கை நான்மறை முதல்வர்
திறம்புரி பசும்புற் பரப்பினர் கிடப்பி
மறங்கந் தாக நல்லமர் வீழ்ந்த
நீள்கழன் மறவர்செல்வழிச் செல்கென
வாள்போழ்ந் தடக்கலு முயந்தனர் மாதோ[76]

புறநானூற்றின் வழி அறியலாம். இப்பாடலானது "நான்கு வேதத்தையும் நன்கறிந்த அந்தணர்கள் நல்ல கூற்றிலே பொருந்திய, பசிய தருப்பைப் புல்லை பரப்பினராய் உடலை அதன்மேல் கிடத்தி தமது ஆண்மையே பற்றுக்கோடாகக் கொண்டு, நல்ல பூசலிலே மேம்பட்ட வீரக்கழலினையுடைய வானாற் பிளந்து அடக்கம் செய்வர்" இதனால் அரசர் வாளாற் படாத குற்றம் நீங்குவதாகவும் முக்தி கிடைப்பதாகவும் ஆசிரியர் கூறுகின்றார்.

### 1.19.2 ஓதுவித்தல்:

சிறந்த குருவாக இருந்து மாணவனின் உணர்வு வகையறிந்து அவன் ஏற்றக் கொள்ளும் திறனறிந்து அறிவைக் கொடுக்கும் குருவின் தன்மையும் ஓதுவித்தலில் அடங்கும். ஒரு சிறந்த மாணவனாக இருந்து தெளிவுற கற்ற

சமுதாய வளம் பெருக ஓதியது மட்டுமின்றி குருவாக இருந்து ஓதுவித்ததை மருதனிள நாகனார்.

நளவினை வரைந்தார்க்கும் வரையார்க்கும் அவை எடுத்து
அறவினை இன்புறூஉம் அந்தணர்.[77]

என்று அந்தணர்கள் அசுரர்களுக்கும் தேவர்களுக்கும் இன்பம் தரக்கூடிய அறக்கல்வியை ஓதுவித்ததைக் கூறுகின்றார்.

### 1.19.3. வேட்டல்:

ஐந்தீயாயினும், முத்யாயினும் உலகியற்றீயாயினும் ஒன்று பற்றி மங்கல மரபினால் கொடைச் சிறப்புத் தோன்ற மந்திர விதியின் துணை கொண்டு கொடுக்கும் செய்தி 'வேட்டல்' எனப்படும்.

பூஞ்சாற்றூர் பார்ப்பானான கௌணியன் விண்ணத்தாயன் நெய்யை நீர்போல் வார்த்து வேள்வி செய்ததை புறநானூற்றில் ஆலூர் மூலங்கிழார் கூறியுள்ளதிலிருந்து அறியலாம்.

**அந்தணரின் வேட்டல்**

**கௌணியன் விண்ணத்தாயன்**

'அறுவகைப்பட்ட பார்ப்பனப் பக்கமும்'[78]

அந்தணர்க்குரியனவாக ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் என்பன கூறப்பட்டுள்ளது. இதன்படி வேள்வி செய்தவர். கௌணியன் விண்ணத்தாயன். இவர் சோழநாட்டுப் பூஞ்சாற்றூர்ப் பார்ப்பான் ஆவார். இவ்வூர் தஞ்சை மாவட்டத்தில் உள்ளது. கௌண்டின்னிய கோத்திரத்துப் பார்ப்பனர் 'கௌணியர்' எனப்படுகின்றனர். சீர்காழி திருஞானசம்பந்தரும் கௌணியராவார் விண்ணன் என்பது இவரின் தந்தையார் பெயர். இவருடைய இயற்பெயர் 'தாயன்' என்பதாகும். அரிவாள் தாய நாயனாரும் 'தாயன்' என்ற பெயருடையவர் ஆவார். கௌணியன் விண்ணத்தாயன் ஒருமுறை சிறந்ததொரு வேள்வி வாயிலாக பெருவிருந்து படைத்தான். அங்கு வேளாளரான ஆலூர் மூலங்கிழாரும் சென்றிருந்தார். அவ்வேள்வியில்

இவனுடைய மனைவியர் தமக்குரிய ஏவல் கேட்டு நிற்ப, நெய்யை நீரைப்போல் வழங்கி வேள்வி செய்ததையும் விருந்து செய்ததையும் கண்டு வியந்த ஆவூர் மூலங்கிழார் புறநானூற்றில் அவனுடைய பெருமையை

நீர் நாண நெய்வழங்கியும்
எண்ணாணப் பலவேட்டும்
மண்ணாணப் புகழ்பரப்பியும்
அருங்கடிப் பெருங்காலை[79]

என்ற பாடல், அடிகள் பெரிதும் ஆராயப்பட்ட மிக நீண்ட சடையினையுடைய முதிய இறைவனது வாக்கை விட்டு நீங்காது அறமொன்றையே மேவிய நான்கு கூற்றையுடையத்தாய் ஆறங்கத்தாலும் உணரப்பட்ட ஒரு பழைய நூலாகிய வேதத்துக்கு மாறுபட்ட நூல்களைக் கண்டோராகிய புத்தர் முதலான புறசமயத்தாரின் மிகுதியைச் சாய்க்க வேண்டி அவரது மெய் போன்ற பொய்யை உளப்பட்டறிந்து அப்பொய்ம்மையை மெய்யென்று கருதாமல் உண்மைப்பொருளை அவர்களுக்கு ஏற்ப சொல்லியவன். அவன் செய்த வேள்விகள் சோம யக்ஞம், அவிர் யக்ஞம், பாக யக்ஞம் என்பனவாம் அவை முறையே ஏழாக இருபத்தொரு வேள்வித்துறையை குறையின்றி செய்து முடித்தவன். வேள்வித் தொழிற்காக புதிதாக அணியும் பூணூலின் மீது போர்த்தும் காட்டில் வாழும் புல்வாய்க் கலையினது பச்சைத்தோலானது புதிதாக தோன்றுகின்றது. வேள்வியின் போது ஏவல் செய்ய குறைந்தது மூன்று பத்தினி மார் இருக்க வேண்டும் என்பது விதி. இங்கு அவன் மனைவியரே அதைச் செய்தனர் என்று கிழார் கூறுவதிலிருந்து அக்காலத்தில் பார்ப்பனர்க்கு ஒன்றுக்கு மேற்பட்ட மனைவிமார் இருந்தனர் என்பது தெளிவாகின்றது. அவர்கள் அக்காலத்தில் வேள்வி செய்பவரின் மனைவிமார் அணியும் ஆடையான சாலகத்தையே அணிந்திருந்தனர் என்பதையும் இப்பாடல் வெளிப்படுத்துகின்றது. இவருடைய துணைவியர் சிறுநெற்றியையும் அகன்ற அல்குலையும் மெத்தென்ற சொல்லையையும் பலவாகிய கூந்தலையும் உடைய தொழிலைச் செய்தனர் என்பதையும்; காடென்றும் நாடென்றும் சொல்லப்பட நிலத்தின் கண் நடத்தப்பட்ட வேள்வியில் காட்டாகத்து உள்ள எழுவகை பசுவினாலும் நாட்டில் உள்ள

எழுவகை பசுவினாலும் படி நெய் வழங்கப்பட்டது என்பதையும்; பல்புகழ் எங்கும் பரப்பியவர் என்று விண்ணத் தாயனின் வேள்விப் பெருமையையும், விருந்து வழங்கிய சிறப்பையும் ஆவூர் மூலங்கிழார் இப்பாடல் வழி விளக்குகின்றார்.

**அந்தணரின் வேள்வியும் அதன் பெருமையும்:**

> பெருமை உடையவர் ஆற்றுவார் ஆற்றின்
> அருமை உடைய செயல்[80]

என்பதற்கேற்ப பிறவுயிர்கட்கு தீங்கு நினையாதவர்கள். தெளிவான அறிவை உடையவர்கள். சூரியன் எப்படி உலக மக்களை வாய்மையினை உடையவர்கள் எழுத்திலக்கணம், சொல்லிலக்கணம், பொருளிலக்கணம், சோதிடம், வேதம் என்ற ஐந்தினையும் ஒருங்கே கற்ற அவற்றின் துணை கொண்டு செய்யும் வேள்வித்தீயில் சடர் மேலேழுந்தோறும் உள்ளம் கொண்ட விருப்பம் மெய்யின் பரவ வேள்வியைச் செய்யும் அந்தணர்கள் இருந்ததை பற்றி பாபலைக் கௌதமார் கூறுவதிலிருந்து அறியலாம்.[81]

அந்தணர்களின் பெருமையை அவர்களது தொழில் திறமையிலிருந்தும் அவர்கள் பெறும் கொடைப்பொருளிலிருந்தும் அறிந்து கொள்ளலாம். அருமறைப் பொருளை கற்றும் கேட்டும் ஒழுகும் நல்லொழுக்கமுடையவர்கள் உயர்ந்த புகழ்பெற்ற வேள்விகள் பல செய்து முடிக்கும் திறமையுடைய கேள்வியறிவினை உடையவர்கள் அந்தணர்கள். அவர்களுக்கு செல்வக்கடுங்கோ வாழியாகன், நீர் வார்த்து பொருள் கொடுத்ததனால் பரவிய நீர் அவன் அரண்மனை முற்றம் சேறாகியது என்று கபிலர் கூறுவதிலிருந்து அறிய முடிகின்றது.[82]

அரசர்களுக்கு அருமறைப்பொருளை ஓதுபவர்களாகவும், அந்தணர்கள் இருந்தனர். அந்தணர்களின் கேள்வியறிவின் உதவியுடன் விரதமிருந்து அறிவு ஒழுக்கம் ஆகியவற்றின் உதவியுடன் சிறந்திருந்து வேள்வியும் செய்தனர் என்பதை அரிசில்கிழார் கூறியுள்ளார்.[83]

**வேத வேள்வி:**

அந்தணர் வளர்க்கும் செந்தழல் மூன்று வகைப்படும்; நாற்சதுரவடிவமான ஆகவனீயம்; சதுரவடிவமான தக்கிணாக்கினி; வில் வடிவமான காருகபத்தியம் ஆகியவை ஆகும். இவை வேதத்தை வழங்கு தலையும், அவர்கட்கு தட்சிணை அளிதத்தலையும், பூவுலகைக் காத்தலையும் முறையே குறிக்கும் இதனை ந்க்கீரர் திருமுருகாற்றுப்படையில்

மூன்றுவகைக் குறித்த முத்தீச் செல்வத்து

இருபிறப் பாளர்[84]

என்று கூறுவதன் மூலம் அறியலாம். இதனை மேலும் ஔவையார் கூற்றின் வழி

ஒன்றுபுரிந் தடங்கிய இருபிறப் பாளர்

முத்தீ[85]

அதாவது வீடுபேறொன்றையே விரும்பி புலன்கள் மேல்செல்லும் ஆசைகளை அடக்கி வாழ்கின்ற அந்தணர் வளர்க்கும் முத்தீ என்று முத்தீயின் சிறப்பை அறிய முடிகின்றது.

மார்பில் சந்தனம் பூசி, விடப்பட்ட விளங்குகின்ற மயிர்க்கட்டு கட்டி வேள்வி செய்யும் அந்தணரின் சிறப்பை மதுரைக்காஞ்சி

ஆவுதி மண்ணி அவிர்துகில் முடித்து

மாவிசும்பு வழங்கும் பெரியோர் போல[86]

என்று நுவல்கின்றது.

**அதிகாலை எச்சரிக்கை ஒலி:**

அலார ஓசை மனிதனை எழுப்பும் ஆனால் அந்தணர்கள் இறையன்பு பொங்கி வேதம் பாடுவதால் அது பொய்கையில் மலர்ந்த மலரில் தேனையுண்டு களித்த தும்பியின் முயற்சி போலிருந்தது மட்டுமல்லாமல் அது மதுரை மக்களை எழுப்பும் இனிய கீதமாகவுமிருந்தது என்பதை மதுரைக்காஞ்சி

போதுபிணி விட்ட கமழ்நறும் பொய்கைத்

தாதுண் தும்பி போதுமுர றாங்கு

ஓத வந்தணர் வேதம் பாட[87]

என்று கூறுகின்றது மேலும் பகலில் மலர்ந்துள்ள தாமரை மலர்க்கும் வசந்தீ உவமை கூறப்பட்டுள்ளது. இதனை

செறுவிற் புத்த சேவிதழ்த் தாமரை
அறுதொழி லாளர் அறம்புரிந் தெடுத்த
தீயொடு[88]

இப்புறப்பாடல் விளக்ககின்றது. அந்தணர் மாலையில் செந்தீ வளர்த்தவர் பற்றி குறிஞ்சிப்பாட்டு

அந்தீ அந்தணர் செந்தீப் பேணி[89]

என்று கூறுகின்றது. இவற்றிலிருந்து அந்தணர் முக்காலங்களிலும் வேள்வித்தீ வளர்த்திருப்பதை அறிய முடிகின்றது.

**முத்தீயின் பயன்**

சிறுதலை நவ்விப் பெருங்கண் மாப்பிணை
அந்தி யந்தணர் அருங்கட னிறுக்கும்
முத்தீ விளக்கிற் றுஞ்சும்[90]

சிறிய தலையையுடைய மறிகளும் பெரிய கண்களையுடைய மான்பிணைகளும் அந்தணர். மாலை நேரத்தில் செய்தற்கரிய கடனாகிய ஆகுதியைப் பண்ணும் முத்தீயாகிய விளக்கின் கண்ணே துஞ்சும் என்று முரஞ்சியூர் முடிநாகராயர் கூறியுள்ளார்.

**அந்தணரின் மூத்தீ பயன்**

வேதம் வழங்கவும், தேவர்கட்கு தக்கிணை வழங்கவும், பூலோகத்தை காக்வும் மூத்தீயானது அந்தணரே முன்னின்று வளர்த்தனர் என்பதை ஔவையார்

ஒன்றுபுரிந் தடங்கிய விருபிறப் பாளர்
முத்தீப் புரையக் காண்டக விருந்த[91]

என்ற வரிகளில் "வீடுபேறொன்றையே விரும்பி புலன்மேற் செல்கின்ற ஆசைகளை அடக்கி பிரம்மசரிய விரதம் மேற்கொண்ட அந்தணரே அம்மூத்தீயை வளர்க்கின்றனர் என்று கூறுவதிலிருந்து அதன்

இன்றியமையாமையை அறிய முடிகின்றது.

முத்தீ வளர்த்தலால் பூலோகம் காக்கப்படும் என்பதனால்

அறுதொழி வந்தண ரறம்புரிந் தெடுத்த
தீயொடு விளங்கு நாடன்[92]

என்ற வரிகளில் சோழன் குளமுற்றத்துத் தடஞ்சிய கிள்ளிவளவனை, 'அரசர்க்காக அறுதொழிலமைந்த அந்தணர்கள் வளர்த்த தீயொடு விளங்கும் நாடன்' என்று எருக்காட்டூர் தாயங்கண்ணனார் கூறுவதிலிருந்து முத்தீயின் அருமையை அறிய முடிகின்றது. இவற்றிலிருந்து அரசர்க்கு மட்டும் நாட்டின் மீது அக்கறை இருக்க வேண்டும் என்று எண்ணாமல் அந்தணரான தமக்கும் நாட்டின் வளர்ச்சியில் நலத்தில் பங்குண்டு என்பதை தாம் வளர்த்த வேள்வியின் மூலம் எடுத்துக்காட்டியுள்ளனர்.

**வேத வேள்வியின் சிறப்பு:**

அந்தணர்கள் மெய்ந்நூல்கள் உரைத்த முறையிலிருந்து தவறாமல் 'சரவணபவ' என்றும்; 'நம குமாராய' என்றும் மந்திரத்தை ஓதுகின்றனர் அப்போது கன்மவேள்வி, தவவேள்வி, செப வேள்வி, தியான வேள்வி, ஞான வேள்வி ஆகிய ஐவகை வேள்விகளையும் இயற்றுவதனால் அவற்றிற்கு இடையூறு நேராத படி இலை உ.வே.முன்னின்று தன் மூன்றாவத முகத்தை அதனை கேட்கும் விதமாக திருப்பி வைத்திருக்கின்றான் என்று கூறும் நக்கீரர் அது மேலும் அந்தணர்க்கு நற்பயனை அளிக்கின்றதாகவும் கூறுகின்றார். இதனை,

ஒரு முருகம்
மந்திர விதியின் மரபுளி வழாஅ
அந்தணர் வேள்வியோர்க் கும்மே

என்று திருமுருகாற்றுப்படை கூறுவதிலிருந்து அந்தணர்க்கு இடையூறு விளைவிக்காதது மட்டுமல்லாது பயனும் அளிப்பதாக கூறுவது அந்தணரின் பெருமையையும் அவர்களது வேதவேள்வியின் சிறப்பினையும் எடுத்துரைக்கின்றது.

**கரும்பை விளைவித்த வேள்வி**

> அமரர்ப் பேணியு மாவுதி அருந்தியும்
>
> அரும்பெறன் மரபிற் கரும்பிவட் டந்தும் [94]

எனத் தமிழகத்திற்கு அறிமுகமான புன்செய்நிலப் பயிரான கரும்பை வேள்வி வேட்டு அதியன் மரபினர் கொணர்ந்தனர் எனக்கூறும் நிலைக்கு வேள்வி பெருகியிருந்தது.

### 1.19 வேட்பித்தல்

வேள்வியாசிரியர்க்குத் தேவையான இலக்கணமெல்லாம் உடையவர் தன் மாணாக்கற்கு அவன் செய்த வேள்விகளால் பெறும்பயனைக் கூறுதல். அவனை அவ்வேள்வியை செய்ய வைத்தல் வேட்பித்தல் எனப்படும்.

அரசர்கள் இவ்வேள்வியை தன் நாட்டின் பெரக்கம் வேண்டியும், போர் வெற்றிக்காகவும் பல வேள்விகளைச் செய்தனர். 'போர் வெற்றிக்கு யாகபலிகள் இன்றியமையாதன வென்று கருதப்பட்டன. பொதுவாகப் போரிடும் மன்னரின் வெற்றிக்கு அவை அவசியமாக இருந்தன' (1989: 156, 157) என்று என்.டி.டி.கோசாம்பி குறிப்பிடுவதைப் போல போர்கள் மலிந்திருந்த சங்க காலத்தில் மூவேந்தர் பிறருடனும் தன்னுடனும் தமக்குள்ளும் போரிட்டுக் கொண்டு பருமன்னராய் உயரத் தலைப்பட்ட காலச்சூழலில் யாகங்கள் முக்கியத்துவம் பெற்றுள்ளன. தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன்

> ஆன்ற கேள்வி யடங்கி கொள்கை
>
> நான்மறை முனிவர் சுற்ற மாக
>
> மன்ன சேவல் செய்ய மன்னிய
>
> வேள்வி முற்றிய வாய்வாள் வேந்தே[95]

என நான்மறை முனிவர் சுற்றமாக இருந்து வேள்வி செய்ததையும் பிற மன்னர் அதற்கு ஏவல் செய்ததையும் புறநானூறு காட்டுகிறது. மேலும் இவனை மாங்குடி மருதனார் சிறந்த யாகங்களுக்கு உரித்தான நெறிமுறைகளை எல்லாம் முழுமையாய் முடித்தவன்[96]என மதுரைக்காஞ்சியில் புகழ்ந்துள்ளார். அமரர்களைப் பேணியவன், யாகம் செய்தவன், நல்ல பசுக்களோடு எருதுகளைப் பாதுகாத்தவன்.

நான்மறையோர் புகழ் பரப்பியவன்[97] என கரிகாற்சோழன் புகழப்பட்டுள்ளான். மேலும் 'இவன் மதிலால் சூழப்பட்ட வேள்விச்சாலையில் பருந்து வடிவமாகச் செய்யப்பட்ட வேள்விக் களத்தில் வேள்வித் தூண் நட்டு வேள்வி செய்தவன்'[98] எனவும் புகழப்பட்டுள்ளான். "அந்தணர் கூறிய விரதங்களில் இருந்து வழுவாமல் தேவர்கள் மகிழும்படி வேள்விகள் நடத்தியவனாய் பெருஞ்சேரல் இரும்பொறை சிறப்புடைந்துள்ளான்" என்பதை பதிற்றுப்பத்து கூறுகின்றது. வேதவேள்விகள் செய்து புகழ்பெற்ற அரசர்களாய்[99] பல்யாகச்சாலை முதுகுடுமிப் பெருவழுயும் 'இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியும்' கூறப்பட்டுள்ளனர்.

வழிபாட்டின் மூலம் கடவுளை அடைய முடியும் என்ற நம்பிக்கை எப்படி மக்களிடம் இன்றும் இருந்து வருகிறதோ? அது போன்று அன்று சங்க கால அரசர்கள் யாகத்தின் வழி, 'தான் விரும்பிய நிசங்களை யாகங்கள் தரும் என்ற நம்பிக்கையால் தூண்டப்பட்டு அதை இன்னும் அதிகமான தன்னம்பிக்கையுடனும் ஆற்றலுடனும் நிசமாகவே கொண்டு வரும் செயல்களில் முனைந்து ஈடுபட்டு வந்தனர்'[100]என்பதை அறிய முடிகின்றது.

### 2.19.5 ஈதல்

வேள்வியானும் அதற்கு துணையாயினோரும் அதனைக் காண வந்தோரும் இன்புறும் வகையில் வேள்வி வேட்டவன் கொடுப்பது ஈதலில் சேரும்.

> பொதுநோக்கான் வேந்தன் வரிசையா நோக்கின்
> அதுநோக்கி வாழ்வார் பலர்[101]

என்பதற்கேற்ப வேள்வி வேட்டபின் வாழியாதன் அந்தணர்க்கு அளித்த மதிப்பை

> "அறங்கரைந்து வயங்கிய நாவிற் பிறங்கிய
> உரைசால் வேள்வி முடித்த கேள்வி
> அந்தண ரருங்கல மேற்ப நீர்பட்
> டிருஞ்சே றாடிய மணன் மலி முற்றத்து"[102]

இவ்வரிகளில் அறநூல்களை நன்கு பயின்று ஓதல், ஓதுவித்தல், தொழிலைச்

செய்பவர்கள் அந்தணர்கள். மேலும், புகழ்பெற்ற பல வேள்விகள் செய்து கேள்வி அறிவினையும் உடையவர்கள் அதனால் அவர்களின் மதிப்பறிந்து அவ்வரசன் கொடுத்தலால் அவ்வரசனின் அரண்மனை மணல் முற்றமே சேறாகியது என்று கபிலர் கூறுவதிலிருந்து அறிய முடிகின்றது.

### *2.19.6 ஏற்றல்:*

கொள்ளத்தகும் பொருட்களை அறிந்து கொள்ளுதல் 'ஏற்றல்' எனப்படும். பொருள் வேண்டி இரந்து நின்ற பார்ப்பனருக்கு அவருடைய நனைந்த கை நிறையும்படி பொற்பூவும் பொற்காசும் கொடுக்கப்பட்டது[103] என்று ஔவையார் கூற்றிலிருந்து, 'இடமறிந்து அந்தணர் ஏற்றனர்' என்பதை அறிய முடிகின்றது.

### *அந்தணரின் வேறு தொழில்கள்*

மேற்கூறப்பட்ட அறுவகைத் தொழில் தவிர 'ஓதலுந் தூதும் உயர்ந்தோர் மேன்'[104] என்ற நூற்பாவிற்கேற்ப அந்தணர்க்கு தூது வேலையும் உண்டு என்பதை அறிய முடிகின்றது. மேலும், இவர்கள் புரோகிதம், அமைச்சர், சங்கறுக்கும் தொழில் ஆகியவற்றில் ஈடுபட்டதை சங்க இலக்கியம் காட்டுகின்றது.

### *தூது*

சங்க கால அரசர்கள் தம் அரசப் பிரிதிநிதிகளாக பிற அரசரவைக்கு தூதர்களை தூதாக அனுப்புவர். தற்போது இத்தகைய தூதர்களை நிலைத்தூதர்களை 'அம்பாசடர்' (Ambassador) என்றும்; தற்காலிகத் தூதரை 'என்வாய்' (Envoy) என்றும் அழைப்பர்.

அந்தணர் தூதின் மூலம் போரையே தவிர்த்து அமைதியை உண்டாக்கினர். இதனை வேளாசான் குறிப்பிட்டுள்ளார். மதுரையில் பார்ப்பனரிடையே வேள்வித் தொழிற்கு ஆசானாக இருந்ததனால் இவர் மதுரை வேளாசான் எனப்படுவராயினார். வேள்விக்கு ஆசானாக இருந்ததனால் இவ்வாறு வழங்கப்பட்டதாக கூறுவர். இருபெரு வேந்தரிடையே பகைமை உண்டானதால் ஏற்பட்ட போரைத் தவிர்த்த

பார்ப்பானின் திறமையை பார்ப்பனரான வேளாசான் தன் பாட்டில்

வயலைக் கொடியின் வாடிய மருங்குல்
உயவ லூர்திப் பயலைப் பார்ப்பான்
எல்லி வந்து நில்லாது புக்குச்
சொல்லிய சொல்லோ சிலவே யதற்கே
மாண்வினை யானையு மணிகளைந்தனவே[105]

வயலைக்கொடி போன்ற வாடிய இடையினை உடையவர்; வருத்தத்தால் ஊர்ந்து செல்வது போன்ற நடையினைக் கொண்டவர்; இளமையினை உடைய பார்ப்பான் இரவு நேரத்தில் வந்து நில்லாமல் இருபெருவேந்தரிடம் கூறிய சொற்களோ சிலவாகும். ஆனால், அதன் பயனாக மதிற்கோடற்கு வைத்திருந்த ஏணியும் உள்வாயிலில் கதவுக்கு வலியாக நிலத்தே விழஇடும் மரமான சீப்பும் நீக்கினர். மேலும், யானைப்படைகளையும் அதன் பக்கத்தே கட்டப்பட்ட மணிகளையும் நீக்கிவிட்டனர் என்று ஒரு பார்ப்பனரின் சொல்வன்மையை புற நானூற்றில் கூறியுள்ளார்.

பலகாற் குறும்பொறைத்
தூதொய்ப் பார்ப்பான மடிவெள் ளோலை
படையுடைக் கையர் வருதிற நோக்கி
உண்ணா மருங்குல் இன்னோன் கையது
........ ......... ........ ......
........ ......... ........ ......
செங்கோல் அம்பினர் கைந்நொடியாய் பெயர[106]

இதில் அந்தணர்கள் தூது செல்லும் பணியைத் தொழிலாகக் கொண்டார்கள். மேலும் தூது செய்தியானது வெள்ளோலையில் எழுதப்பட்டு இருந்தது அதை மடித்துக் கொண்டு சென்றனர் என்பதும் புலப்படுகின்றது. அதனை, கொண்டு சென்ற வாடிய விலாவினையுடைய அவ்வந்தணர்களைக் கண்டவுடன் கூரிய பார்வையும் வறுமையினால் கொள்ளையடிக்கும் தொழிலைச் செய்யும் கையில் சிவந்த கோலான அம்பினை வைத்திருக்கும் மழவர்கள். கைந்நொடித்துப் பெயர்ந்தொடர்ச்சியாக செல்வார்கள் என்பதும்; விரதவுணவை உண்பதால் வாடிய விலாவினை உடையவர்களென்பதும்; அவர்கள் உணவையே பெரிதாக மதிக்காததனால்

அவர்களிடம் பறித்துச் செல்ல ஒன்றுமில்லையென்பதால் மழவர்கள் வருத்தத்துடன் திரும்புவது புலப்படுகின்றது.

**புரோகிதம்**

அமைச்சர்களை அடுத்து அரசியலில் செல்வாக்குப் பெற்றிருந்தவர்கள் புரோகிதர் எனப்படும் அந்தணராவார் புரோகிதத்தொழில் புரிந்த அந்தணர்கள் அரசவையில் முக்கிய இடம் பிடித்திருந்தனர். அரசவையில் மட்டுமின்றி அரசனுடன் கூடவிருந்து சாப்பிட்டுவிட்டு சூது முதலிய கேளிக்கைகளில் ஈடுபட்டிருந்த செய்தியையும் புறம் கூறுகின்றது.[107]

அந்தணர்கள் மட்டுமே அரசனது புரோகிதர்களாப் பதவி பெற்றனர். சேர நாட்டில் புரோகிதன் என்ற சொல் புரோசு என்று திரிந்து வழங்கிற்று இதனைப் பதிற்றுப்பத்து.

மெய்யூர் அமைச்சியன் மையூர் கிழானை
புரையறு வேள்விப் புரோசு மயக்கி[108]

அந்தணர்கள் அமைச்சர்களாக இருந்திருக்கக்கூடும் என்பதற்குச் சான்றாக புறம், சிறந்த கேள்வி அறிவு, அடக்கம், வேதம் கற்ற அந்தணரை சுற்றமாகக் (அமைச்சராக) கொண்டவன் என்று கூறுகின்றது.[109]

**சங்களுக்கும் வேலை**

யாகம் செய்யாதப் பார்ப்பான் கூரிய அரம் கொண்டு சங்கனுக்கும் வேலையைச் செய்து வந்ததையும் அதன் தலையைப் போன்று பகன்றை அரும்புகள் உள்ளன என்பதை ஆலூர் மூலங்கிழார்.

வேளாப் பார்ப்பான வாளரத் துமித்த
வளை களைந் தொழிந்த கொழுந்தினன்ன
தளைபிணி அவிழாச் சுரிமுகப் பகன்றை[110]

என்று கூறுகின்றார். இதிலிருந்து செய்யும் தொழிலே தெய்வம் என்பதை உணர்ந்திருந்தனர் என்பதை அறிய முடிகின்றது.

### 2.20 பிரம்மதேயம்:

'பிரம்மதேயம்' என்ற சொற்றொடரின் பொருள் பிராமணர்களுக்கு

அளிக்கப்பட்ட உரிமை என்பதாகும். 'பிரம்ம' எனுஞ் சொல் 'பிராமணர்' என்பதையும்; 'தாயம்' எனுஞ்சொல் உரிமையையும் குறிக்கின்றது. அச்சொல்லே 'தேயம்' என்று வழங்கப்பட்டது. இது தேசம், நாடு என்ற பொருளில் கூட வழங்கப்பட்டிருக்கலாம். அவை ஊர்களாகவும் இருந்திருக்கலாம் என்பதற்கு எடுத்துக்காட்டாக பல சங்க காலச் சான்றுகள் உள்ளன அவற்றுள் சில:

மலையமான் திருமுடிக்காரியின் நாட்டைக் கடல் கொள்ள முடியாது. பகைவர்களும் கவர எண்ணார். ஏனெனில் நாடு முழுவதும் அந்தணர்க்குரியதாகிவிட்டது! இதில் 'நாடு' என்று குறிப்பிடப்பட்டுள்ளதைக் கபிலர்.[111] கூற்றின்வழி அறியலாம். மேலும், சங்க கால சேர அரசன் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் தன்னைப் பாடிய குமட்டூர்க் கண்ணனார்க்கு[112] உம்பற்காட்டில் ஐந்நூறு ஊர்களை பிரம்மதேயமாக கொடுத்ததுடன் முப்பத்தெட்டாண்டுகள் நாட்டின் வருவாயுள் பாகம் கொடுத்தான் என்று வரலாற்றில்[113] கூறியுள்ளதிலிருந்து தெளிவுபெற முடிகின்றது. தானங்கள் மாற்ற முடியாத சொத்துமாற்றமாகக் கருதப்பட்டதை சங்க இலக்கிய வழி அறியலாம்.[114]

நிலவுலகில் புகழோடு வாழ ஒரு வள்ளல்

கைபெய்தநீர் கடற்பரப்ப
ஆமிருந்த வடைநல்கிச்[115]

கைபெய்த நீர் கடலளவு பரந்து செல்லும்படி நீர்வளம் மிகுந்த மருத நிலத்தூர்களை கொடுத்ததை சிறுவெண்டேரையார் கூறியுள்ளதிலிருந்து 'ஊர்கள்' பிரம்மதேயமாக வழங்கப்பட்டதை அறிய முடிகின்றது. ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் வேதியர்க்குப் பசுக்களோடு குடநாட்டில் ஓர் ஊரையும் வழங்கினான்[116] என்று பதிகம் கூறுகின்றது.

**அந்தணரில் புலவர்கள்**

சங்க இலக்கியப் புலவர்களுள் அந்தணப்புலவர்களும் இருந்துள்ளனர் என்பதற்கு சான்றாக கபிலர், பரணர், நக்கீரர், மலைபடுகடாம் பாடிய பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகனார், பட்டினப்பாலைப்பாடிய கடியலூர்

உருத்திரங்கண்ணனார் முதலியவர்களை பெ.மாதையன் கூறியுள்ளார்[117].

**கபிலர்**

கபிலர் அந்தணன் என்பதை அவர் கூற்றின் வழியே, பாரி மகளிரை இருங்கோவேளுக்கு அறிமுகப்படுத்தும்போது

பறம்பிற் கோமான்
நெடுமாப் பாரி மகளிர் யானே
தந்தை தோழனிவரென் மகளிர்
அந்தணன் புலவன் கொண்டுவந் தனனே[118]

என்று கூறுவதிலிருந்து அறிந்து கொள் முடிகின்றது. மேலும் வஞ்சப்புகழ்ச்சி பாடுவதில் வல்லவரென்பதை

விடுத்தனென் வெலீ இயர்நின் வேலே[119]

என்று இருங்கோவேளைப் புகழ்வதில் இகழ்வதைக் காணலாம்.

**பாரி–கபிலர் நட்பு**

கடைசியில் பாரி மகளிரை "மலையமான் திருமுடிக்காரியின் நாட்டிற்குச் சென்று அங்குள்ள பாப்பாரிடத்தே ஒப்படைத்துவிட்டு பாரியோடு நட்புடன் வாழ எண்ணி தென்பெண்ணையாற்றின் நட்டாற்றுத் துருத்தியில் ஓரிடங்கண்டு வடக்கிருந்ததை" அவரே புறத்தில்[120] கூறியுள்ளார்.

**கபிலரின் பெருமை**

ஒருவரின் பெருமையை மற்றவர்கள் கூறுவதிலிருந்துதான் அறிய முடியும். அக்காலப் புலவர் உலகமே அவரைப் பாராட்டியதிலிருந்து அறியலாம். நக்கீரர் அவரை

உலகுடன் திரிதரும் பலர்புகழ் நல்லிசை
வாய்மொழிக் கபிலன்[121] என்றும்;

பெருங்குன்றூர்கிழார்

....... வயங்கு செந் நாவின்
உவலைக் கூராக் கவலையி னெஞ்சின்

*நனவிற் பாடிய நல்லிசைக்*

*கபிலன் .....*[122] *என்றும்;*

*பெருந்தில் இளங்கீரனார்*

*செறுத்த செய்யுள் செய்செஞ் நாவின்*

*வெறுத்த கேள்வி விளங்குபுகழ்க் கபிலன்*[123]

*என்றும் பாடுவதிலிருந்து கபிலர் சொல்வன்மை வாய்ந்தவர் என்பதை அறிய முடிகின்றது. நிலத்தில் வாழும் எவருக்கு பாட இடந்தராமல் கபிலன் பாடியதை சேரனே புகழந்துக் கூறியுள்ளார்.*[124]

***பரணர்***

*மன்னர்களின் படைவீரத்தையும், மகட்கொடை மறுத்தலால் நேரும் தீமையையும், கொடைத்திறத்தையும் தம் பாடல்களில் கூறியுள்ளார்.*

*உருவப்பஃறேர் இளஞ்சேட் சென்னியின் காலாட்படை, குதிரைப்படை, யானைப்படை, தேர்ப்படை ஆகியவற்றின் சிறப்பையும், போர் வெற்றியையும் குறிப்பிட்டு உள்ளார்.*[125] *மேலும் சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதனும் சோழன் வேற்பஃறடக்கை பெருவிறற்கிள்ளியும் போரிட்டு அக்களத்திற்பட்டு வீழ்ந்தது கண்டு அந்நாட்டின் நிலையைப் பற்றிப் பாடியுள்ளார்.*[126]

*பேகன் நாட்டில் மட்டுமல்ல காட்டிலும் வழிக்கள்வர் பயமில்லை. எதையும் எதிர்பார்க்காமல் கொடையளிப்பவன் என்று அவன்திறம் கூறி புலவன் பாணனை பேகன் பால் ஆற்றுப்படுத்துவதையும் பாடியுள்ளார்.*[127] *மற்றொரு பாடலில் அவனது கொடை மடம் பற்றிக் கூறியுள்ளார்.*[128]

*சேரமான் கடலோட்டிய வேல்கெழுகுட்டுவனின் கடற்படைவலிமையையும், போர்க்களக் காட்சியையும் வர்ணித்துள்ளார்.*[129]

*மகட்கொடை மறுத்தலால் போர் உண்டாவதைக் கண்டு தாய் வருந்துவதையும்*[130] *போர் உண்டானால் ஊரழியும் என்பதையும்,*[131] *போரால் ஏற்படும் அழிவைக் கண்டு தந்தை இரங்குவதையும்;*[132] *போருக்கு தந்தை மண்ணுமங்கலம் செய்வதையும்*[133] *தம் புறப்பாடல்களில் பரணர் தெளிவுற எடுத்துரைப்பதிலிருந்து மகட்கொடை மறுத்தலும் போர் ஏற்படுவதையும்*

அறிய முடிகின்றது.

**பாலைக் கௌதமனார்:**

கௌதமனார் என்பது இயற்பெயர் இவர் பாலைத்திணையைச் சிறப்பித்துப்பாடியதினால் 'பாலைக் கௌதமனார்' எனப்பட்டார். இவர் பல்யானைச் செல்கெழு குட்டுவனிடம், 'யானும் என் சுற்றமும் துறக்கம் புகும்படி அறங்களை முடித்துத் துறக்கத்தைத் தருக' என்று வேண்டிக் கொண்டான். அதற்கிணங்க 'கௌதமனாரும் அவர், மனைவியும் வீடுபேறு அடையும் பொருட்டு பெரும்பொருள் செலவிட்டு பத்துப் பெரு வேள்விகளைத் தக்காரைக் கொண்டு செய்தான்[134]. என்பது கௌதமனாரின் புலமைக்கு கிடைத்த பரிசாகக் கொள்ளலாம்.

பல்யானைச் செல்கெழுகுட்டுவனின் அளந்தறிய முடியா ஆற்றலை ஐம்பூதங்களுக்கு ஒப்பிட்டுள்ளனர். மேலும் அவன் இருசுடரொளி பெற்றவன். கொடைப்பண்பாளன். எதிர்த்த மன்னரை வெற்றி பெற்றவன் கூற்றுவனே வரினும் கோட்பாடு மாறாத மனவலிமை பெற்றவன். தம் குடிமக்களுக்குக் கவசமாக விளங்கியவன். தன் மனைவிக்கு நல்ல கணவன். பகைவர் பணிவாராயின் அவர்களை ஏற்றுக் கொள்பவன்[135] என்று இச்சேர வேந்தனின் பெருமையை அழகுற எடுத்துரைத்ததிலிருந்து கௌதமனாரின் கேள்வி ஞானத்தை அறிய முடிகின்றது.

**ஏணிச்சேரி மூடமோசியார்**

ஊரும் பெயரும் உடைத்தொழிற் கருவியும்
யாருஞ் சார்த்தியவையவை பெறுமே[136]

என்ற நூற்பாவிற்கு பேராசிரியர் ஊரும் பெயரும் என்பன்; உறையூர் ஏணிச்சேரி மூடமோசியார், பெருங்குன்றூர் பெருங்கௌசிகனார், கடியலூர் உருத்திரங்கண்ணனார் என்பன அந்தணர்க்குரியன என விளக்கிச் சொல்லுதன் வழி இவர்கள் அந்தணப்புலவர்களென்பதை அறியலாம். ஏணிச்சேரி என்னும் ஊரினர் உறையூரில் தங்கியிருந்ததனால் மூடமோசி என்னும் இயற்பெயரினை உடையவர். உறையூர் ஏணிச்சேரி மூடமோசி எனப்பட்டார் இவர். சோழன் முடித்தலைக் கோப்பெரு நற்கிள்ளியின்

போர்ச்செயல் மற்றும் வீரவுணர்வையும் பாடியுள்ளார்.[137] மேலும் இவர் 'ஆய் அண்டிரனின் கொடை நலம், போர்த் திறம், களிறு வழங்கும்திறம், பெருமை, குடிப்பெருமை சான்றாண்மைக்குணம், கொடைமடம் ஆகியவற்றை' புறத்தில் பாடியுள்ளதிலிருந்து இவர் ஆயின் மேல் கொண்ட உண்மையானப் பற்றை அறியமுடிகின்றது[138].

**கடியலூர் உருத்திரங்கண்ணன்**

கடியலூர் என்னும் ஊரைச் சேர்ந்த உருத்திரன் மகன் கண்ணன் என்பதாகும். பட்டினப் பாலையில் இவர் கரிகாற்பெருவளத்தானின் நாடான சோழ நாட்டை வளமாக்கும் காவிரிப்பாக்கம், தவப்பள்ளி, வருண வழிபாடு, காவிரிப்பூம்பட்டினச் சிறப்பு, அங்காடித்தெரு, பூம்புகாரில் வாழும் மக்கட்சிறப்பு, கரிகாலனின் போர்த்திறம், வெற்றிகன், இன்பச் சிறப்பு ஆகியவற்றை எடுத்துரைத்ததன் மூலம் நாம் அக்காலப் பட்டினத்தின் சிறப்பை அறியமுடிகின்றது.

**இரணியமுட்டத்துப் பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகனார்:**

இரணிய முட்டம் என்பது பாண்டிய நாட்டில் உள்ள யானைமலை முதலிய இடங்களைத் தன்பாற் கொண்டதாகிய ஒரு சிறிய நாடாகும். இவர் மலைபடுகடாமில் இசைக்கருவியின் இயல்பு, பண்ணியல்பு கூறியிருப்பது அவரது இசையறிவினை வெளிப்படுத்துகின்றது. மேலும் ஐவகை நிலம், மக்கள் இயல்பு, நன்னன்சேய், நன்னனின் பெருமை, மலையில் ஏற்படும் பல்வேறு ஓசைகள் ஆகியவற்றை எடுத்துரைத்துள்ளார்.

**தொகுப்புரை:**

அந்தணர், வேதியர் என்ற சொற்களே மிகுதியாக சங்க இலக்கியத்தில் பயின்று வந்துள்ளது. அந்தணர் 'குலத்தை' 'கோத்திரம்' என்றனர். கோத்திரப்பெயர் பெரும்பாலும் புகழ்பெற்ற முனிவர்களின் பெயர்களையே கொண்டுள்ளது. அவர்கள் பிரம்மஞானம் பெற்றவர்களாகவும், குருக்களாகவும் சிறந்த ஆசான்களாகவும் இருந்தனர். அரசர்களுக்கும் ஆசான்களாக இவர்கள் இருந்தனர். அந்தணர்க்கு அரசரிடம் பெருமதிப்பும் மரியாதையும் இருந்தது என்பதையும் சங்க இலக்கியம்

வெளிப்படுத்துகின்றது.

அந்தணர் ஓதல், ஓதுவித்தல், வேள்வி வேட்டல், அரசர்களை வேள்வி செய்ய வைத்தல், ஏற்றல் ஈதல் (கௌணியன் விண்ணத்தாயன்) தொழிலையும் செய்தனர்.

கையில் வேதநூல், குடை, கோல், கரகம், ஆகியவற்றுடன் கூடிய தோற்றம் உடையவர்கள்.

மெல்லிய நடை, தூய்மையான உடை, மன அமைதி தரும் தியானம் என அமைதியான வாழ்க்கை வாழ்ந்தனர்.

இந்துக்களின் தீவலம் வந்து திருமணம் செய்யும் வழக்கத்தில் இன்று போல் அன்றும் மணம் புரிவித்து வைத்தனர்.

அந்தணர் மோர், நெய், இராசான்னம் (அரிசி) வற்றல் ஆகியவற்றை அன்றாட உணவாக உட்கொண்டனர். கிளி வளர்த்தனர். பசு வளர்த்தனர் கோழியும் நாயும் அவர்கள் வளர்க்க, விரும்பாத வீட்டு விலங்குகளாயிருந்தன.

அந்தணர் செய்வித்த வேள்வி நாட்டிற்கு வளம் சேர்த்தது. கரும்பை விளைவித்தது. அவர்கள் அமைச்சராகவும் புரோகிதராகவும், தூதுவராகவும், சிறந்த குருவாகவும் மட்டுமின்றி சங்கறுக்கும் வேலையும் சிலர் செய்திருக்கின்றனர்.

அவர்களது புலமைத்திறத்தை அவர்களுக்கு அளிக்கப்பட்ட ‘பிரம்ம தேயங்களே’ பறைசாற்றுகின்றன. அவர்களில் பரணர், கபிலர், பாலைக் கௌதமனார், ஏணிச் சேரி மூடமோசியார், கடியலூர் உருத்திரங்கண்ணனார். இரணிய முட்டத்து பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகனார் போன்றோர் சிறந்த புலவர்களாகப் புகழ்பெற்றுள்ளனர்.

அந்தணர் அருள் தன்மை உடையவர்கள். புலமை உடையவர்கள் என்பதை சங்க இலக்கியப் பாடல்களே எடுத்துக்காட்டுகின்றன.

# இயல் - 3

# அரசர்

சங்க இலக்கியங்கள் ஆட்சித் தலைவனை அரசன், வேந்தன், இறை அல்லது இறைவன், காவலன், கோ எனப் பல்வேறு பெயர்களால் சுட்டுகின்றன. நிகண்டுகள் ஆட்சித் தலைவனை முப்பந்தைந்து பெயர்களால்[1] சுட்டுகின்றன. சங்க இலக்கியத்தைப் பொறுத்தவரை அரசன், மன்னன், இறை அல்லது இறைவன், காவலன் ஆகியவையே மிகுதியாகப் பயின்று வருகின்றன.

சங்க இலக்கியந்தொட்டு இக்கால இலக்கியம் வரை ஆட்சித் தலைவனை 'அரசன்' என்று கூறும் மரபுள்ளது. அரசன் அங்கம் வகிப்பதால் 'அரசாங்கம்' என்று இன்றும் வழங்கப்படுகின்றது. 'ராஜா' என்னும் வட சொல்லிலிருந்து 'அரசன்' தோன்றியது என்பார் ரா.பி.சேதுப்பிள்ளை.[2] 'அரசன்' தமிழ்ச்சொல்லே என்பார் ஞா.தேவநேயன்[3].

தொல்காப்பியம் அகநானூறு, புறநானூறு முதலிய சங்க இலக்கியங்களில் 'அரசன்' எனும் சொல் இடம் பெறவில்லை. ஆனால் இதன் பன்மைப்பெயராகிய 'அரசர்' எனும் சொல் இடம்பெற்றுள்ளது.

### 3.1. அரசனைக் குறிக்கும் வேறு பெயர்கள்

இறை, இறைவன், காவலன், மன்னன், வேந்தன் ஆகியனவாகும்.

'இறை' என்னும் சொல் சங்க இலக்கியத்தில் தங்குதல்[4], இடம்[5], பனைத்தோள்[6], இறப்பு[7], உயர்வு[8] தருதல்[9], இருக்கை[10] சிறிது[11], முன்கை[12], வேந்தன்[13] முதலிய பொருள்களில் ஆளப்பட்டிருக்கின்றது.

'இறைவன்' என்னும் சொல் இல்லத் தலைவன், கடவுள், வேந்தன் என்னும் பொருளில் ஆளப்பட்டுள்ளது. இச்சொற்கள் பெரும்பான்மை ஆட்சித் தலைவனின் பொதுமைப் பண்பையே சுட்டுகின்றன.

'இறையே தவறுடையான்'[14]

என்ற வரியில் 'இறை' எனும் சொல் ஆட்சித்தலைவனைக் குறிக்கின்றது. தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் வஞ்சினம் கூறும் போது தன்னையே 'இறை' என்று கூறிக் கொள்வதைக் காணலாம். இதனை

கொடிய னெம்மிறையெனக் கண்ணீர் பரப்பிக்
குழபழி தூற்றும் கோலேன் ஆகுக[25]

என்ற அடிமூலம் அறியலாம்.

குடிமக்களை பல்வேறு இன்னல்களிலிருந்து காப்பதனால் ஆட்சித்தலைவனைக் 'காவலன்' என்று அழைத்தார். ஆட்சித் தலைவனை, 'காவலன்' என்று கூறுவதில் இருந்து

ஆபயன் குன்றும் அறுதொழிலோர் நூல்மறப்பர்
காவலன் காவான் எனின்[16]

வள்ளுவரின் திறத்தினை அறியலாம்.

'மன்னன்' எனும் சொல் 'மன்' என்ற சொல்லின் அடியாகப் பிறந்ததை

மன்னுயிர்ப் பான்மையுங் கூற்றத் தொருமையும்[17]
மன்னா உலகத்து மன்னுதல் குறித்தோர்[18]

என்ற அடிகள் 'நிலைபோது' என்னும் பொருளிலேயே 'மன்' எனும் சொல்லை வழங்குகின்றன.

சீறூர் மன்னன்[19], ஒரெயில் மன்னன்[20] தொல்குடி மன்னன்[21], தண்ணடை மன்னன்[22], குறுநில மன்னன்[23], பருத்தி வேலிச் சீறூர் மன்னன்[24] என்ற தொடர்கள் பெரும்பாலும் மருதநிலம் சூழ்ந்துள்ள சிறிய ஊர்களின் மன்னனையே குறிப்பதனால் 'குறுநில மன்னர்' என்பதை அறியலாம்.

**வேந்து** என்னும் சொல் புறநானூற்றில் இருபத்தொன்பது இடங்களில் வருகின்றது. இதில் குறிக்கப்படும் பொருள் 'ஆட்சித்தலைவன்'[25] என்பதேயாகும். வேந்தன் பற்றிக் கூறுகையில் ரா.பி.சேதுப்பிள்ளை 'வெம்மை அல்லது நெருப்பிலிருந்து வேந்தன் என்னும் சொல்

உருவாகியிருக்கலாம். தீமைகளை ஆற்றுவதற்கு வேந்தன் தன் கோலை உயர்த்திக் கடுமையான முகத்தோடு தண்டிக்க வேண்டும்'[26] என்ற அடிப்படையில் வந்திருக்கலாம் என்கிறார். ஆனால் அ.சிதம்பரநாத செட்டியாரோ 'அன்பிற்குரிய ஆட்சியாளன்'[27] என்று பொருள் கூறுவர். 'வேந்தன்' என்னும் பெயர் வேய்ந்தோன் என்பதன் மரூஉ வேய்தலாவது முடியணிதல்; முடி அணியும் முத்தமிழரசரையும் முடியுடை மூவேந்தர் என்று கூறுவது மரபு என்கிறார் தேவநேயப்பாவாணர்[28] தொல்காப்பியம் இந்திரனை வேந்தன் என்கிறது.

வேந்தன் மேய தீம்புனல் உலகம்[29].

### 3.1.1. வேந்தர், மன்னர் வேறுபாடு

அரசன், இறைவன், காவலன், மன்னன், வேந்தன் ஆகிய சொற்களில் சங்க இலக்கியத்தில் மன்னன், வேந்தன் ஆகிய இவ்விரு சொற்களின் ஆட்சியே மிகுதி. மன்னன் எனும் சொல் குறுநிலமன்னனையும், வேந்தன் எனும் சொல் முடியுடை ஆட்சித்தலைவராகிய சேர, சோழ, பாண்டியரை குறிக்கும் வகையில்

மன்னர் மன்னன்[30]
மன்னவர் மன்னன்[31]
மன்னர் கோவே[32]
மா மன்னர்[33]

எனும் சங்க இலக்கிய அடிகள் உள்ளன. 'மன்னர்' எனும் சொல் பெரும்பாலும் சிறிய ஊர்கள் பலவற்றிற்குத் தலைவர்களாக இருந்து கொண்டு தங்களுக்கென்று ஒருசிறுபடையும் வைத்திருந்தனர். அப்படி ஒருசிற்றூர் மன்னன் வேந்தனைப் பார்த்து, 'நாற்படைகள் பொருந்திய வேந்தராயினும் எம்மை மதியாதிருப்பின் யாமும் மதிக்க மாட்டோம்; எம்மை மதித்து வரகந்சோறு ஊட்டுபவர் சிற்றூர் மன்னராயினும் அவரையே யாம் பாராட்டுவோம் என்பதை

மண்கெழுதானை ஒண்பூண் வேந்தர்
வெண்குடைச் செல்வன் வியத்தலோ இலமே;
......... ............. .......... ........
........ ..................... ........

சீறூர் மன்னர் ஆயினும், எவ்வயின்

பாடறிந்து ஒழுகும் பண்பி னோரே[34]

உணர்த்துகின்றன. இப்பாடலே 'மன்னர்' எனும் சொல் குறுநில மன்னர் மற்றும் சீறூர் மன்னரையே குறிப்பதை உணர்த்துகின்றன. மகட்பாற் காஞ்சித் துறையைச் சோர்ந்த பாடல்கள் வேந்தனுக்கும் மன்னனுக்கும் உள்ள வேறுபாட்டை நன்குணர்த்துகின்றன. இதனை,

தொல்குடி மன்னன் மகளைக் கேட்டுவந்த

மாமுது வேந்தர்[35]

என்ற புறப்பாடல்கள் வெளிப்படுத்துகின்றது.

### 3.2. மூவேந்தர் மரபு

தொல்காப்பியனார் காலத்திற்கு முன்பு மூவேந்தராட்சி நிலை பெற்றுவிட்டதை

'வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பு'[36]

என்ற நூற்பாவால் அறியலாம். சேர, சோழ, பாண்டியர் தம் மாலையினைப்

'போந்தை வேம்பே ஆரென வருஉம்

மாபெருந் தானையர் மலைந்த பூவும்'[37]

எனக் கூறுகின்றார். தொல்காப்பியரைப் போன்றே சங்க இலக்கியங்களும் சேர, சோழ, பாண்டியரை 'மூவர்' 'தமிழ்கெழு மூவர்'[38] முடிகெழு வேந்தர் மூவர்[39], 'முடியுடை வேந்தர் மூவர்'[40], முரசு முழங்கு தானை மூவர்[41] என மூவேந்தரை குறிப்பிடுகின்றன.

### 3.3. தமிழகத்தின் எல்லை

தமிழகத்தில் மூவேந்தரின் ஆட்சி நிலைபெற்றிருந்த சங்க காலத்தில், அதன் எல்லையானது வடக்கில் இமயமலையினையும், தெற்கில் தென்குமரி மலையினையும், கிழக்கும் மேற்கும் கடலை எல்லையாகவும் கொண்டு விளங்கியது என்பதை புலவர் காரி கிழாரும், குறுங்கோழியூர் கிழாரும் முறையே குறிப்பிடுகின்றனர் என்பதை

'வடாஅது பனிபடு நெடுவரை வடக்கும்

தெனாஅ துருகெழு குமரியின் தெற்கும்

குணாஅது கரைபொரு தொடுகடற் குணக்கும்

குடாஅது தொன்றுமுதிர் பௌவத்தின் குடக்கும்'[42]

'தென்குமரி வடபெருங்கல்

குணகுடகட லாவெல்லை'[43]

என்ற புறப்பாட் டடிகள் மூலம் அறியலாம். தற்போதைய இந்திய நாட்டையே சங்கத் தமிழர்கள் ஆட்சி புரிந்த திறனை இவ்வரிகளே பறைசாற்றுகின்றன.

### 3.4. தமிழும் மூவேந்தரும்

மூவேந்தரும் போரிட்ட நிலையினை

'தமிழ்தலை மயங்கிய தலையாலங் கானத்து'[44]

என்ற அடியில் மூவேந்தரைத் தமிழாகவே குடபுலவியனார் குறிப்பிட்டுள்ளார். மேலும் தமிழ் மொழிக்கும் மூவேந்தர்க்கும் உள்ள உறவை

'வில்லலைத் துண்ணும் வல்லாண் வாழ்க்கை

தமிழ்கெழு மூவர்'[45]

'மண்டினிக் கிடக்கை தண்டமிழ்க் கிழவர்

முரசு முழங்கு தானை மூவர்'[45]

என்னும் அடிகள் வெளிப்படுத்துகின்றன. மேலும் இச்செய்தியானது மூவேந்தர் அவர்தம் மொழியோடு கலந்திருந்ததைக் காட்டுகின்றது.

### 3.5 சேரர்

#### 3.5.1 தொன்மை

மூவேந்தருள் சேர வேந்தரே தொன்மையானவராகவும், சிறப்புமிக்கவராகவும் விளங்குகின்றனர் என்பர் சி.பால சுப்பிரமணியன்.[47] அதற்கேற்ப சங்க இலக்கியங்கள் சேரரது தொன்மை பற்றியேதும் குறிப்பிடவில்லை. ஆனால், 'வானவர்'[48] என்றும் 'கோதை'[49] என்றும் குறிப்பிடுகின்றன. இதற்கு 'வானவர்' அல்லது 'வானகத்துரியவர்'[50] என்று பொருள் கூறுகிறார் கனகசபை. இவை, 'சேரர் பண்டைய காலந்தொட்டு தெய்வ ஈடுபாடு பெற்று விளங்கியவர்'[50] எனலாம்.

### 3.5.2. பெயர்க்காரணம்

'சேரல்' என்றால் 'மலை அடுக்கு' என்று பொருள். மலையடுக்குகள் சேர்த்து பிணைந்து அடுத்தடுத்து நெருங்கி இருப்பதற்குச் சேரல் என்று பொருள். மேற்குத் தொடர்ச்சி மலை பல அடுக்குகளாக உள்ளது. மலைக்கும் கடலுக்கும் இடையில் மலைகளை உட்கொண்ட பகுதி முழுவதும் 'சேரல்நாடு' எனப்படும். அதனால், அப்பகுதியை ஆண்டவர்கள் 'சேரலர்' என்பர் அ.சிதம்பரனார்.

### 3.5.3. சேரநாடும் வளமும்:

மூவேந்தர் நாடுகள் முறையே குடபுலம், குணபுலம், தென்புலம் எனவழங்கப்பெறும். இவற்றுள் குடபுலமே சேர நாடாகும். செந்தமிழ்மொழி வழங்கும் பன்னிரண்டு நாடுகளுள் குட்டம், குடம், கற்கா, பூமி, மலாடு என்ற ஐந்து நாடுகளை உள்ளடக்கியது. இது சேலம், கோவை மாவட்டங்களை உள்ளடக்கியது. மேலும் இதற்கு அயிரை, கொல்லி, பாயல், நன்றா, நேரி போன்ற மலைகள் சிறப்பளித்து நிற்கின்றன.

ஆன்பொருநை, காஞ்சியாறு, குடவனாறு, காரியாறு, பேரியாறு போன்ற ஆறுகள் இந்நாட்டிற்கு வளம் சேர்க்கின்றன. கருவூர், தொண்டி, நறவு, மாந்தை, வஞ்சி ஆகியவை சேரநாட்டுக்குச் சிறப்பளிக்கும் பேரூர்களாகும். சேரநாட்டு வளத்திற்குக் காரணம் மலைபடு பொருள்களே என்பதனை 'வேழம் உடைத்து மலைநாடு' எனக் கூறுவதும். அதனால், இதுவேழக்காடு அல்லது உம்பற்காடு எனவும் வழங்கப்படும்.

### 3.5.4. சேரவேந்தர் மரபும் வேறு பெயரும்

சேர நாட்டையாண்ட சேர வேந்தர், இருகிளையினராகக் காணப்படுகின்றனர்; ஒருவர் உதியன் சேரலாதன் வழி வந்தவர்; மற்றொருவர், இரும்பொறை என்ற மரபில் வந்தவர். இவற்றுள் உதியன் மரபினர் வஞ்சியைத் தலைநகராகவும் சேரநாட்டின் உள்நாட்டுப் பகுதியினையும்; இரும்பொறை மரபினர் தொண்டியைத் தலைநகராகக் கொண்ட கடற்கரைப்பகுதியினையும் ஆண்டவராவார்.

சேர வேந்தர் சேரர், சேரலர் ஆதன், கோதை[52], குட்டுவன்,[53] குடவர்,[54]

கடுங்கோ,[55] பொறையன்,[56] இரும்பொறை, வானவரன், வானவரம்பன் என்னும் பெயர்களால் சுட்டப்படுவதைச் ஙச் இலக்கியக்குறிப்புகள் வழி அறியலாம்.

### 3.6. சோழர்

சோழ அரசின் தோற்றமும் தொன்மையும் அறிய முடியவில்லை. ஆனால் அவர்கள் ஆரியர்க்கு முன் தென்னாட்டில் வாழ்ந்த 'கருப்பு மனிதர்' என்ற பொருளில் வழங்கும் 'கால' அல்லது 'கோல' என்ற வடமொழிச் சொல்லினின்றும் வந்தது என்பர் சிலர். சோளம் விளையும் நாடு 'சோள நாடு' பிறகு சோழ நாடாயிற்று என்பர் சிலர். இவ்வாறு 'சோழர்' என்ற பெயருக்குக் காரணம் கூறுவர் கா.கோவிந்தன்[60].

பழமையும் பெருமையும் பெற்று விளங்கிய மூவேந்தருள் நடுவில் வைத்துச் சிறப்பித்துக் கூறப்படுபவர் சோழர். 'கிள்ளிவளவன் செம்பியன், சென்னி என்ற பிற சொற்களாலும் அழைக்கப்பெறுவர். இவற்றுள் 'கிள்ளி' என்ற பெயர்; 'கிள்' என்னும் சொல்லடியாகப் பிறந்ததாம்; 'கிள்' என்றால் 'தோண்டுதல்' என்று பொருள்; வளவன் என்றால், 'காடு கொன்று நாடாக்கி குளம் தொட்டு வளம் பெருக்கியோர்' என்பது பொருள். 'செம்பியன்' என்பது தன்பால் அடைக்கலம் புகுந்த புறாவின் பொருட்டுத் துலைபுக்க சிபி மன்னன் மரபினர் என்று கா.கோவிந்தன்[61] கூறுவார்.

#### 3.6.1. எல்லை

சோழநாடு, செந்தமிழ் நாட்டினைச் சேர்ந்த பன்னிரு நிலங்களில் புனல்நாடு, பன்றிநாடு, அருவாநாடு என்பவற்றை உள்ளடக்கிய பெருநாடாகும்.

சோழநாடு தற்போதைய தஞ்சை, திருச்சி, புதுக்கோட்டை மாவட்டங்களையும், வட தென்னார்க்காடு மாவட்டங்களின் பகுதிகளையும் உள்ளடக்கியது. சோழநாட்டெல்லைப் பற்றிக் கூறும் பழைய வெண்பா பற்றி

கடல் கிழக்குத் தெற்கு கரைபுரள் வெள்ளாறு

குடதிசையில் கோட்டைக் கரையும் – வடதிசையில்

ஏனாட்டு வெள்ளாற் றிருப்பத்து நாற்காதம்

சோணாட்டிற் கெல்லை யெனச் சொல்[62]

கூறும்போது அதன் சிறப்பை அறிய முடிகின்றது.

### 3.6.2 சோழ நாட்டு பேரூர்களும் தலைநகர்ச் சிறப்பும்

சோழநாட்டுப் பேரூர்களாகப் புகார், உறையூர், அழுந்தூர், ஆவூர், வெண்ணில், இடையாறு, குடந்தை முதலாயின கூறப்படுகின்றன. அவற்றுள் புகாரும் உறையூரும் தலைநகரங்களாகச் சிறப்புப் பெற்றன என்பதை

'சோழர் உறந்தை'[62(அ)]

'சோழன் மூதூர்ப் பேராச் சிறப்பின் புகார்'[63]

என்ற அடிகளால் அறியலாம். சோழர் தலைநகரங்களுள் 'உறையூரே' பழமையானதாகத் தோன்றுகிறது. ஓய்மா நாட்டு நல்லியக் கோடனைப் பாராட்டும் இடைக்கழி நாட்டு நல்லூர் நத்தத்தனார்

'வருபுனல் வாயில் வஞ்சி'[64]

'மகிழ்நனை மறுகின் மதுரை'[65]

'ஓடாப் பூட்கை உறந்தை'[66]

என்று குறிப்பிடும் அடிகளில் உறந்தையே சோழரின் தலைநகராகக் குறிப்பிட்டுள்ளார். உறந்தை, கரிகாலன் காலத்தில் புதுப்பிக்கப் பட்டதை[67] அறியமுடிகின்றது. 'காவிரிப்பூம்பட்டினம்' என அழைக்கப்பெறும் புகார், அகநகர், புறநகர் எனவும்; பட்டினப்பாக்கம், மருவூர்ப்பாக்கம் எனவும் வழங்கப்பட்டன.

### 3.6.3 சோழ நாட்டு வளம்:

சோழ நாடு சோறுடைத்து

என்ற சிறப்பினையுடையது. சோழநாடு அச்சிறப்பிற்கு காரணமாய் இருப்பது காவிரியாறே; இதனால் சோழநாடு காவிரிநாடு, காவிரி சூழ்நாடு, காவிரி புரக்கும் நாடு என்றெல்லாம் அழைக்கப்பெற்றது. காவிரியோடு பல பேராறுகளும் கலந்து பாய்த்து சோழ நாட்டை வளமாக்கின. எனவே இந்நாட்டை 'நீர்நாடு' எனவும் புனல்நாடு எனவும் பெயரிட்டழைப்பர்.

‘தென்னாட்டு நெற்களஞ்சியம்’ எனப் போற்றப்பட்ட சோழநாடு இன்று காவிரி பொய்த்துப் போன நாடாகிவிட்டது. ஆனால் பழந்தமிழ் சோழநாட்டில் ஒரு வேலி நிலத்தில் ஆயிரம் கலம் நெல் விளைந்ததை

‘சாலி நெல்லின் சிறைகொள் வேலி
ஆயிரம் விளையுட் பாகக்
காவிரி புரக்கும் நாடு’[68]

எனக்கூறுகின்றது. நெல் விளைச்சலைக் குறிப்பிடும்போது ஆலங்கிழார்,

‘ஒருபிடி படியும் சீறிடம்
எழுகளிறு புரக்கும் நாடு’[69]

ஒரு களிறு படுக்குமிடத்தில் ஏழு களிறுக்குத் தேவையான உணவு விளையும் என்கிறார். இது சோழ நாட்டின் வளத்தை வெளிப்படுத்துகின்றது.

### 3.7. பாண்டியர்

பாண்டிய வேந்தர்கள் முச்சங்கங்கள் வைத்து இருந்ததை அட்டவணை தெரிவிக்கின்றது. மூன்றாவது சங்கம் மதுரையில் தோற்றுவித்தனர். இச்சங்கங்களில் பாண்டிய வேந்தர் எழுவர், ஐவர், மூவர் எனக் கவியரங்கேறினர் என்பதை இறையனார் அகப்பொருள் உரை[70] கூறுகின்றது.

புலவர் பலர் கூடி ஆராயும் சங்கம் என்றோர் அமைப்பு இருந்ததை

ஓங்கிய சிறப்பி னுயர்ந்த கேள்வி
மாங்குடி மருதன் றலைவ னாக
உலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பிற்
புலவர் பாடாது வரைகவென் நிலவரை[71]

எனத் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் உரைப்பதிலிருந்து தெளிவுபடுத்தலாம்.

### 3.7.1. பாண்டியர் பெருமை:

தொல்காப்பியத்திற்குப் பாயிரம் எழுதிய பனம்பாரனாரும்.

நிலந்தரு திருவிற் பாண்டியன் அவையத்து
அறங்கரை நாவின் நான்மறை முற்றிய
அதங்கோட் டாசான்[72]

என உரைப்பதிலிருந்து பாண்டியர் அவையில் புலவர் கூடி தமிழாராய்ந்தனர்; நூல்கள் அரங்கேற்றப்பட்டன என்பது புலப்படுகின்றது.

பாண்டியர் சங்கம் வைத்து தமிழ் வளர்த்ததனால் மதுரையும் தமிழும் பாண்டியரும் இணைத்தே பேசப்படுகின்றன. சான்றாக

தமிழ்கெழுகூடற் றண்கோல் வேந்தே[73]

'தமிழ்நிலை பெற்ற தாங்கரு மரபின்

மகிழ்நனை மறுகின் மதுரை'[74]

தமிழ் வையைத் தண்ணம் புனல்[75]

என்ற வரிகள் சேரருக்கும் சோழருக்கும் இல்லாத தமிழ் வளர்த்த பெருமை பாண்டியரையேச் சாரும்.

### 3.7.2. எல்லை

தென்புலம் என்பது பாண்டியர் நாட்டைக் குறிக்கும். இது பழனிமலைத் தொடர்க்குத்தெற்கணுள்ள நிலப்பகுதியாகும்.

### 3.7.3. பேரூர்களும் தலைநகர்ச் சிறப்பும்

கொற்கை, மதுரை போன்றவை முக்கிய பேரூர்களாகும். அவற்றுள் தலைநகர் மதுரையாகும். மதுரை, இப்பேரரசின் தலைகராம். சிறந்த வாணிப மையமாகவுமிருந்தது. மதுரை, நாளங்காடி, அல்லங்காடி எனும் இருபெரும் அங்காடிகளை உடையது. அவற்றுள் நாளங்காடி கடல்நீரைப் போன்று முகர்தலால் குறையாமலும், பெய்தலால் மிகாமலும் இருக்கின்றது. எப்போதும் வருவதும் போவதுமாய் பொருட்கள் உள்ளதனால் குவிந்து கிடக்கின்றன[76].

**வளம்:**

மதுரையைப் போல் கொற்கையும் சிறப்புற்று விளங்கியது. கொற்கையை அறம் பிறழாது காத்தனர்[77]. கொற்கை முத்து விளைச்சலுக்குப் பெயர் பெற்றது. திரை கொண்டு வரும் முத்துக்கள், அங்குவரும் குதிரைகளின் கால்களை சிதைத்து மேற்செல்லவிடாமல் தடுக்கும்[78]. புகழ்மிக்க கொற்கையில் முத்தும் வலம்புரியும் கலந்து காட்சிதரும்[79]. முத்துச்

சிற்பிகளை கள்ளுக்கு விலையாகக் கொடுத்தனர் [80] என்று அகநானூறு கூறுவதிலிருந்து கொற்கையின் வளத்தை அறிய முடிகின்றது.

### 3.7.4. பாண்டியர் துறைமுகங்கள்

தொண்டியும், காயலும் முதன்மைத் துறைமுகங்களாக விளங்கின.

### 3.7.5. பாண்டியரின் சிறப்பு பெயர்கள்

பாண்டியரைப் பாண்டியன், செழியன், வழுதி, பூழியன் மாறன், தென்னவன், பஞ்சவன் எனப் பழந்தமிழ் இலக்கியங்கள் சுட்டுவதன் வழி அவர்களின்சிறப்பை அறியலாம்.

### 3.7.6. மதுரையின் சிறப்பு

மதுரை நகரில் நடுவே கோயில் அமைந்துள்ளதாலும் அதனைச் சுற்றித் தெருக்களும் அமைந்திருக்கின்றன. அது பார்ப்பதற்கு தாமரை மலர் மலர்ந்திருப்பது போன்று காட்சியளிக்கின்றன. எனவே மதுரை நகர் திருமாலின் உந்தியில் மலர்ந்த தாமரை மலர் என்றும் கூறப்படுகின்றது.

மாயோன் கொப்பூழ் மலர்ந்த தாமரைப்
பூவோடு புரையும் சீரும் பூவின்
இதழகத் தனைய தெருவம் இதழகத்து
அரும்பொருட்ட னைத்தே அண்ணல் கோயில்[88]

என்பதிலிருந்து மதுரையின் தெருக்களமைப்பு திட்டமிட்டுக் கட்டப்பட்டதாகத் தெரிகின்றது. மதுரைக்கு மேலும் சிறப்பு சேர்ப்பது 'வையையாறு அது பாண்டிய மன்னரின் குடிப்பெருமைக்கு அடிப்படையாக அமைந்தது. வையை குடிமக்களின் வாழ்வை வளம் பெறச் செய்தது'[89] என்பதை பரிபாடல் வழி செ.மகேஸ்வரி விளக்கியுள்ளார்.

## 3.8. போர்:

மனித வரலாற்றில் ஒவ்வொரு கால கட்டத்தில் 'ஒவ்வோர் இயல்பு சிறப்பாகப் போற்றப்படுவதுண்டு' சங்க காலத்தில் வீரம் முதன்மையாகப் போற்றப்பட்டது. பழந்தமிழர்கள் இயல்பாகவே போர்க்குணம்

படைத்தவர்களாகவே விளங்கினர். எடுத்துக்காட்டாக இரவு பகல் பாராது கடல் நடுவில் சென்று மீன் பிடிப்பது : காடுகளிற் சேன்று விலங்குகளை வேட்டையாடுவது; சீறித்துள்ளிக் கொம்புகளால் குத்திக் கொல்லுகின்ற போர்க்குணமிக்கக் காளைகளைத் தழுவிப் பிடித்து அடக்குகிறவனுக்கு தம்மகளை மணஞ்செய்து கொடுப்பதும் வழக்கமாயிருந்தது.[90]

### 3.8.1. வீர உணர்வு

போர் பற்றிய உணர்வு இயல்பிலேயே இரத்தத்தோடு கலந்திருந்தது. இளைஞர்கள் போரென்றால் பூரித்தெழும்[91] இயல்பினராகவும், போரை விரும்பி ஆரவாரிக்கும் கண்களையுடைய வராகவும்[92] விளங்கினர். காற்றினால் அதிரும் முழவின் ஒலிகூட அவர்களுக்கு போர்ப்பறையொலியாகக் கேட்டது அதைக் கேட்டு மகிழ்ந்தனர் என்பதை

பொதுவிற் றூங்கும் விரியுறை தண்ணுமை
வளிபொரு தெண்கண் கேட்பின்
அதுபோ ரென்று மென்னையு முளனே[93]

எனப் புறம் கூறுகின்றது. ஆண்களுக்கு மட்டுமல்ல பெண்களுக்கம் வீர உணர்வு அதிமிருந்ததனை

.......... ............ வேந்தனொடு
நாடுதரு விழுப்பகை யெய்துக வெனவே[94]

என்ற அடிகளில் ‘‘பெண்ணொருத்தி, ‘தன் தலைவன் போரில் வெற்றி பெற்றுப் புகழ் எய்த போர் ஏற்பட வேண்டும் என்பதை விரும்புகிறாள்’’ இதனை அள்ளூர் நன்முல்லையார் காட்டுவதிலிருந்து போரின் வெற்றியே சிறந்த வீரமாகக் கருதப்பட்டதை உணரமுடிகின்றது.

### போர்வீரர் கடமை

‘போர் வீரர்கள் வில்வாளர் பயிற்சியும், யானையைக் கொல்லும் திறமும் பெற்றிருக்க வேண்டும்’ என்பதை புறம்

ஒளிறுவா ளருஞ்சம முருக்கி
களிறெறிந்து பெயர்தல் காளைக்கு கடனே[94(அ)] என்கிறது.

### 3.8.2. போருக்கான காரணங்கள்

போர் சங்க காலத்தில் அடிக்கடி ஏற்பட்டதற்குப் பல காரணங்கள் உள்ளன. அவற்றுள் சில: குடிப்பெருமை நிலைநாட்டல், எல்லைப் பிரச்சனை, மண்ணாசை, மகள் மறுப்பு, புகழ்பெறுமார்வம், பேராசை, வீர இறப்பு, அரசுரிமை, ஆட்சியுரிமை, போறாமை, இனமானம், மறப்பண்பு, பெருமை ஆகியவையாகும்.

### *3.8.3. மூவேந்தர் போருடற்ற காரணங்களாவன:*

*தன்னாட்டில் வாழும் குடிமக்களுக்கு தேவையான இடம், வளம் போன்றவற்றிற்காகப் போரிடுவதைத் தொல்காப்பியம்*

*எஞ்சா மண்ணாசை வேந்தனை வேந்தன்*
*அஞ்சுதகத் தலைச்சென் றடல்குறித் தன்றே*[95]

*என்கிறது. மேலும் இதனைப் புறநானூறும்*

*வையங்காவலர் வழிமொழிந் தொழுகப்*
*போகம் வேண்டிப் பொதுச்சொற் பொறாஅ*
*திடஞ்சிறி தென்று மூக்கந் துரப்ப*[96]

*என்கிறது.*

***அரசுரிமைக்காத*** பகைவரின் காவலிலிருந்து தப்பிச் சென்று கரிகால் பெருவளத்தான் போர் செய்தான்.[97] ஆட்சியுரிமையை, அதாவது முறையாக வருவதற்கு முன்னரே **தன் உரிமையை நிலைநாட்டுவதற்கு** அல்லது பெறுவதற்கு தாயத்தாருடன் போர் நிகழ்வதுண்டு. 'நலங்கிள்ளிக்கும் நெடுங்கிள்ளிக்கும் நடந்த போர்' இதற்குச் சான்றாகும்.[98] **மாற்றார்** தன் ஆற்றலை **இகழ்வது** கண்டு பொறாது போருக்கெழுந்தான் சோழன் நலங்கிள்ளி[99].

**பொறாமை** காரணமாக 'மூவேந்தரினும் புகழில் மேம்பட்டு விளங்கிய பாரியுடன் மூவேந்தர் போரிட்டனர்'[100]

பழந்தமிழ் வேந்தரிடம் புகழ் வேட்கை மிக்கிருந்தது என்பார் எம்.ஆரோக்கியசாமி பெண் கோடல் காரணமாக போர் நிகழ்ந்ததை

புறப்பாடல்கள் பதினெட்டு (336–354) கூறுகின்றன.

இனமானம் காக்க, சேரன் செங்குட்டுவன் தன்னை இகழ்ந்த வடபுலத்தரசரை வெல்ல இமயம் நோக்கி படையெடுத்தான்[102].

தலைமை[103] விருப்பமும் போருக்கான காரணங்களுள் ஒன்றாகக் கூறலாம். சான்றாக வெண்ணிப்பறந்தலை, வாகைப்பறந்தலை, கூடற்பறந்தலை, தலையாலங்கானம், நெய்தலங்கானம், கருவூர், கானப்பேர், கழுமலம், தகடூர் என்னும் இடங்களில் நடைபெற்ற போர்கள் ஆகியவற்றைக் கூறலாம்.

சேரன் செங்குட்டுவன் பொதிய மலையில் கல்எடுக்காது, இமயத்தில் கல்லெடுக்கச் சென்றமை அவனது போர் வேட்கையை[104] உணர்த்துகின்றது.

பெருமைக்காகப் போரிடுவதுண்டு 'ஒருவன் தாங்கிய பெருமை[105] புண்கிழித்து முடியும் மறத்தினானும்' என்னும் தொல்காப்பிய அடிகள் இதனை உணர்த்தும்.

போரில் வெற்றி பெற்ற வேந்தன் தான் பெற்ற வெற்றியைத் தன் பெயரோடு இணைத்து வழங்குவதை சங்க கால வேந்தர் மரபாகக் கொண்டிருந்தனர் என்பதை

1. ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன்
2. ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன்
3. கருவூர் ஏறிய ஒள்வாட் கோப்பெருஞ்சேரலிரும்பொறை
4. கானப்பேர் எயில் கடந்த உக்கிரப்பெருவழுதி
5. செருப்பாழி எறிந்த இளஞ்சேட்சென்னி
6. தகடூர் எறிந்த பெருஞ்சேரலிரும்பொறை
7. தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன்
8. பாமுளூர் எறிந்த நெய்தலங்கானல் இளஞ்சேட்சென்னி
9. போரவைக் கோப்பெருநற்கிள்ளி

இப்பெயர்ச் சிறப்பினின்று அறியலாம்.

போரில் விழுப்புண் பட்டிருந்தவனுக்கே துறக்கம் நல்கும் என்ற நம்பிக்கையும் போருக்குக் காரணமாய் இருந்ததை

நோற்றோர் மன்ற தாமே கூற்றம்

கோளுற விளியாற்பிறர் கொளவிளிந் தோர்[106]

என்ற மாமூலனார் அடிகள் மூலம் அறியலாம்.

### 3.9. போருக்கான ஆயத்த நிகழ்வுகள்

நிமித்தம் பார்த்தல், வீரரை அழைத்தல் போர் முரசம் அறைதல், போர்ப்பூச் சூடல், போர் முழங்கும் கருவிகள், வஞ்சினம் மொழிதல், நாள் பார்த்து குடையும் கோளும் புறப்படுதல், படைவளம் ஆகியவை போருக்கு அவசியம் தேவை.

#### 3.9.1. நிமித்தம் பார்த்தல்

போருக்குப் புறப்படுமுன் நற்சொல் கேட்டல் வழக்கம். அதனைக் கேட்க படைத்தலைவர் ஏவலால் சென்றோர் போக அங்கே செம்முதுப்பெண்டிர் நெல்லையும் மலரையும் தூவி வழிபடுவர். அப்போது அங்கு கேட்கும் சொல்லை நற்சொல் என்பர். இதனை

நென்னீ ரெறிந்து விரிச்சி யோர்க்கும்

செம்முது பெண்டின்

எனப் புறம் கூறுகின்றது. மேலும் படைக்கலங்களை எடுத்துச் செல்லவும் நிமித்தம் பார்த்தனர் என்பதை

குடபுல மருங்கின் உய்ம்மார் புள்ளோர்த்துப்

படையமைந் தெழுந்த பெருஞ்செய் ஆடவர்[108]

என அகநானறு காட்டுகின்றது. மேலும் ‘உன்னம்’ என்பது ஒருவகை. அது போர்வீரர் நிமித்தம் காண நிற்கும். போரில் வெற்றி கிடைக்குமாயின் அம்மரம் தழைத்தும், இல்லையாயின் வாடியும் காணப்படும் என்பர்[109].

இவற்றிலிருந்து வேந்தரும் மறவரும் பெரும்பான்மை நிமிர்த்தம் பார்ப்பதை அறியமுடிகின்றது. இவற்றிற்கு காரணம் ‘மறமே பாடே’

என்கிறார் அரங்க.இராமலிங்கம்[110].

### 3.9.2. வீரரை அழைத்தல்:

போருக்கு வருமாறு வீரரை தண்ணுமையை முழக்கி அழைப்பர். போர்க்காலத்தில் தூதுவனை தன் நாட்டிற்குள் அனுப்பி வேந்தர் வீரர்களை திரட்டுமாறு கூறுகிறான். அப்போது மறவன் ஒருவன், 'நூலரிமாலை சூடிக் காலால் நடந்து வந்ததைப் புறம்'

வருகதில் வல்லே வருகதில் வல்லென
வேந்துவிடு விழுத்தூ தாங்காங் கிசைப்ப
நூலரி மாலை சூடிக் காலின்
தமியன் வந்த மூதி லாளன்[112] என்கிறது.

### 3.9.3. முரசறைதல்:

போர் முரசு வேந்தனுக்குரிய மதிப்பினைப் பெறும். எனவே அதனைப் பாதுகாப்பது மன்னனின் முதற்கடமையாகும். அது அழிக்கப்படுமானால் வேந்தன் தோற்றவனாகக் கருதப்பட்டான். பகை வேந்தரை அவனது முரசுடனே கைப்பற்ற விரும்புவர்.

முரசு பெரும்பாலும் வெட்டி வீழ்த்தப்பட்ட காவல் மரத்தில் செய்யப்படும்[113]. அம்முரசின் மேல் போர்த்த காளையை வென்ற காளையின் தோலும், புலியை வீழ்த்திய ஏற்றின் தோலும் பயன்படுத்தப்படும்.[114] முரசு இறைத்தன்மையுடையதாக கருதப்பட்டு இந்திரவில் போல் மாலையை முரசத்திற்கு அணிவர்[115]. முரசிற்கு அரிய பலியிட்டு பரவுவர். செந்தினையினைக் குருதியொடு கலந்து தூவிப் பலியிடுவர். வலக்கையில் கடிப்பினை ஏந்தி முரசு முழங்கும் வீரர், தொடியணிந்த தம் தோளோச்சிப் புடைத்து முரசினை முழங்குவர்.[116] அதன் முழக்கமானது இடிமுழக்கம்[117], கடல் ஒலி[118], அருவி ஒலி[119] ஆகியவற்றிற்கு ஒப்பிடப்படும். முரசு முழங்க வீரர் களத்தில் புகுந்து போரிடுவர்[120].

### 3.9.4. போரில் முழங்கும் கருவிகள்

போர் தொடங்குவதற்கு முன்னால் போர் முரசு முழங்குவதோடு

தடாரிப்பறை[121], போர்ப்பறை[122], வயிர்[123], சங்கு[124] மதலியனைவகுளம் ஒலித்தன. இவை வீரர்களுக்கு உணர்ச்சியூட்டவும், வீறு கொள்ளவும் முழக்கப்பட்டதாகத் தெரிகின்றது.

### 3.9.5. போர்ப்பூச் சூடல்

போருக்குப் புறப்படுமுன் தன் மறவர்கட்கு அவ்வப்போது போருக்குரிய பூவையளித்தல் மரபாகும் என்கிறார் முனைவர் அ.தெட்சிணாமூர்த்தி[125] இதனைப் புறப்பாட்டொன்று

பூக்கோ ளின்றென் றறையும்
மடிவாய் தண்ணுமை யிழிசினென் குரலே[126]

என்று போர்ப் பூவைச் சூடுமாறு தண்ணுமை முழக்கி கூறுவதிலிருந்து அறிய முடிகின்றது.

தானாகவே இடம் பெயர இயலாப்பசுக்களை மட்டும் காவலர்களை விட்டு கொண்டு வரும்படி செய்தனர். அப்போது அவர்கள் வெட்சிப்பூவைச் சூடி கவர்ந்து வருவர். வெட்சிமறவர் கவர்ந்து சென்ற பசுக்கூட்டங்களை அந்நாட்டுமறவர் அறிந்து அவற்றை கரந்தைப்பூச் சூடி மீட்டுச் செல்வர். பகைவர் கோட்டையைத் தாக்காமல் காவல் செய்யும் வீரர்கள் நொச்சிப்பூவை அணிந்திருப்பர். பகைவர் படையைக் கைப்பற்றியவுடன் உழிஞைப்பூவை அணிவர் தும்பைப்பூவை யணிந்து இருபடையும் போரிடும். வெற்றி பெற்ற படைவீரர்கள் வாகைப்பூவையணிந்து கொண்டாடுவர்.

### 3.9.6. வஞ்சினம்

போருக்குச் செல்லுமுன் வேந்தரும், வீரரும், வஞ்சினம் உரைத்தல் மரபு. அது அவர்களை ஊக்கப்படுத்தி சிறப்பாகப் போரிடச் செய்யும் வஞ்சினத்தை ‘ஒன்றுமொழி’ என்றும் உரைப்பர். வீரர் தாம் உரைத்த வஞ்சினம் பொய்த்துப் போகாதவாறு செயல்படும் மறப்பண்புடையவர் என்பதை,

வஞ்சின முடித்த வொன்றுமொழி மறவர்[127]

என்ற அடியால் அறியலாம். ஆடுகோட்பாட்சேரலாதனின் படைவீரர்கள் அவனைப் போலவே பேராண்மை மிக்கவர் என்பதை

*இன்று இனிது நுகர்ந்தனம்: ஆயின், நாளை*
*மண்புனை இஞ்சி மதில் கடந்தல்லது*
*உண்குவம் அல்லேம் புகா எனக் கூறிக்*
*கண்ணி கண்ணிய வயவர் பெருமகன்*[128]

*என்ற வரிகள் உணர்த்துகின்றன.*

*'கண்டார் விரும்பும், அழகுடைய மதிலை அழித்தன்றி உணவு உண்பது கிடையாது'*[129] *என்றும்; போரில் புண்பட்டு வீழ்வதன்றி வேறில்லை*[130] *என்று வஞ்சினம் உரைக்கும் வீரரையும் காணலாம். இவ்வஞ்சினத்தை*

*'தலைத்தா ணெடுமொழி தன்னொடு புணர்தல்'*

*என்றும்; வேந்தர் உரைக்கும் வஞ்சினத்தை*

*இன்னது பிழைப்பின் இதுவா கியரெனத்*
*துன்னருஞ் சிறப்பின் வஞ்சினத் தானும்*[132]

*என்றும் தொல்காப்பியம் வேறுபடுத்தி உரைக்கின்றது. ஒல்லையூர், தந்த பூதப்பாண்டியன் 'நான் பகைவரைப் போரில் தொலைக்காவிட்டால் என் மனைவியை விட்டுப் பிரிவேனாக'*[133] *என்று வஞ்சினம் உரைத்தான்.*

### சோழன் நலங்கிள்ளியின் வஞ்சினம்:

*இச்சோழ மன்னன், 'பகைவரைத் தான் வெல்லாவிட்டால் காதல்' என்பதையே அறியாத பொதுமகளிரொடு கூடுகின்ற இழிநிலை தனக்கு வருவதாக என்று வஞ்சினம் உரைத்தான். இதே போன்று தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன்*[135]*, கரிகாற் பெருவளத்தான்*[136]*, சேரன் செங்குட்டுவன்*[137] *ஆகியோரும் வஞ்சினம் உரைத்தனர்.*

### நாள் பார்த்து வாளும் குடையும் புறப்படுதல்

*போரிட விரும்பும் மன்னன் தன் கொற்றக்குடை, வாள் ஆகியவற்றை நல்ல நாளில் அனுப்புவது மரபு. தனக்கேற்ற நாள் பார்த்து வாள், குடையை அனுப்பினர். அதற்கான சான்றுகளே சங்க இலக்கியத்தில் இல்லை. ஆனால் சிலம்பில் திருமாவாளவனும்*[138]*, சேரன் செங்குட்டுவனும்*[139] *நாள்கோள் பார்தது வாள், குடை அனுப்பிய செய்திகள் உள்ளன.*

**மாலை சூடிப் புறப்படுதல்**

போருக்கெழும் வேந்தரும், வீரரும் தத்தமக்குரிய மாலையினைச் சூடுதல் மரபு, சேர, சோழ, ாண்டிய மன்னர்கள் முறையே பனை, ஆத்தி, வேம்பு மாலைகளைச் சூடினர் என்பார் தொல்காப்பியர். மூவேந்தரும் தத்தமக்குரிய மாலையினை அணிந்து போரிட்டதை

இரும்பனம் போந்தைத் தோமுங் கருஞ்சினை
அரவாய் வேம்பின் அங்குழைத் தெரியலும்
ஓங்கிருஞ் சென்னி மேம்பட மிலைந்த
இருபெரு வேந்தரு மொருகளத் தவிய

என்று பொருநராற்றுப்படை கூறுவதிலிருந்து அறியலாம்.

### *3.10. கொடிகள்*

மூவேந்தரும் முறையே வில், புலி, கயல் உருவம் பொறிக்கப் பட்டக் கொடிகளைத் தமக்குரியனவாகக் கொண்டிருந்தனர் என்பதைச் சிலம்பும் மணிமேகலையும்

'உழைப்புலிக்கொடி'[141]
'சிலைக்கயல் நெடுங்கொடி'[142]

என்கிறது.

### *3.11. காவல் மரம்*

காவல் மரம் நாட்டையும் மக்களையும் காப்பாற்றும் என்று நம்பினர்[143]. பண்டைத்தமிழர் புன்னை வேங்கை, வேம்பு ஆகியவையாகும். 'கடிமரம் அன்று சில அரசரால் தலை நகரில் மட்டும் வளர்க்கப்பட்டது'[144] ஆனால் இன்று சோலைகளிலும், வீடுகளிலும், ஊர்ப்புறங்களிலும் வளர்க்கப்படுகின்றது.

அரசன், தம் பகைவரின் காவல் மரத்தை முதலில் வெட்டுதல் மரபு. அதைக் காப்பது அரசனின் முதற்கடமையாகவும் இருந்தது. ஏனென்றால், காவல் மரத்தையழிப்பது வெற்றி பெற்றதற்குச் சமமாகச் கருதப்பட்டது. தலையாலங்கானத்துச் செரு வென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் பகைவரின் காவல் மரமழித்ததையும்[145], இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன்

தம் பகைவரின் காவல் மரமான கடம்பினை வெட்டி வீழ்த்தியதையும்[146] சான்றாகக் கொள்ளலாம்.

### 3.12 படை

படை என்னும் சொல் ‘அழிப்பது’ என்னும் பொருள்படும். படை ஒரு பெரிய அமைப்பு, கடல் போன்றதென்பர். அதன் அழிக்கும் திறனைப் பார்த்து அதனை நெருப்பிற்குச் சமமாகக் கூறினர். காலாட்படை, குதிரைப் படை, யானைப்படை, தேர்ப்படை அடங்கியது ‘படை’ ஆகும். இவ்வாறு வரிசைப்படுத்தக் காரணம் யாதெனில், காலாட்படையே எண்ணித் துணிந்து போரிடுவது மட்டுமின்றி புகழையும் துறக்கத்தையும் வேண்டுவது; வலுவாலும் கடுஞ்சீற்றத்தாலும், இரண்டாவதாக கருதப்படுவது யானைப்படை; பிறகு, யானைக் கடுத்தபடி போர்ப்பண்புகள் மிகுந்தது குதிரைப்படை; அதற்கடுத்தது தேர்ப்படை. இடையூறுகளைப் பொருட்படுத்தாத வெற்றிப்படைகளே அரசனுடைய செல்வத்தின் ஆதாரம்[150] என்று குறள் கூறும்

‘படை’ பற்றி வள்ளுவர் கூறுகையில், ‘கூற்று உடன்றுமேல் வரினும் கூடி எதிர்நிற்கும் ஆற்றலுடையதே படை’[151] என்றும்; மாற்றாரால் வகுக்கப்பட்டுத் தன்மேல் வந்த படையின் போரை விலக்கும் வகுப்பறிந்து, வகுத்துக் கொண்டு அவரது முன்படையின் தாக்குதலைத் தடுப்பதே படை[152] ஆகும்.

படைத்தலைவன், அரசன் போர்க்களத்தில் மடிந்தானாயின் படைகளைத் தன் மன்னனது கொடிக்கீழ் ஒன்று திரட்டி தன் தலைமையில் போரைத் தொடர்ந்து செய்வான்[153].

படைக்கு தைரியம், தற்காப்புத்திறன் ஆகிய வற்றினின்று சிறிதும் குறையாத நிலை இருக்க வேண்டும். மேலும், அது பார்வைக்குத் தோற்றப்பொலிவுடன் இருக்க வேண்டுமென்கிறார்[154] வள்ளுவர்.

#### 3.12.1. படையைப் பெருக்குதல்

மன்னர்கள் தம் நாட்டைக் காக்கப் பல ஏற்பாடுகளைச் செய்திருந்தனர். அவற்றுள் முதன்மையானதாகக் கருதப்படுவது படையைப் பெருக்குதல் ஆகும். ஒரு மன்னனின் வெற்றிக்குப் படை பெருந்துணை புரிவதனால் நான்மணிக்கடிகை

'படையின்றி மன்னர் சீர் வாடிவிடும்'[155] என்கிறது.

### 3.12.2. மன்னனின் படை பெருமை

சங்க காலத்தில் பெரும்படையைக் கொண்ட மன்னன் பிறரை அடக்கியாளுந்தன்மை பெற்றான். 'அவன் படையே அவனுக்குப் பெருமையையும் செருக்கையும் அளித்தது'[156] என்கிறார் அ.தட்சிணாமூர்த்தி இதற்கு எடுத்துக்காட்டாக,

'படுமணியிரட்டும் பாவடிப் பணைத்தாள்
நெடுநல் யானையும் தேரும் மாவும்
படையமை மறவரும் உடையம் யாமென்
நுறுதும் பஞ்யாது உடல் சினம் செருக்கி'

என்ற புறப்பாடலைக் கூறலாம்.

### 3.13. படை வகை

தேர்ப்படை, யானைப்படை, குதிரைப்படை, காலாட்படை (மறவர்), கடற்படை என்னும் ஐந்து வகைப்படைகள் இருந்ததை சங்க இலக்கியம் எடுத்துரைக்கின்றது. மேலும், 'பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறனிடம் யானை, குதிரை, தேர், மறவர் என்ற நான்கு வகைப் படைகளும் இருந்தன'[158] கரிகாற் பெருவளத்தானிடம் நான்கு வகைப்படைகளுடன் கடற்படையும் இருந்தது[159].

### 3.13.1 தேர்ப்படை

'தேர்ப்படை செல்வ மிகுதியைக் காட்டுவதாக அமைந்துள்ளது. மேலும் அரசின் வலிமையினையும் வெற்றிச்சிறப்பையும் எடுத்துரைக்கின்றது. என்கிறார் ந.தேவி[160]. தேரின் நெடுமை, திண்மை, பொலிவு, விரைவு என்னும் சிறப்புகளை விளக்கும் அடைமொழிகள் பல உள்ளன.

'இயறேர் வழுதி'[161], 'பொற்றேர்ச் செழியன்'[162] 'கடுந்தேர்ச் செழியன்'[163], 'இயற்றேர் சென்ன'[164], 'நற்றேர்ச் செழியன்'[165] இயல் தேர்க்குட்டுவன்[166] எனச் சங்க இலக்கிய பல அடைமொழிகளைக் கொடுப்பதிலிருந்து தேர்ப்படையின் சிறப்பை அறிய முடிகின்றது.

### 3.13.2. யானைப்படை

இப்படை பெருமைக்குரியதாகவும் அரசர்கள் ஊர்ந்து செல்லும் பயண ஊர்தியாகவும் இருந்தது. களிற்றுடன் போரிட்டு வெல்வது சிறப்பாகக் கருதப்பட்டது.

'இழையணி' யானைச் சோழன்[167]

'அண்ணல்' யானை வழுதி[168]

'பெரும்பல்' யானைக் குட்டுவன்[169]

என்ற அடைமொழிகளே இதன் சிறப்பை வெளிப்படுத்துகின்றன.

### 3.13.3 குதிரைப்படை

குதிரைப்படையும் அரசர்களின் வீரத்திற்கு சிறந்த அடையாளமாகக் கருதப்பட்டது. குதிரையின் வலிமை விரைவு; பொலிவு ஆகியவற்றை விளக்கும் வகையில் 'கடுமான் தோன்றல்'[170] 'வயமான் தோன்றல்'[171] என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

### 3.13.4 மறவர் படை

'காலாட்படை' என்பர். இப்படையில் வில், வாள், வேல் ஏந்திய வீரர்கள் அடங்குவர். இப்படை 'தானை' என்றும் அழைக்கப்பெறும். இதன் வழி மன்னனின் பெருமையினை அறியலாம். இதனை 'அடங்காத்தானை'[172] 'ஈண்டிய தானை'[173] 'எரிநிமிர்ந்தன்ன தானை'[174] 'ஓடாத் தானை'[175] 'கடந்தடு தானை'[125] 'தாங்கருந்தானை', 'வலம்படுதானை', 'மறங்கெழுதானை'[179] என்ற அடைமொழிகளே எடுத்துரைக்கின்றன.

### 3.13.5 கடற்படை

நால்வகைப் படையன்றி கரிகாலனிடம் கடற்படையும் இருந்தது. கரிகாலன் இலங்கையை வென்றது இப்படைத் துணைகொண்டுதான்

*என்கிறார்.*

### *3.13.6. துணை வேண்டா வெற்றி*

*'துணையின்றி தலையாலங்காலத்துச் செருவென்ற பாண்டியன், நெடுஞ்செழியன் தனித்து நின்று போரிட அவனை எதிர்த்துச் சேரன், சோழன், திதியன், எழினி, எருமையூரன், இளங்கோவேள், பொருநன் ஆகிய எழுவரும் போரிட்டனர். ஆனால் இதில் பாண்டியன் நெடுஞ்செழியனே வெற்றி பெற்றான்'*[180] *என்கிறார் இடைக் குன்றூர்க்கிழார். இதில் மற்ற மன்னனின் துணையின்றி வென்ற செய்தி கூறப்பட்டுள்ளது.*

### *3.14 படைவளம்*

*மன்னனின் வெற்றிக்குப் படைவளம் தேவை. பகைவர் நாட்டின் மீது படையெடுத்துச் செல்வோர். வஞ்சிப்பூச்சூடிப் படை நடத்தி செல்வர்கள். சோழன் நலங்கிள்ளியின் படைவளம் பற்றி புறநானூற்றில், 'முன்னால் சென்ற படைவீரர்கள் பனம் நுங்கினை உண்டதாகவும், இடையில் சென்ற படைவீரர்கள் பனம் பழத்தினை உண்டதாகவும், இறுதியில் சென்ற வீரர்கள் பனம் கிழங்கினை உண்டதாகவும்'*[181] *ஆலந்தூர் கிழார் கூறுவதிலிருந்து, 'காலநிலைகளையே கடந்து செல்லும் அளவிற்கு படை நீண்டிருந்ததைக் காட்டுகின்றது' இது சோழனின் படைபலத்தை வெளிப்படுத்துகின்றது.*

### *3.15 படைவீரம்*

*'இடிக்கும் முரசு முழங்கப் போர் செய்த வெற்றிப் படையினை உடையவன்' என்று கூறுவதிலிருந்து, 'கரிகாலனின் போர்ப்படை வீரத்தின் உச்சகட்ட எல்லையாகவே முரசொலி'*[183] *உள்ளது என்கிறார் இரா.விஜயராணி.*

*பாண்டியன் கடகாரத் துஞ்சிய மாறன் வழுதியின் படைபலத்தைக் கண்டு அஞ்சுவர். பிறநாட்டு மன்னர்கள் புறங்கொடுத்தோடுவர் என்கிறார் செ.மாரிமுத்து*[184]*. இதனை அகம்*

*'பிறரைப் புறங்கொடுத்தோடச் செய்யும் பேராண்மை*
*மிக்கவன். முழந்தாள்வரை நீண்ட கைகளையுடையவன்*
*தன்னிடம் போரிட வரும் பகைவரைப் பாழ்செய்து வென்ற*

புகழ்நிறைந்த வேற்படையுடையவன்'[185] என்கிறது.

'வீரத்திற்கு அழகு கோழையோடு போரிடாமல் இருப்பது' இதனை ஒரு போர்வீரன் செயலால் புறம், 'தன்னைப்போர் மேற்செல்லவிடாது தடுத்தெதிர்த்த களிறை தன் வாளால் வீழ்த்திய வீரன் தன்னைக் கண்டஞ்சியோடிய பகைவரைத் தாக்காமல் நின்றான்'[186] என்பதிலிருந்து அவனின் வீரம் வெளிப்படுகின்றது.

### 3.16. மறவர்

போரில் பங்கேற்கும் திறமையுடையவர்கள் வீரர்கள் என்றும்; மறவர் என்றும் அழைக்கப்பட்டனர். தொடக்கத்தில் மறவர் என்போர் கொள்ளைக் கூட்டத் தலைவர்களே ஆவர். அவர்களின் தோற்றமும் கொடுமையும் சீற்றமும் போர்ப்படையில் சேர்த்துக் கொள்ளத் தகுதிகளாயின; அவர்களிடம் அகப்பட்டுக் கொண்டவர்களை துன்பப்படுத்தி பெருமகிழ்வுற்றனர்; அவர்கள் செல்வமற்ற வழிப்போக்கர்களை அம்பு எய்திக் கொன்று விடுவர்[187].

### 3.16.1 மறவனின் வீரம்

மறவனின் வீரம் பற்றி சங்க இலக்கியங்கள் கூறுவன:

உண்மையான போர்வீரன் என்பவன் போரில் ஒரடியும் புறமுதுகிடாதவன். ஊழிக்கான மழை போல அம்பு மழை பொழியினும், வேல் பளபளவென்று மின்னினும், களிறுகள் கொம்பால் குத்தினும் அஞ்சாத தறுகண்மை உடையோரே வீரர்.

வீரர்களது தோற்றம் பற்றி புறம், 'வேலைக்கையிற் கொள்வர். எண்ணெயிட்டு தலைமுடியினை வகிர்ந்திருப்பர். வெண்துகிலை இடையில் அணிந்திருப்பர்.போர் முரசொலி கேட்டவுடன் போர்க்களம் நோக்கி விரைவர்[190]. மேலும் அவர்கள் வீரக்கழல் அ ணிந்திருந்தனர். அதில் அணிந்தாரின் வீரச்செயல்கள் பொறிக்கப்பட்டிருந்தன[191]. அரசனும் தானைத் தலைவர்கள் உள்ளிட்ட தலைமை வீரர்கள் இருவகைக் கழல்கள் அணிந்திருந்தனர். ஒன்றில் அணிந்தாரின் கொடைச்சிறப்பும், மற்றையதில்

அவர்களது வீரம் அல்லது வெற்றி பொறிக்கப்பட்டு இருந்தது. வீரர்கள் படம்[192], மெய்ம்மறை[193] என்னும் அங்கியும், காலில் செருப்பும் அணிந்திருந்தனர்[194].

**மறவனின் மகிழ்ச்சி:**

வெற்றியடையும்படி போர் செய்யும் வீரனின் ஒளி மிகு முகம் போல நிலவொளி உள்ளது[195] என்று கூறி அவன் மகிழ்வோடு போரிடுவதைக் குறிப்பிடுகின்றார்.

### 3.17. போர் அறம்

போர் தொடங்குவதற்கு முன்னால் போர்ச் செய்தியினை முரசறைந்து தெரிவிப்பர். அப்போது, 'ஆனிரை, பார்ப்பனர், பெண்டிர், பிணியுடையோர், மக்கட்பேறற்றோர் ஆகியோர் பாதுகாப்பான விடத்திற்கு செல்லுங்கள்'[196] என்று தெரிவிக்கப்பட்டதாக கூறுவதிலிருந்து போர் அறம் வெளிப்படுகின்றது.

தமிழ் வேந்தர் 'கொடைமடம் படுதலல்லது படைமடம் படாத தன்மையினர்'[197] என்று புறம் கூறுவதற்கு ஔவை சு.துரை சாமிப்பிள்ளை, 'படைமடமென்பது வீரரல்லாதோர் மேலும், புற முதுகிட்டார்மேலும், புண்பட்டார் மேலும் மூத்தார் இளையார் மேலும் படையெடுத்துச் செல்லல்'[198] என்கிறார்.

தமிழ்வேந்தர் மட்டுமல்ல வீரனும் படைமடம் படான் என்பதற்குச் சான்றாக புறப்பாடலைக்[199] கூறலாம். 'தம் உறவினரென்றும் பிறரென்றும் பாராமல் போரிடும் களத்தில்[200] படைமடம் படார்' என்பது பழந்தமிழரின் பெருமையாகும்.

### 3.18 போரும் புலவரும்

பரணர், இளஞ்சேட் சென்னிக்கும்; காரிக்கிழார் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதிக்கும் வீரத்தை தூண்டினர். போரிடாமல் காலம் தாழ்த்தின் மக்கள் துன்புறுவர் என்றும் புலவர்கள் அறிவுறுத்தினர்.

பாசறையில் தங்கியிருக்கும் வேந்தனுக்கு இல்லற வாழ்வை

நினைவுப்படுத்துகின்றார் புலவர் பெருங்குன்றூர்க்கிழார்[203].

### 3.19. பாசறை:

பாசறை என்பது போருக்கு முன்னும் பின்னும் களிறும் மாவும், தேரும், வீரரும் தங்கியிருக்கும் பரந்த இடமாகும். இதை 'பார்வற் பாசறை' என்கிறது பதிற்றுப்பத்து[204]. பகலில் போரிடும் வேந்தன் உட்பட எல்லாம் தங்கியிருக்கும் இடம். அங்கு இரவில் துயில் கொள்ளாது, புண்பட்ட வீரர்களுக்கு ஆறுதல் கூறியதை நெடுநல்வாடை கூறுகின்றது[205].

### 3.20. முக்கியமான போர்கள்

#### கடற்போர்

கடலில் கலம் செலுத்துவதில் மிக்க தேர்ச்சி பெற்றிருந்தனர். தமிழர் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே கிரேக்க, உரோம நாடுகளுடன் வாணிபத் தொடர்பினைக் கொண்டிருந்தனர். வணிகக் கலங்கள் பின்னர் போருக்கும் பயன்படுத்தப்பட்டது.

சேரன் செங்குட்டுவன், கடலில் கலஞ்செலுத்தி வாணிபம் செய்ய இடையூறு செய்த கடம்பர்களைத் தொலைத்ததனால் 'கடல் பிறகோட்டிய செங்குட்டுவன்' எனச் சிறப்பிக்கப்பட்டான். இவன் கலங்கள் கடலில் செல்லும்போது, பிறகலங்கள் செல்ல அஞ்சும் நிலையினை,

சினமிகு தானை வானவன் குடகடற்
பொலந்தரு நாவா யோட்டிய வவ்வழிப்
பிறகலஞ் செய்கலா தனையே[206]

என்று மாறோக்கத்து நம்பசலையார் கூறுவதைக் காணமுடிகின்றது.

சோழன் கரிகாற் பெருவளத்தானின் முன்னோர் கடற்போர் நிகழ்த்தியதை,

நளியிரு முந்நீர் நாவா யோட்டி
வளிதொழி லாண்ட வுரவோன் மருக[207]

என்ற புறப்பாடல் தெரிவிக்கின்றது.

இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் கடற்போர் மேற்கொண்டு

பகைவரைக் கொன்று அவரின் காவல் மரமான கடம்பினை வெட்டி அதனால் முரசு செய்து முழக்கியதை

சால்பெருந் தானைச் சேரலாதன்

மால்கடல் ஓட்டிக் கடம்பறுத் தியற்றிய

பண்ணமை முரசின் கண்ண திர்ந்தன்ன[208]

என்று அகநானூறு தெரிவிக்கின்றது. இவற்றிலிருந்து சங்கத்தமிழர் கடற்கடந்தும் போரிட்டு வெற்றி பெற்றதை அறியலாகின்றது.

**வடநாட்டுப் போர்**

இமயத்தில் தம் இலச்சினையைப் பொறிப்பதை மூவேந்தரும் பெருமையாகக் கருதினர். சேரருள் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன், சோழருள் கரிகாலன், பாண்டியருள் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் என்றும் குறிப்பர் கா.அப்பாத்துரை[209].

இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் வடவாரிய மன்னரை வெற்றி கொண்டதைப் பரணர்[210], மாமூலனார்[211], குமட்டூர்க் கண்ணனார் ஆகிய மூவரும் பாடியுள்ளனர். தோல்வியுற்ற ஆரிய அரசர்களும், வடபுல மன்னரும் இழிவுபடுத்தப்பட்டதை அறிய முடிகின்றது.

'ஆரிய ரலறத் தாக்கி'[213]

'பேரிசை மரபி னாரியர் வணங்கி

நெய்தலைப் பெய்து கையிற் கொளீஇ'[214]

இவ்வரிகள் போரில் அகப்பட்ட ஆரிய வீரனின் தலையில் நெய் பெய்து கைகளைப் பின்னால் கட்டி ஊரில் இழுத்துச் சென்றதைக் காட்டுகின்றது.

**தமிழகப் போர்கள்:**

பழந்தமிழகத்தில் தலையாலங்கானம், வெண்ணிப்பறந்த தகடூர், கழுமலம், திருப்போர்ப்புறம் ஆகிய இடங்களில் நடந்த போர்கள் குறிப்பிடத்தக்கன.

**தலையாலங்கானத்துப் போர்:**

மூவேந்தரும் தலையாலங்கானத்தில் போர் செய்தனர்.

*தம்மவரென்றும் அயலவரென்றும் அறியாத அளவுக்குப் போரிட்டதை*

*தமிழ்தலை மயங்கிய தலையாலன் கானத்து*[215]

*தமர்பிற ரறியா வமர்மயங் கழுவத்(து)*[216]

*எனப்புறம் கூறுவதன் வழி அறியலாம்.*

**திருப்போர்ப்புறம்:**

*சோழ நாட்டில் நடைபெற்ற இப்போரில் சோழன் வேற்பஃறடக்கைப் பெருவிறற்கிள்ளியும், சேரன் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனும் பொருது மடிந்தனர். இப்போரில் எவரும் பிழைக்கவில்லை இந்நிலையினைப் பரணர் பாடல் வழி அறியலாம்.*

*'களம்புகுந்த களிறுகள் அத்தனையும் அம்பால் அழிந்தன. விரைசெலவுடைய குதிரைகள், தேர்வீரருடன் தேர்கள் எல்லாம் அழிந்தன. இருபெருவேந்தரும் வீழ்ந்து மடிந்தனர். முரசுகள் முழக்குவாரின்றிக் கிடந்தன'*[217]

***கழா அத்தலையார்***

*'அறமறிந்த ஆற்றலுடைய வேந்தர் இருவர் அவரது வெண்கொற்றக்குடைகள், போர் முரசுகள், படைவீரர்கள் எல்லாம் போரில் வீழ்ந்தன. போரில் மாண்ட மறவரின் மனைவியரும் உடன்கட்டை ஏறினர்'*[218] *என்று போரின் நிலைய பாடியுள்ளார். மேலும் புலவர் வாடும் நிலையினை, 'களம் பாடிப் பரிசில் பெற்றுச் செல்லும் விருப்புடன் வந்தேன். ஆனால் பெருமழையைத் தாங்கி நிற்கும் மலைகளைப்போல் அ ம்பு மழையைத் தாங்கி வீழ்ந்து கிடக்கின்றன. தேர்களைப் பெறலாம் என்றால் அவையெல்லாம் முறிந்து கிடக்கின்றன. குதிரைகளைப் பெறலாமென்றால் வீரர் தம் வாள் தந்த புண்களால் வீழ்ந்து கிடக்கின்றன என்று புலவர்தம் போருக்கிறங்கியதாக'*[219] *பாடியுள்ளதிலிருந்து திருப்போர்ப்புறம் போர்க் கொடுமையினை அறிய முடிகின்றது.*

***3.21 போரின் வேந்தன் நிலை:***

வேந்தர் போரை முன்னின்று நடத்துவர் வேந்தர், வீரர்களுக்குத் துணையாக தலைமையேற்றலால் 'சான்றோர் மெய்ம்மறை'[220] எனப் புகழப்பட்டனர். வேந்தன் 'படையேருழவர்'[221] என்று பதிற்றுப் பத்தாலும், 'வில்லேருழவர்'[222] என்று திருக்குறளிலும் குறிக்கப் பட்டுள்ளது.

வேந்தர் போரிடும் போது, ஆரவாரம் செய்யாது, போரிலேயே கருத்தூன்றி போரில் வெற்றிப் பெறும் ஆற்றலுடையவர் என்பதை 'தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனின் போர்த்திறத்தை இடைக்குன்றூர்கிழார்' கூறுவதன்வழி அறியலாம்.

வேந்தனின் போர்ச் செயலை மறவன் ஒருவன் வியந்து பாராட்டுகையில், 'உண்டாட்டு களத்தில் கலங்கற்கள்ளை எங்களை உண்ணச் செய்து, வெறி இல்லாத கள்ளை அவன் உண்டான் ஆனால் போர்க்களத்திலோ எங்களை முன் விடாமல் தானே முன்சென்று போரிடுகின்றான்' என்று கூறுவதிலிருந்து அரசரின் மறப்பண்டையும், மறவரைப் போற்றும் அருட்பண்பையும் இணைத்தே கூறுகின்றார் ஆவியார்[224].

இரு பெரு வேந்தரின் போர் வீரர்கள் போரில் மடிந்துவிடின், உயிருடன் வாழும் இருபெருவேந்தரும் போர்க்களம் புகுந்து ஒருவரையொருவர் எதிர்த்துப் போரிட்டு உயிர் துறப்பர். இதனைத் தொல்காப்பியர்,

.......... .......... வாள் வாய்த்து
இருபெரு வேந்தரும் தாமுஞ் சுற்றமும்
ஒருவரும் ஒழியாத் தொகைநிலைக் கண்ணும் [225]

எனக் குறிப்பிடுவர். சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதனும், சோழன் வேற்பஃறடக்கைப் பெருவிறற் கிள்ளியும் போரில் இறந்தனர். இவரை 'அறத்தின் மண்டிய மறப்போர் வேந்தர்'[226] என்றும் புறம் குறிப்பிடும். மேலும் வெற்றி பெற்ற வேந்தர், வென்ற நாட்டிலிருந்து சிறந்த பொருட்களை எடுத்து வந்தனர். தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் சேரரின் முசிறியை வென்று கடவுட் படிமத்தை எடுத்து

வந்ததாக அகம் கூறுகின்றது[227].

### 3.22. தோற்ற வீரர் நிலை

தோல்வியுற்ற வீரர் தங்கள் வேல்களைக் களத்தில் போட்டுச் செல்வர் அவ்வாறு குடக்கோ இளஞ்சேரலிரும்பொறையின் பகைவர் களத்தில் விட்டுச் சென்ற வேல்கள் கபிலர் பரிசாகப் பெற்ற ஊர்களினும் மிகுதியாக இருப்பதாக பெருங்குன்றூர் கிழார்[228] கூறுவதிலிருந்து வேல் மிகுதியை அறிய முடிகின்றது.

### 3.23 எரியூட்டுதல்

வெற்றி பெற்ற வேந்தன் தம் வெற்றிக்குப் பின்னர் பகைவர் நாட்டைத் தீயிட்டுப் பாழாக்குவர். பகைவர் நாட்டினைத் தீயிட்டுப் பாழாக்கிய செய்தியினை அகம் கூறுகின்றது. பதிற்றுப்பத்து பாண்டியன் தலையாலங்கானத்துச் செரு வென்ற நெடுஞ்செழியன் காற்றென்னும் படிகடிதாகப் பறந்து சென்று பகைவர் நாட்டை எரியூட்டி பாழாக்கியதை

'காலன்ன கடிதுராஅய்
நாடுகெட வெரி பரப்பி
யாலங்கானத் தஞ்சுவரவிறுத்
தரசுபட வமருழக்கி'[229]

என மதுரைக்காஞ்சி குறிக்கின்றது.

### 3.24 பாழாக்குதல்:

போரில் தோல்வியுற்ற பகைவரின் அரண்களை அழித்து அவர் வாழுமிடங்களைக் கழுதை ஏரால் உழுது வெள்ளை வரகும், கொள்ளும் விதைத்ததை

'வெள்வாய்க் கழுதைப் புல்லினம் பூட்டி
வெள்ளை வரகும் கொள்ளும் வித்தும்'[230]

என்று புறம் கூறுகின்றது. தம்மாற் முடிந்த மட்டும் எடுத்துக் கொண்டு எஞ்சிய பொருள்களையும், விளைநிலங்களையும் அழித்து விடுவர். காவற்காடுகளை வெட்டி வீழ்த்துவர்[231]. கரிகாலன் எரியூட்டி பாழ்செய்த

நிலையினை பட்டினப்பாலை விளங்க உரைக்கின்றது[232].

### 3.25 வெற்றி பெற்ற வேந்தன் நிலை

வெற்றி பெற்ற அரசன் தோற்ற அரசனின் முடிப்பொன்னை உருக்கித் தன் அடிகள் பொலிய வீரக்கழல் செய்து கொள்ளல் மரபு என்பதை

முடிபுனைந்த பசும்பொன்னின்
அடிபொலியக் கழறைஇய[233]

என்று புறம் கூறுகின்றது. மேலும் 'எழுவரது முடிப் பொன்னாற் செய்யப் பெற்ற ஆரம் அணிந்த மார்பினையுடைய சேர வேந்தனே'[234] என்று கூறுவதிலிருந்து சேரர்கள் வெற்றியைத் தனதாகக் கொண்டவர்கள் என்பது மட்டுமின்றி 'ஆரம் அணிந்து கொள்ளுதல் மரபு'[235] என்கிறார் ஔவை துரைசாமிப்பிள்ளை.

வெற்றி பெற்ற வேந்தனின் பாசறைக்குச் சென்று பாணரும், கூத்தரும் ஆடிப்பாடி மகிழ்விப்பர். அவர்களோடு அரசனும் ஆடுவதுண்டு, 'துணங்கைக் கூத்தாடிய விறலியுடன் ஆடுகோட்பாட்டுச் சேரலாதனைக்' கூறலாம்[236].

வெற்றி பெற்ற வேந்தன், அவ்வெற்றிக்குக் காரணமாக உள்ள வீரர்களுக்கு விருந்தளிப்பது வழக்கம். 'இவ்விருந்தில் வேந்தன் தன் வீரருடனிருந்து உண்பான் அனைவரும் கள்ளுண்டு மகிழ்வர்' [237] இவ்விருந்தினை அகம் பெருஞ்சோறு என

தள்ளுடைப் பெருஞ்சோற் றெல்லிமிழ் அன்ன
கவ்வை யாகின்றாற் பெரிதே[238]

குறிப்பிடுக்கின்றது. வெற்றி பெற்ற வேந்தன் பகைவரின் முரசு, வெண்கொற்றக்குடை கவர்ந்து அவர்தம் படைகளை அழித்து கள வேள்வி செய்தனர்.[239] மதுரைக்காஞ்சி, 'இக்களவேள்வி' பற்றியும் 'வீரர்களுக்கு பரிசு நல்கியதையும்'[240] குறிப்பிடுகின்றது.

### 3.36 மன்னன் மறவர் சிறப்பு:

சங்க காலத்தில் படைமறவர்க்குத் தன்பால் அன்பு பெருகவும் செயற்கரிய செய்யும் உணர்வினைத் தூண்டவும் மறமாண்புடைய வீரர்கட்கு 'வளமான மருத நிலங்களை பரிசாக அளித்தான்'[211] மன்னன் என்று புறம் கூறுவதிலிருந்து அறியமுடிகின்றது.

மன்னன் போரின் போது பகைப்புலத்தே கைப்பற்றிய பொருட்களை வீரர்கட்கு பங்கிட்டு கொடுத்தமை சிறப்பு என்கிறார் அ.தெட்சிணாமூர்த்தி[242]. இதனை கடல் பிறகோட்டிய செங்குட்டுவன் அளித்த பரிசிலிருந்து அறியலாம். அவன் 'பகைப்புலத்தில் பெற்றவை கிடைத்தற்கரியவையாயினும் அவற்றைத் தனக்கென வைத்துக் கொள்ளாது வீரர்கட்குக் கொடுத்தான்'[243] பகைப்புலத்தே கொள்ளையிடுவதில் வல்ல மள்ளர்கட்குக் களிறுகளைப் பரிசாகக் கொடுத்தான்[244].

தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன், 'வில்வீரர், குதிரைவீரர் ஆகியோர்க்கும், பகைவர்மதில் மீதேறி வீரம் விளைவித்த' மறவர்க்கும், பெரிய யானைகளை வெட்டி வீழ்த்திய வீரர்க்கும், வண்டிக் குறடுபோல் உடலில் அம்புகள் தைக்கப்பட்ட மறவர்க்கும் தேர், யானை மற்ற பிறவும் வழங்கிச் சிறப்பித்ததை[245] மதுரைக்காஞ்சி எடுத்துரைக்கின்றது.

இன்றைய அரசியல் கட்சி தலைவர்கள் மக்களுடன் சமபந்தி உணவில் கலந்து கொள்வது போல, சங்க காலத்தில் சேர மன்னனான ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் தன்வீரர்களோடு சேர்ந்து உண்டான். அங்ஙனமே போரில் வெற்றிபெற்ற போது தன் மறவரோடு சேர்ந்து ஆடி மகிழ்ந்தான்[246].

### 3.27. மறவர் வீரத்தின் சிறப்பு

'வீரத்தைப் போற்றிய சங்கத் தமிழர், போர்க்களத்திலே புறங்கொடாமல் போர் செய்து வெற்றி பெற்ற வீரனைப் போற்றினார்கள்.' அவ்வீரன் போர்க்களத்தில் இறந்துபட்டால், அவன் வீரத்தைப் போற்றவும், அவனை நினைவு கூறவும் அவன் இறந்தவிடத்தில் கல் புதுக்கைகள் அமைத்து

*அதன் மேல் நெடுங்கல்லை நட்டனர். இந்நெடுங்கல் நாகரிக வளர்ச்சியினால் உயரம் குறைந்து நடும் அளவுக்கு நடுகல்லாக மாறியது.*

### *3.28 நடுகல்*

*நடுகல் என்பது வீரன் இறந்த இடத்திலோ அல்லது வேறிடத்திலோ அவன் நினைவாக எடுக்கும் கல் ஆகும். இதனை 'வீரக்கல்' என்றும் அழைப்பர்.*

*பண்டைத் தமிழர்கள் வீரத்தைப் போற்றினார்கள். வீரனாக வாழ்வதைப் பெரும்பேறாகக் கருதினர். வீரர்கள் ஊரைக் காக்கவோ, நாட்டைக் காக்கவோ, மானம் காக்கவோ, ஆநிரை கவரவோ அல்லது மீபகவோ எற்படும் போரில் பங்கு பெற்று பகைவருடன் போரிட்டு வீர மரணம் அடைந்த வீரர்களின் நினைவாக எடுக்கப்பட்ட கற்களே 'நடுகற்கள்' என அழைத்தனர்.*

### *இலக்கணம்:*

*பண்டைத் தமிழர்களிடையே பெரு வழக்கமாக இருந்த நடுகல் நடப்படுவதற்கு தொல்காப்பியர்*

*காட்சி கால்கோள் நீர்ப்படை நடுகல்*
*சீர்த்தகு மரபில் பெரும்படை வாழ்த்தலென்று*
*இருமூன்று மரபிற் கல்லொடு புணர*[247]

*என்று இலக்கணம் வகுத்துள்ளார்.*

### *3.28.1 நடுகல் மரபு*

*போர்க்களத்தில் இறந்துபட்ட வீரனின் உடம்பைப் புதைத்த இடத்தில் நடப்பட்ட கல்லின் அவ்வீரனின் பெயரும், பீடும் எழுதி நடுதல் மரபாகும். அதற்கு மயிற்பீலி சூட்டியும் ஆடுகளைப் பலியிட்டும் வணங்கியும் வந்தனர் என்பதை*

*'........... ...........விழுத்தொடை மறவர்*
*வல் ஆண் பதுக்கை கடவுட் பேண்மார்*

*நடுகல் பீலிசூட்டி துடிபடுத்து'*[248]

*'விழுத்தொடை மறவர் வில் இட வீழ்ந்தோர்*
*எழுத்துடை நடுகல் .......... ..........'*

*'பெயரும் பீடும் எழுதி அதர் தொறும்*
*பீலி சூட்டிய பிறங்குநிலை நடுகல்*
*வேல் ஊன்று பலகை'*[250]

*'நடுகல் பீலிசூட்டி நாரரி*
*சிறுகலத் துடுப்புவங் கொள்வன் கொல்லோ*
*கோடுயர் பிறங்குமலை கெழீஇய*
*நாடுடன் கொடுப்பவுங் கொள்ளா தோனே'*[251]

*என்ற அடிகள் கூறுகின்றன.*

### *3.28.2. நடுகல் நடுவோர்*

*போரில் இறந்துபட்ட வீரர்கள் நினைவாக ஊர்மக்களோ, அரசனோ, தலைவனோ நடுகற்களை எடுத்திருக்கின்றனர்.*

### *3.28.3. நடுகல்லுக்குரியோர்*

*'போரில் வீரமரணம் அடைந்தவர்களுக்கு மட்டுமின்றி நிரைகவர்தல், நிரைமீட்டல் போன்ற போர்களில் ஈடுபட்டிறந் தோருக்கும் நடுகல் எடுக்கப்பட்டது.*[252]

### *வீரனின் படைப்புச் சிற்பம்*

*நடுகற்களில் வீரர்கள் பெரும்பாலும் இடக்கையில் வில்லும், வலக்கையில் அம்பும் கொண்டு காணப்படுவர். இதனை,*

*'கூற்றினத் தன்னார் கொடவில் இடனேந்தி*
*ஒள்வாள் வலனேந்தி'*[253]

*என்று கூறுகிறது. வீரர்கள் தலையில் தலைப்பாகையும், இடையில்*

அரையாடையும், இடுப்பில் குறுவாளும் அணிந்து காணப்படுகின்றனர். நிரை கவரும் போதோ அல்லது மீட்கும் போதோ வீரன் இறந்திருந்தால் அவன் காலடியில் ஆடு அல்லது மாடு புடைச்சிற்பமாகக் காட்டப்பட்டிருக்கும்.

### 3.28.4 நடு கற்கள் காணப்படுமிடங்கள்

நடுகற்கள் ஏரிக்கரை, ஆற்றங்கரை மற்றும் ஊரின் புறத்தேயுள்ள காட்டுப்பகுதியிலும் காணப்படுகின்றன. சங்க இலக்கியச் சான்றுகளிலிருந்து நடுகற்கள் பாலைநிலத்தின் கண் மரத்தின் நிழலில் அச்சந்தரக்கூடிய வகையில் தனிமையான இடத்தில் அமைந்துள்ளதை அறிய முடிகின்றது.

### 3.28.5. நடுகல் வழிபாடு

கல்லே பரவின் அல்லது
நெல்வகுத்து பரவும் துவுரும் இலவே[254]

என்று நெல்தூவி நடுகல் வழிபடும் முறையை கூறுகிறது.

உள்ளம் பொருந்தாத பகைவரின் முன் நின்று போரிட்டு உயர்ந்த கொம்புகளையுடைய யானைகளைக் கொன்று தாமும் விழுப்புண்பட்டு இறந்திட்ட வீரனின் பெயரும் பெருமையும் எழுதப்பட்ட நடுகல்லை கடவுளாக வழிபட்டனர்[255] என்பதை புறப்பாடல் வெளிப்படுத்துகின்றது.

கள்ளை உணவாகப் படைத்து, நெய் விளக்கேற்றி வழிபடும் காட்சியை புறம் கூறுவதன் வழி வீரத்திற்கு அளிக்கப்படும் சிறப்பை வெளிப்படுத்துகின்றது.

### 3.29. போரின் பாதிப்பு:

போர் முடிவில் தோல்வியுற்ற நாட்டில் எரியூட்டல், நீர்நிலை கழனிகள் அழித்தல் போன்ற செயல்களினாலும் நாடு காடாக விலங்குகள் வாழுமிடமாக பீர்க்கு முதலிய கொடிகள் படருமிடமாகக் காட்சியளித்தது.

### 3.30. இறப்புச் செய்திகள்:

சங்க இலக்கியங்களில் இறப்பு பற்றிய செய்திகள் பல பொதுவாகக் கூறப்பட்டுள்ளன. கோடித்துணி போர்த்தல், ஈமச்சடங்கான தீ மூட்டி

எரித்தல், இறந்த முன்னோர்களுக்கு பெருஞ்சோறளிக்கும் தென்புலத்தார் கடன் செய்தல் போன்றவை இன்றைய காலகட்டத்தில் உள்ளது போன்றே சங்க காலத்தில் அரசர்களிடமும் அவ்வழக்கம் இருந்ததை பின்வரும் இலக்கியக் குறிப்புகள் உணர்த்துகின்றன.

இன்றைய காலகட்டத்தில் உள்ள வழக்கம் போன்றே சங்க காலத்திலும் சாப்பறை முழக்கல்[257], மாரடித்துப் புலம்பல்,[258] பாடையிற்கிடத்தல்[259], வெள்ளெறுவை போர்த்தல் போன்றவை இருந்தன.

### 3.30.1. வெள்ளெறுவை போர்த்தல்

சங்க காலத்தில் இறந்த வீரர்களின் உடலை தூய வெள்ளாடை கொண்டு போர்த்தினர் என்பதை

......... .......... என்சிறுவனை
கால்வழி கட்டிலிற் கிடப்பித்
தூவெள் ளெறுவைப் போர்ப்பித்திலதே[260]

ஔவையார் பாடல் வழி அறிய முடிகின்றது. இதனைத் தற்போது ‘கோடித்துணி போர்த்தல்’ என்கின்றனர்.

இறந்தோர் சடலத்தை அகற்றி சுட்டெரித்தல், பானையில் அடக்கல்; கழுகுகளும், நரிகளும் தின்று விடும்படி எறிதல்; சாதாரணமாக புதைத்தல் என பல வழக்கங்கள் உள்ளன.

### 3.30.2 சுட்டெரித்தல்

எரித்தல் என்பது மரக்கட்டைகள் அடுக்கி வைக்கப்பட்ட சிதை மீது சடலத்தைக் கிடத்தி அதற்கு தீ வைத்தலாகும்.[261] இச்சடலங்களை எரிக்கும் அல்லது சுடும் காடு சுடுகாடு அல்லது ஈமப்பெருங்காடு எனப்படும். இது ஊருக்கு வெளியே இருப்பதனால் ‘புறங்காடு’ எனவும் அழைக்கப்பெறும் விறகிட்டு எரிப்பதை

எறிபுனக் குறவன் குறையல் வன்ன
கரிபுற விறகின் ஈம ஒள்ளழல்[262]

என்று புறம் சுட்டுகின்றது.

மன்னர்களிடமும் பாடையில் கிடத்திப் பின் சுடுகாடு எடுத்துச் சென்று அங்கு விறகுப் படுக்கையில் கிடத்தி சுட்டெரிக்கும் வழக்கம் இருந்ததை சேரமான் கோட்டம்பலத்துத் துஞ்சிய மாக்கோதை தன் மனைவி இறந்ததைப் பாடும் போது

'வெள்ளிடைப் பொத்திய விளைவிற கீமத்
தொள்ளழற் பள்ளிப் பாயல் சேர்த்தி
ஞாங்கர் மாய்ந்தனள்'[263]

என்ற புறவரிகள் மூலம் அறியலாம். மேலும் சோழவேந்தரிடமிருந்து ஒல்லையூரைக் கைப்பற்றி, 'ஒல்லையூர் தந்த புதப்பாண்டியன்' ஆகிய அவன் இறந்த போது அவன் மனைவி பெருங்கோப்பெண்டை ஆட்சிக் கட்டிலில் அமருமாறு வற்புறுத்த அதற்கு அவன் மறுப்புரையை பாடலாக தரும்போது, 'நான் கைம்மை நோன்பான தண்ணீர் விட்ட சோறு, எள்துவையல், புளிபெய்திட்ட வேளைக்கீரை உணவு; பாயின்றி வெறுந்தரையில் படுத்தல்' ஆகியவை தேவையில்லை. பெருங்காட்டின் கண் உருவாக்கப்பட்ட விறகு படுக்கையில் நான் படுத்து தீக்கிரையாவதுதான் சிறந்தது[264] என்று கூறுகிறாள். இப்பாடல் தற்போதைய காலத்தில் நகரங்களில் உள்ளது போன்று 'மின்மயானம்' அன்றில்லை. ஆனால் கிராமங்களில் உள்ளது போன்று 'சுடுகாடு' இருந்ததையும் அரசர்களும் பாடையில் கிடத்தி ஈமவிறகிட்டு எரித்ததை அறிய முடிகின்றது.

### 3.30.3 வாள்போழ்ந் தடங்கல்

மன்னர்குடியில் பிறந்தவர்கள் போரில் அன்றி நோய்வாய்ப்பட்டிறந்தால் அவர்கள் வீரர்கள் செல்லும் வீரசுவர்க்கம் அடைதல் வேண்டி, அவர்களின் உடலைத் தருப்பைப்புல்லிற் கிடத்தி அந்தணர்களைக் கொண்டு சடங்குகளைச் செய்து வாளால் கீறிப்புதைப்பர்[265]. அதே போல் பிறந்த குழந்தை இறப்பினும் அன்றி குறை மாதத்தில் உருப்பெறாத பிண்டமாயிருப்பினும் அவற்றையும் வாளாற்கீறிப்புதைப்பர் என்பது சேரமான் கணைக்காலிரும்பொறை

மாடல்வழி அறியலாம்[246].

**பிதிர்க்கடன்**

இறந்தவர்கட்கு அவர்களுடைய மைந்தர் செய்யும் கடமையே தென்புலத்தார் கடன் அல்லது பிதிர்க்கடன் என்பதாகும். திருவள்ளுவர் இல்லறத்தாரின் கடமைகளைக் கூறும்போது

தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென்
றைம் புலத்தாரோம்பல் தலை[267]

என்ற குறளில் தென்புலத்தார் கடனை முதலில் கூறியிருப்பதிலிருந்து அதன் முக்கியத்துவத்தை அறிய முடிகின்றது. தென்புலத்தார் கடனை மகனே செய்ய வேண்டுமென்பதாலும் 'மக்கட்செல்வம்' பெரும்பேறாகக் கருதப்பட்டது. அதனால் தான் திருமணம் செய்து வைக்கும் மகளிரும் புதல்வனைப் பெற்றவர்களாகயிருக்க வேண்டுமென்பதையும்[268], கோப்பெருஞ்சோழன் வடக்கிருந்தபோது அவனுடன் வடக்கிலிருந்து உயிர்துறக்க வந்த பொத்தியாரை வழியனுப்பிய சோழனின் நடுகல் கண்டு

புகழ்சால் புதல்வன் பிறந்தபின் வாவென
என்னிவண் ஒழித்த அன்பிலான்[269]

என்று புலம்புவதை புறம் கூறுவதன் வழி அறிய முடிகின்றது. புதல்வனைப் பெறாதார் பகைவருடைய கையால் கூட இறக்கக்கூடாது. அதாவது அவர்கள் போரில் ஈடுபடக்கூடாது அவ்வாறு ஈடுபட்டு போரில் வீரமரணம் அடைந்தால் சுவர்க்கம் அடைவர். அவர்களுக்கு சுவர்க்கமும் அடையும் பேறில்லை என்று கூறுகின்றனர்.

உதியன் சேரலாதன் தன் துறக்கமடைந்த முன்னோர்க்கட்கு தென்புலக்கடன் ஆற்றியதையும், மேலும் அவர்கட்கு பெருஞ்சோறு படைத்திட்ட காலத்தே பேய்ச்சுற்றங்கள் அங்கு உண்பதற்குக் கூடியிருந்தன என்பதையும் மாமூலனார்

துறக்கம் எய்திய தொய்யா நல்லிசை
முதியர்ப் பேணிய உதியஞ் சேரல்
பெருஞ்சோறு கொடுத்த ஞான்றை இரும்பல்
கூளிச் சுற்றம் குழீஇருந் தாங்கு[270]

பாடல் வழி அறிய முடிகின்றது.

### 3.31. அரசனின் ஆட்சி நிலை

அரசு அல்லது ஆட்சிமுறை முடியரசு, குடியரசு, சீரியோரசு என்று மூன்று வகைப்படும். அவற்றுள் முடியாட்சியே பழந்தமிழகத்தில் இருந்தது. அரசனை உயிராகவும் மக்களை உடம்பாகவும் நினைத்து அக்காலத்தில் அரசனுக்குச் சிறப்பு செய்தனர். அரசனே நடுநாயமாக விளங்கினான். ஆட்சித் தொடர்பாக நடைபெறும் அனைத்தும் அரசனின் வாழ்வோடு தொடர்புடையது.

### 3.32. அரச சின்னங்கள்

தொல்காப்பியர், ‘படை, கொடி, குடை, முரசு, புரவி, களிறு, தேர், தார், முடி ஆகியவை அரசர்க்குரியன[271]’ என்கிறார். அதில், கொடி, குடை, முரசு, தார், முடி ஆகியன சின்னங்களாகும். இதனுடன் அரியணையும் அரசச் சின்னமாகும்.

#### 3.32.1. கொடி

சேர, சோழ, பாண்டியன், முறையே வில், புலி, கயல் ஆகிய சின்னங்கள் பொறிக்கப்பட்ட கொடிகள் இருந்தனவென்பதை சிலப்பதிகாரம் தான் கூறுகின்றது. ஆனால் சங்க இலக்கியத்துள் இல்லை.

#### 3.32.2. குடை

வெண்மைநிறம், வட்டவடிவம், விசும்பு வரை உயரம் என்ற சிறப்புகளையுடைய வெண்கொற்றக்குடை ஆலயத்திற்குச் சென்று வழிபடும்போது மட்டும்தான் தாழும்[274]. அது குடிமக்களின் துன்பங்களைப் போக்கக்கூடியது[275].

#### 3.32.3 முரசு

பகைவரது காவல் மரத்தை வெட்டி முரசு செய்தனர்[276]. அதனை ஒலிக்க ‘கடிப்பு’ என்ற குறுந்தடியைப் பயன்படுத்தினர்[277]. முரசுக்கு மாலை

அணிவித்து, மயிற்பீலிசூட்டி, நீராட்டி, செந்திணையில் குருதிக் கலந்து இட்டதைப் பதிற்றுப்பத்து[278] கூறுவதிலிருந்து முரசின் சிறப்பை பழந்தமிழர் இலக்கியவழி அறியமுடிகின்றது.

### 3.32.4 தார்

அரசன் கழுத்தில் அணிந்த மாலைக்குத் 'தார்' என்று பெயர். ஆனால் தலையில் அணிந்த மாலைக்குக் 'கண்ணி' என்று பெயர். மூவேந்தர்களின் மாலைகள் முறையே, பனை, வேம்பு, ஆர் என்று குறிப்பிடுகின்றது.

### 3.32.5 முடி

சேர, சோழ, பாண்டியராகிய மூவேந்தர் மட்டுமே 'முடி' அணிந்திருந்தனர். குறுநிலமன்னர்கள் 'முடி' அணிந்ததற்கான சான்றுகள் சங்க இலக்கியத்துள் இல்லை. 'முடி புனைதல்' விழாவாகக் கொண்டாடப்பட்டது. சேரர்கள் பொன், பூ போன்றவற்றால் அணிந்தனர். சேர வேந்தர் முடியணிந்ததை

'எழுமுடி கெழீஇய திருஞெம ரகலத்து'[279]

'எழுமுடி மார்பி னெய்தி சேரல்'[280]

என்ற தொடர்கள் வழி அறியலாம். நாரால் சேரன் 'முடி'[281] அணிந்திருந்தமையைக் குறிக்கின்றது. இது மனோவீரத்தின் அடையாளமாக இருக்கலாம்.

### 3.32.6 அரியணை

அரியணையை 'அரிமா சுமந்த அமளி'[282] எனப் பொரு நராற்றுப்படை குறிப்பிடுகின்றது. அரியணை 'அரசுக் கட்டில்' எனச் சுட்டப்படுகின்றது. போரில் பிடிபட்ட யானையின் தந்தங்களைக் கொண்டு அதன் கால்கள் செய்யப்பட்டமையைப் பதிற்றுப்பத்து[283] வழி அறியமுடிகின்றது.

### 3.33 தலைநகர்

மூவேந்தரும் தம் ஆட்சிப்பரப்பில் அமைந்திருந்த நகரம் ஒன்றைத்

தலைநகராகக் கொண்டனர். சேரருக்கு கரூரும் வஞ்சியும்; சோழருக்கு உறையூரும் புகாரும்; பாண்டியர்க்கு மதுரை தலைநகராகவும் விளங்கின. தலைநகரங்களில் வீதிகள் அகலமாகவும் தூய்மையானதாகவும் இருந்தன. அங்கு அரசவையில் உள்ள அமைச்சர்கள், அறங்கூறவையத்தினர், வணிகர்கள், அந்தணர், சமணர்கள், பௌத்தர்கள் என பலர் வசித்து வந்தனர்[284].

### 3.34 அரண்மனை

பழந்தமிழ் வேந்தர்கள் குடியிருந்த ‘மனை’ பாதுகாப்புமிகுந்த அரண்களால் சூழப்பட்டிருந்தமையால் ‘அரண்மனை’ எனப்பட்டது. அரண்மனையை ‘கோயில்’[285] என்கிறது புறநானூறு. இவ்வரண்மனைகள் பரந்தகன்ற இடப்புறப்பில் உயர்ந்த மாடங்களோடு கட்டப்பட்டிருந்தன. ‘பொன்னாலும் மணியாலும் சிறப்புப் பெற்ற ஏழடுக்கு மாளிகை’[286] என்கிறார் திரு.பொ.வே.சோமசுந்தரனார்.

அரண்மனை கட்டுவதற்கு, ‘சிற்பநூல் தேர்ச்சி பெற்றோர் நாள் குறித்து, நாழிகை பார்த்து, நேரறி கயிறிட்டு, திசைகளையும் அத்திசைகளில் உள்ள தெய்வங்களையும் நோக்கி மனைவகுத்துக் கொடுத்தனர்’[287] என்பதை நெடுநல்வாடை காட்டுகின்றது.

அரண்மனை மாடம் விண்ணில் தோய்ந்து தேவருலகுக்கு முட்டுக்காலாக ஊன்றி வைத்த ஒரு பற்றுக்கோடு போல ஓங்கிய மாடம்; ஏறுதற்கரிய உச்சி; தட்டோடிட்டு சாந்து வாரப்பட்ட மாடம்[278] என்று மாடத்தின் சிறப்பினை பெரும்பாணாற்றுப்படை கூறுவதிலிருந்து அறியலாகின்றது.

அரண்மனை வாயில்கள், கோயில் வாயில்கள் போன்று அகன்றும் உயர்ந்தும் இருந்தன. யானையின் மீது அமர்ந்து கொடியை உயர்த்திப் பிடித்துக் கொண்டு செல்லுமளவுக்கு இருந்தன. அவ்வரண்மனை வாயில்கதவுகளோ, ‘பல மரங்களை இரும்பாணிகளால் இறுகப்பிணித்த, சாதிலிஞ்கம் வழித்த இருகதவுகளை உடையது; கதவுகள் கைத்தொழில்வல்ல

தச்சனால் இடைவெளி இன்றி திறம்பட அமைக்கப்பட்டு, அதில் குவளைப்பூ, திருமகள், பெண் யானைகள் முதலான சித்திரங்கள் செதுக்கப்பட்டிருந்தன'[289] இக்காலத்திலும் இது போன்ற சிற்பங்கள் அமைக்கப்பெற்றிருத்தலைக் காண முடிகின்றது.

அரண்மனைகளில் ஓவியங்கள் தீட்டப்பட்டிருந்தன[290]. ஆனால் பழந்தமிழ் நாட்டில் வீடுகளே ஓவியம் போல் காட்சியளித்ததாக[291] அகம் கூறுகின்றது.

அரண்மனை வாயிலில் காவலர்களையும், முற்றங்களில் கவரிமான்களும் அன்னப்பறவைகளையும் காணலாம்.[292] வேந்தனுக்கென்று தனிமனையும், அவன் தேவிக்கு தனி மனையும் இருந்தது. ஆடவர் புக இயலாத இவ்வரண்மனைகளில் வேற்று மொழி பேசத் தெரிந்த யவனர்களே பணியாளர்களாக அமர்த்தப்பட்டிருந்தனர். அரண்மனையில் யவனரால் செய்யப்பெற்ற பாவை விளக்கு நெய்யூற்றப்பட்டு எரிந்து கொண்டிருந்தன[293] என நெடுநல்வாடை கூறி வழி அறிய முடிகின்றது.

### 3.32.2 அரண்மனை கட்டில்

வேந்தனின் அரண்மனையில் கட்டில்கள் வினைநவில் யானைத் தந்தத்தால் செய்யப்பட்டிருந்தது. அதன் மேல் அரிமா வேட்டையாடுதல் போன்ற அகன்றவிடத்தில் முல்லை முதலிய பல்வேறு மலர்கள் பூத்திருப்பது போன்ற போர்வை போர்த்தப்பட்டிருந்தது. அந்தக் கட்டிலில் மெல்லணை அன்னத்தூவிகளைக் கொண்டு அமைக்கப்பெற்றது போன்றும். அதில் தலையணை, சாயணைகளும் இட்டுவைக்கப்பட்டிருந்தது. அதன் மேல் கஞ்சியிட்டு கழுவப்பட்ட மலரிதழ்கள் கொண்டு மணமேற்றப் பட்ட தூய மடியினை விரிக்கப்பட்ட படுக்கையினைக் கொண்டது. [294]

### 3.35 அரசுரிமை

சங்க காலத்தில் இருந்த அரசாட்சி 'பரம்பரை முடியாட்சியே'. ஆட்சியுரிமை பண்டைத் தமிழகத்தில் வழிவழியாக வந்தது. உண்மையில் எந்தச் சொத்தையும் பெறும் உரிமைக்குத் தாயம் அல்லது உரிமை என்று

பெயர்[295]. தாயம் என்பதற்கு நச்சினார்க்கினியர் 'தந்தையின் பொருளை அல்லது சொத்தை மக்கள் பெறுதல்'[296] என்று உரை எழுதி உள்ளார். மகளிர்க்கு ஆட்சியில் உரிமை இல்லை. ஆண்மக்களுள் மூத்தவனே ஆட்சியுரிமை பெற்றான். ஏனையோர் நாட்டின் பல்வேறு பிரிவுகளிலிருந்து ஆட்சிப் பொறுப்பைக் கவனித்துக் கொண்டனர். தந்தைக்குப்பின் மகன் ஆட்சியுரிமை பெற்றதை

மூத்தோர் மூத்தோர்க் கூற்ற முய்த்தெனப்
பாறர வந்த பழவிறற் தாயம்[297]

என்று புறம் கூறுகின்றது. ஒரு அரசனுக்கு வேண்டியது, 'சால்பு, நடுவுநிலைமை உள்ளிட்ட பிறபண்புகள், நாடு காத்தல் வேண்டிய அரசியலறிவு, பல்வேறு துறை அறிவு' எனப் பல குணங்களைத் தன்னகத்துக் கொண்ட மகனைப் பெற்றுள்ளாய் எனத் தகடூர் எறிந்த பெருஞ்சேரலிரும் பொறையைப் பாடும் அரிசில்கிழார் பாடல், 'தந்தைக்குப் பின் மகன் ஆட்சிப் பெறுதலைச் சுட்டுகின்றது'.

கரிகால் வளவன் 'தாயின் வயிற்றிலிருந்து தாயம் எய்தினான்' எனப் பொருநராற்றுப்படை சுட்டுகின்றது. இவன் இளையனாக இருந்ததனால் அவனைச் சிறையிலடைத்தனர் அவனது சுற்றத்தார். அவன் சிறையிலிருந்து ஆட்சி செய்ததை பட்டினப்பாலை[300] கூறுகின்றது.

### 35.1 ஆட்சியுரிமைப்போர்

சேர, பாண்டிய வேந்தர்களிடம் அடிக்கடி போர் நிகழ்ந்ததற்கான சான்றுகள் இல்லை. ஆனால் சோழர் பரம்பரையில் 'நலங்கிள்ளியும் நெடுங்கிள்ளியும் பகைகொண்டு பலமுறை போர் புரிந்தனர்.'[301] இது சகோதரர்களிடையே நடந்தது. தந்தைக்கும் மகன்களுக்குமிடையே ஆட்சியுரிமைப் போர் நடந்ததை கோப்பெருஞ்சோழன் வரலாறு[302] உணர்த்துகின்றது.

ஆட்சியுரிமைக்கு ஆண் வாரிசு இல்லாத போது பட்டத்து யானையிடம் மலர்மாலை கொடுத்து அதனை நகர்வலம் வரச் செய்வார்கள். அப்பொழுது அந்த யானை யாருடைய கழுத்தில் மாலையிடுகின்றதோ

அவரே பட்டத்து அரசனாக நியமிக்கப்படுவர். இவ்வாறு கரிகால் வளவன் தேர்ந்தெடுக்கப்பட்டதாக பழமொழி[303] கூறுகின்றது.

ஆட்சியுரிமைக்கு வயது வரம்பில்லை. ஐந்து வயதில் திருமாவளவன் ஆட்சிப் பொறுப்பேற்றதைப் ‘பெருந்தொகை’ [304] குறிப்பிடுகின்றது. சங்க இலக்கியமான பொருநராற்றுப்படை, ‘அவன் மிகவும் இளைய வயதில் ஆட்சிப் பொறுப்பேற்றான்[305]’ என்கிறது. தலையாலங்கானத்துப் பாண்டியன் நெடுஞ்செழியன் ஆட்சிப் பொறுப்பேற்றபோது நனிமிகு இளையவனாக இருந்தான் என்கிறது புறம். இதனை

தாலி களைந்தன்று மிலனே பால்விட்
டயினியு மின்றயின் றனனே[306]

என்கிறார் இடைக்குன்றூர்க்கிழார்.

### 3.36 அரசனது கடமைகள்

அரசாளும் வேந்தன் குடிகளைக் காப்பதே முதன்மை கடமையாகக் கொள்ள வேண்டும். அப்போது தான் நாட்டில் துன்பம் நீங்கி மகிழ்ச்சி பெருகும். மக்கள் அரசனைப் போற்றுவர். தொல்காப்பியம் அரசனுக்குரிய கடமைகளாக ஓதல், வேட்டல், ஈதல் படையோம்புதல், குடியோம்புதல் என்றும் ஐந்தை ‘ஐவகை மரபின் அரசர் பக்கம்’[308] என்கிறது. வேந்தனின் கடமையாகப்புறம்

‘வேன்மிகு தானே வேந்தற்கு கடனே’[309] என்கிறது.

### 3.37 பாதுகாப்பு அளித்தல்

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் தம் மக்களை ‘புலிதன் குட்டிகளைப் பேணுவதைப் போல் பாதுகாத்தான்’[310] என்கிறார். இடைக்காடனார்.

இளஞ்சேரலிரும்பொறை ‘அறவழி ஆட்சி நடந்தியதனால் ஆட்சியில் கோள்களும் அவ்வவிடத்தில் இயங்கின; தப்பாது மழை பொழிந்தது; நாட்டு மக்களும் அச்சமின்றி மகிழ்வுடன் வாழ்ந்தனர்’[311] என்று பெருஞ்சேரலிரும்பொறை கூற்றிலிருந்து ‘ஆட்சி அறவழி இருந்தால்

அறக்கடவுளே வாழ்த்தும்' என்று கூறலாம்.

தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன், 'தன் மேல் போர் தொடுப்போரை சிதறியோடச் செய்து வெற்றி கொண்டு, அவர் முரசைக் கைப்பற்றுவேன்; இல்லையெனில், 'கொடியவன்' என்று மக்கள் பழிதூற்றும் கொடுங்கோலன்' என்று என்னை இகழ்வாராக என்று வஞ்சினம்

சிறுசொற் சொல்லிய சினங்கெழு வேந்தரை

............... ....................... .............

............... ....................... .............

குடிபழி தூற்றங் கோலே னாகு[312]

உரைக்கின்றான். இப்பாடல் பாண்டியன் மக்களை முதன்மைப்படுத்தியே வாழ்ந்தான் என்பதைக் குறிப்பிடுகின்றது. பண்டைத் தமிழ் வேந்தரின் ஆட்சி சிறப்பிற்கும் மக்களின் பாதுகாப்பிற்கும் தேவை அரசனின் சான்றாண்மை, அறநெறிதவறா ஆட்சி, வீரம் ஆகியவை என்பதையே வெளிக்காட்டுகின்றது.

### 3.38 அரசியல் உறுப்புக்கள்

ஒரு அரசன் நாடாள ஆறு உறுப்புக்கள் தேவை என்கிறார் வள்ளுவர்.

படைகுடி கூழ் அமைச்சு நட்பு அரண் ஆறும்

உடையான் அரசருள் ஏறு[313]

இதிலிருந்து இவைகள் அரசனுக்கு அவசியம் தேவை எனலாம். நாட்டைப்பகைவர் கைப்பற்றாதிருக்கப் படைகள் வேண்டும். குடிமக்கள் மன்னனை நேசிப்பவர்களாக இருக்க வேண்டும். மக்கள் பசியின்றி வாழ உணவு வேண்டும். மன்னனுக்கு அரசியல் அறங்களை எடுத்துரைக்க அமைச்சர்கள் வேண்டும். நாட்டின் வளர்ச்சிக்கும் அமைதிக்கும் நட்பரசர்கள் வேண்டும். தலைநகரையும் நாட்டையும் காக்க அரண்கள் வேண்டும்.

#### 3.38.1 அமைச்சர் சுற்றம்

அரசன் தான் செய்ய வேண்டிய அரச காரியங்களை ஒரு குழுவுடன் கலந்து செய்தல் மரபு. அக்குழுவில் முதலிடம் பெற்றவர் அமைச்சர். நல்லமைச்சர்களைச் சுற்றமாகக் கொண்டிருப்பின் அவ்வரசனாட்சி

நல்லாட்சியாகும். அரசனின் நலத்தில் நாட்டம் கொண்டு இடைவிடாது அவனைச் சுற்றியிருப்போரைச் சுற்றம் என்று இலக்கியங்கள் இயம்புகின்றன. சுற்றம் என்பது, 'பால் புளிப்பிறும் ஞாயிறு தன் ஒளி குன்றினும் வேதநெறி திரியினும் தன்னியல்பு மாறாத இயல்பினையுடையவரையே குறிக்கும்'[314] என்கிறது புறம். மேலும் வேந்தனின் கருத்திற்கும் கடமைக்கும் முரணின்றி அவன் எண்ணியதை தாமும் எண்ணி அவன் செயலுக்கு வேண்டுவன செய்வது சுற்றம் என்று பதிற்றுப்பத்து கூறுகின்றது[315]. சுற்றம் என்பது 'அமைச்சர்' என்பதும் ஒன்றாக இருக்கலாம் என்கிறார் சு.வித்தியானந்தன்[316]. ஏனென்றால் அரச சுற்றத்தினரை 'அமைச்சர்கள்' என்று முதன்மைப் படுத்திக்கூறுவது இன்றைய வழக்கம்

சங்க இலக்கியத்துள் பதிற்றுப்பத்தில் மையூர்க்கிழான் அமைச்சராக இளஞ்சேரலிரும்பொறையிடம் இருந்து உண்மையைக் கடைப்பிடித்து வந்தான் என்பதை

மெய்யூ ரமைச்சியன் மையூர் கிழானைப்
புரையறு கேள்வி புரோசு மயக்கி[317]

உணர்த்துகின்றன. மேலும் எட்டாம்பத்து பதிகமானது என்ற அடிகள் இரும்பொறை தன்னைச் சிறப்பித்துப்பாடிய அரிசில்கிழார் என்னும் புலவருக்குத் தன் அரண்மனையை அரசுரிமையோடு கொடுத்தான். அதனோடு ஒன்பது நூறாயிரம் காணம் பணத்தையும் கொடுத்தான். அவற்றைப் பெற்றுக் கொண்ட அரிசில்கிழார் தாம் பெற்ற பொருள்களை 'நீரே ஏற்றுக்கொண்டு அருள்க' என்றதனால் புலவரின் வேண்டுகோளை நிறைவேற்றி மீண்டும் ஆட்சிப் பொறப்பை ஏற்ற தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை அது முதல் அரிசில்கிழாரை அமைச்சராக்கினார். என்ற செய்தியானது. புலமிக்க, திறமிக்கவர்களை அமைச்சர்களாக அக்கால வேந்தர் கொண்டிருந்தனர் என்பதை அறிய முடிகின்றது.

### 3.38.2 அரண்கள்

நிலவரன், நீரரண், காட்டரண், மலையரண் என அரண்மனையைச்

சுற்றி அரண்மனையைப் பாதுகாக்கும் பொருட்டு அமைக்கப்பட்டிருக்கும். நிலவரண் என்பது மதிலுக்கு உள்ளேயும் புறத்தேயும் அமைந்திருக்கும் பரந்த இடமாகும்; நீரரண் என்பது ஆறும்கடலும் இயற்கையும், சில இடங்களில் அகழி போன்ற செயற்கை அரண்களும் அமைக்கப்படுதல் உண்டு. படைவீரர் மறைந்திருப்பதும் பகைவீரர் புகாதிருப்பவும் மதிலிற்கடுத்துள்ள காடுகள் காட்டரண் ஆகும்; மதிலரண்கள் மலைகளின் உச்சிகளை இணைத்துக் கட்டப்படும். இவற்றிலிருந்து அரண்கள் எதிரிகளிடமிருந்து நாட்டையும் அரண்மனையையும் காக்கப் பயன்படுகிறது என்பதைக் காட்டுகின்றது.

### 3.39 காவலர்

பண்டையத் தமிழகத்தில், 'குடிகளைக் கொலை, களவு முதலியவற்றிலிருந்து காத்தல் ஆட்சித் தலைவனின் கடமையாக இருந்தது' காத்தல் தொழிலை அடிப்படையிலேயே 'வேந்தன்', 'காவலன்' எனப்பட்டான். பின்னர் நாட்டைக் காக்க, 'நகர்க்காவலர், ஊர்க்காவலர், தெருக்காவலர்' என மூவகைக் காவலர் இருந்ததை அறிய முடிகின்றது.

### 3.39.1 நகர்க்காவலர்

நகரைக் காவல் செய்வதும், ஒற்றறிந்துரைப்பதும் நகர்க் காவலரின் கடமையாகும். இரவு நேரங்களில் நகரில் கொள்ளையர்கள் திரிந்தனர். அவர்கள், 'கருநிறத்தவர், கல், மரம் அறுக்கும் உளி போன்று கூர்மை உளி உடையவர்; நூலேணியும் வைத்திருப்பர்; இடையில் வாள் தொங்கும்; நுண்ணிய வேலைப் பாடமைந்த ஆடை அணிந்திருப்பர்'[319] இவர்களைப் பற்றி மதுரைக் காஞ்சி எடுத்துரைக்கின்றது.

### 3.39.2. ஊர்க் காவலர்

இரவு நேரங்களில் ஊரைக் காவல் செய்தனர். இவர்கள் 'சூலம் ஏந்திய கையுடன் திரிவர்' என்பதை

யாமங் கொள்பவர் சுடர்நிழல்[320]

என்கிறது. புறம் இவ்வாறு திரியும் போது மக்களை பெரிய நாவமைந்த மணியால் எச்சரிப்பதுண்டு. இதனை,

நெடுநா வொண்மணி நிழத்திய நடுநாள்[321]

என்னும் முல்லைப்பாட்டு அடி எடுத்தியம்புகின்றது.

### 3.39.3 தெருக்காவலர்

வழிப்போக்கரைக் கொள்ளையரிடமிருந்து காப்பாற்றுதலைக் கடமையாகக் கொண்டனர்.

தெருக்காவலர் கடுமையான இயல்பினை உடையவராக விளங்கினர். வில்லை கையிலேந்தி நின்றனர்.

மதுரைக்காஞ்சி அவர்கள் தங்குமிடம், செயல் பற்றிக் கூறுகையில், ‘குழையால் வேய்ந்த குடிசையில் இருப்பர்; மான் தோலாலான படுக்கையில் உறங்குவர்; தழையால் கட்டப்பட்ட மாலையினையும் அணிந்திருப்பர்; கடிய சொல்லினை உடையவர்’[322] என்று கூறுகின்றது.

வழிப்பறிக் கொள்ளையர்களிடமிருந்து வழிப்போக்கர்களைக் காப்பாற்ற, ‘யாரும் எளிதில் நடக்கவியலாத அருஞ்சுரங்களில் கையில் அம்பு மற்றும் வில்லை யேந்தியவராய் நின்றனர்’[323] என்கிறது நற்றிணை.

தற்காலத்திலும் அரசனிடமே காவல் துறை உள்ளது. அன்றும் அரசனிடமே இருந்ததையும் அதனைத் திறம்பட நிர்வாகித்ததையும் சங்க இலக்கியங்கள் எடுத்தியம்புகின்றன.

### 3.40 தூதர்

ஒரு அரசனின் சார்பாளராக மற்றொரு வேந்தனின் அரசவையில் செயல்பட்டவர் ‘தூதர்’ எனப்பட்டார். தற்காலத்தில் நிலைத்தூதர்களை ‘Ambassador’ என்றும்; தற்காலிகத் தூதர்களை ‘Envoy’ என்றும் அழைப்பர்.

‘தூதுவராகப் பொதுவாகப் பிராம்மணர்களே செயல்பட்டனர்’ என்கிறார் தொல்காப்பியர். தூதுரைப் பற்றி வள்ளுவர், ‘தனது கடமையை அறிந்து, பொருத்தமான காலத்தைத் தெரிந்து, எதிரிகளின் தன்மையை உணர்ந்து எவன் செயல்படுகிறானோ அவனே சிறந்த தூதன்’ என்கிறார்[325]. பிராம்மணர்கள் தூது சென்றதற்குச் சான்றாக

‘எல்லி வந்து நில்லாது புக்குச்

சொல்லிய சொல்லுச் சிலவே யதற்கே'[326]

என்ற வரிகளில் 'பார்ப்பான் இரவில் வந்து சொல்லிய சொற்கள் சிலவே' அது போரையேத் தவிர்த்து விட்டது. அவர்கள் காட்டுவழியே வெண்மையான மடிக்கப்பட்ட ஓலையைத் தன்னோடு கொண்டு செல்வான்[327] என்பதை அகம் எடுத்துரைக்கினறது. இதிலிருந்து அந்தணர் அமைதித் தூதுவராகச் சென்றதை அறிய முடிகின்றது.

### 3.41. ஒற்றர்

பகைவேந்தரின் நாட்டு நடப்புகளை அறிந்து கொள்ளவும், உள்நாட்டுச் சூழ்நிலைகளைத் தெரிந்து கொள்ளவும் ஒற்றர் அக்காலத்தில் வேந்தரால் நியமிக்கப்பட்டனர். தொல்காப்பியர் 'ஒற்றர் ஆகிய வேயே'[328] என்கிறார். இதற்கு நச்சினார்க்கினியர், 'ஒற்று அறிதல் நாட்டில் நெருக்கடி நிறைந்த காலங்களில் மட்டுமன்றி எல்லாக் காலங்களிலும் நிகழ்ந்ததென்பார்.[329]' ஒற்றில் தலைச்சிறந்தது எதுவெனின், 'ஒருவன் ஒற்றினால் அறிந்து வந்த செய்தியை, மற்றோர் ஒற்றன் மூலம் உறுதிப்படுத்துதல் தலையாயதாய் கருதப்பட்டதே ஆகும்[330]' என்கிறார் வள்ளுவர்.

### 3.42 காவிதி மாக்கள்

அரசனுக்கு உறுதுணையாய் நின்றோருள் காவிதிமாக்களும் ஆவர் அவர்கள், 'வேந்தனிடத்து காணப்பெறும் நன்மை, தீமைகளை அறிவாலே கண்டு; மேலுமாராய்ந்து அவர்கள் தீதின்பால் செல்லாதவாறு தடுத்து; அன்புநெறி, அறச்செயல் மேற்கொள்ளச் செய்து தீவினையில் இருந்து விலக்கி வேந்தன் புகழை நிலைக்கச் செய்வதில்' பெரும்பங்கு வகித்தனர் என்பதை மதுரைக்காஞ்சி மூலம் அறியலாகின்றது[331].

### 3.43 நீதி வழங்கல்

அரச நீதி, நாட்டு மக்களைத் துயரங்களினின்று காத்தலே ஆகும். நீதி வழுவாமையே 'கொற்றம்' எனக் கூறப்பட்டது. 'அறநெறி முதற்றே அரசின் கொற்றம்[332]' என்கிறது. புறம்.

சோழன் கரிகாலன் தன்னிடம் நீதிகேட்டு வந்த இருமுதியவர்களுக்கு முதியவன் வேடத்தில் நீதி வழங்கியதை

‘.......... ...........முதியோர்
அவைபுகு பொழுதிற்றம் பகைமுரண் செலவும்’[333]
‘இளமை நாணி முதுமை யெய்தி
உரைமுடிவு காட்டிய உரவோன்’[334]

என்ற இலக்கிய அடிகள் உணர்த்துகின்றன. இதிலிருந்து கரிகாலன் இளையவனாக இருந்தாலும் தம் நாட்டில் நீதி நிலைபெற வேண்டும் என்பதை உணர்ந்திருந்ததைக் காட்டுகின்றது.

### 3.44 அறங்கூறவையம்:

இன்றைய நீதி மன்றத்தைப் போன்று அன்று நீதி வழங்கிய அமைப்பு ‘அறங்கூறவையம்’ ஆகும். இது ஊரவை நாளவை, நகரவை என பலவாறாகச் செயல்பட்டன.

### 3.45 அறங்கூறவையம் ஊரவை:

இன்றைய கால நீதிமன்றங்களைப் போன்று சங்க காலத்தில் நீதி வழங்குவதற்கென்று இயங்கிய ஓர் நகர அமைப்பே அறங்கூறவையமாகும். அறங்கூறவையத்தினர் ‘அறவோர்’ எனப்பட்டனர். கிராமங்களில் நீதி வழங்கப்பட்ட இடம் ‘மன்றம்’ எனப்பட்டது. பல வீடுகள் சேர்ந்தது சேரி[335] சேரியை விடப்பெரியது கிராமம்[336] பொதுவாகக் கிராமம் தனது விவகாரங்களைத் தானே கவனித்துக் கொண்டது. கிராமக் காரியங்களைக் கவனிக்க ‘அவை’ கூடிற்று[337] அவையைக் குறிக்க மன்றம், பொதியில், அம்பலம், பொதியல் எனப் பல சொற்கள் இருந்தன.

‘மன்றம்’ கிராமத்து மக்கள் யாவரும் வந்து வீற்றிருக்குமாறு ஊர் நடுவில் அமைந்த ‘மரத்து அடி’ என்று கூறிப் பொதியலையும் அம்பலத்தையும் ஒன்றாகக் கருதுவர். அவர்கள் கருத்துப்படி ‘அம்பலம்’ என்பது உயர்த்திக் கட்டிய திண்ணை போன்றது[338].

‘பொதியில் கிராமத்தில் பெரும்பாலும் அதற்கு வெளியில் அமைந்த

ஓரிடம்' அங்கு அரசியல் நீதிமன்ற அலுவல்களோடு தொடர்புடைய விவாதங்களுக்கு பொதுமக்களும் கூடும் இடமாகும். எனவே அதனைத் தலைநகரிலுள்ள 'அவை'யோடுப் பொருத்தி, அங்கு மன்னனது அறக்களத்தவை 'அவை'போல நீதி நிர்வாக வி  யங்களை விவாதித்தனர் என்கிறார் டாக்டர்.ந.சுப்ரமணியன்[339] இவற்றிலிருந்தே 'பிற்காலச் சோழர் காலத்தில் கிராம (தல) சுயாட்சி முறை' பிறந்ததெனலாம் என்று க.அ.நீலகண்டசாஸ்திரி கூற்று ஏற்கக்கூடியதே.

மன்றமும், பொதியிலும் கிராமத்தில் எழுந்த சில்லறைத் தகராறுகளைத் தீர்த்து வைப்பதில் ஈடுபட்டன. இவற்றிற்கு 'இன்றைய பஞ்சாயத்துக்களைவிட அதிக அதிகாரமிருந்தது' எனலாம். ஏனெனில் இவற்றில் மேல்முறையீடு இல்லை.

தமிழ் மன்னர்கள் ஆட்சியில் குற்றங்களை விசாரித்து தீர்ப்பு வழங்கிய அறங்கூறவையம் போன்று கிராமங்களில் பொதியிலும் மன்றமும் விளங்கின.

### 3.45.1 ஊரவை உறுப்பினர்

ஊரவைகளுக்கு உறுப்பினர்களைத் தேர்த்தெடுக்கும் முறையிலிருந்து அதன் இன்றியமையாமையினை உணர முடிகின்றது. உறுப்பினரைத் தேர்ந்தெடுக்கும் தேர்தல் முறையை அகநானூறு

'கயிறுபிணிக் குழிசி ஓலைக் கொண்மார்
பொறிகண் பழிக்கும் ஆவண மாக்களின்'[340]

என்று கூறுகிறது. இவ்வரிகளில் மருதனிளநாகனார் 'பனையோலை வாக்குச் சீட்டாகப் பயன்படுத்தப்பட்டது. வாக்குச் சீட்டுகளைக் குடத்தினுள் போட்டு அதன் மேல் முத்திரையும் இடப்பட்டது. அதைப்பிரிக்கும்போது இலச்சினை சரியாக உள்ளதா என்று பார்த்தபிறகே பிரிக்கின்றனர்' என்பதைக் கூறுகின்றார்[341]. இது பிற்காலச் சோழர் காலத்தில் ஊரவைப் பொறுப்பாளரைத் தேர்ந்தெடுக்கப் பின்பற்றப்பட்ட 'குடவோலை முறைக்கு' இதுவே ஆதாரமாகக் கொள்ளலாம் என்ற க.அ.நீலகண்டசாஸ்திரியின் கருத்து ஏற்றுக் கொள்ளக்கூடியதாகும்.

### 3.45.2 நாளவை

நாளவை என்பது அரண்மனையுள் கூடும் புலவர், பாணர் முதலானோர்க்கு பரிசில் வழங்கல், குறை தீர்த்தல் ஆகியவற்றை செய்யும் அவை ஆகும். இது 'நாள் மகிழிருக்கை'[342] எனவும்; நாளவை[343] எனவும்; பொற்பு விளங்கும் புகழவை[344] எனவும் வழங்கப்படுகின்றது. மேலும் சேரமான் செங்குட்டுவன் கோதையின் நாளவையில் உரிமையோடு செம்மாந்து புகுதல் இரவலர்க்கு மிக எளிமையானது என்பதை

'செம்ம னாளவை யண்ணாந்து புகுதல்
எம்மன வாழ்க்கை யிரவலர்க் கெளிதே'[345]

என்ற அடிகள் சுட்டுகின்றன. இதிலிருந்து இன்றைய மாவட்ட ஆட்சியர் அலுவலகத்தில் 'குறைதீர்க்கும் நாள் கூட்டம்' நடைபெறுவதை ஒத்துள்ளதெனலாம்.

### 3.45.3. அறங்கூறவையம் – நகர அவையம்

நீதி வழங்கிய நகர அவையம் அறங்கூறவையம் எனலாம். ஏனென்றால் இவ்வவையம், உறையூர், மதுரை போன்ற தலைநகரங்களில் செயல்பட்டதற்கான சான்றுகள் உள்ளன.

**உறையூர்**

உறையூரில் மறம் பொருந்திய வீரர்கள் மட்டுமல்ல அறம் பொருந்திய, அறம் கூறும் அவையமும் நின்று நிலைபெற்றிருந்ததை ஆலங்குடி வங்கனார்

மறங்கெழு சோழர் உறந்தை அவையத்து
அறங்கெடல் அறியாது[346]

என்ற நற்றிணை அடிகளில் உறந்தையில் சோழர்கள் நீதியை அறங்கூறவையத்தின் மூலம் நிலைநாட்டியதைக் குறிப்பிடுகின்றார். அறம் போற்றிய நல்லவை உறையூரில் இருந்ததை அகமும் புறமும்

'அறம் கெழு நல்லவை உறந்தை'[347]
'அறம் துஞ்சு உறந்தை'[348]

என எடுத்துரைக்கின்றன.

**மதுரை:**

உறையூரைப் போன்று மதுரையிலும் அறங்கூறும் அவையமிருந்தது. இங்கு சான்றோர்கள் இருந்து நீதி வழங்கினர். அச்சம், துன்பம், பற்று ஆகியவற்றினின்று விடுபட்டு வெகுளாது விரும்பாது, துலாக்கோலையொத்த நடுநிலை பேணி, சிறந்த ஒழுக்கமுடையோராய் இச்சான்றோர் விளங்கினர் என்பதை

'அச்சமும் அவலமும் ஆர்வமும் நீக்கிச்
செற்றமும் உவகையுஞ் செய்யாது காத்து
ஞெமன்கோ லன்ன செம்மைத் தாகிச்
சிறந்த கொள்கை அறங்கூட றவையமும்'[349]

என்று மதுரைக்காஞ்சி கூறுகின்றது.

**அறங்கூறவைய உறுப்பினர்**

அவைக்கு அறமறிந்த சான்றோர்களையேத் தேர்ந்தெடுப்பது வேந்தனின் கடமையாகும். அவர்கள் நீதியினின்று பிறழின் அப்பழி வேந்தனையேச் சாரும் என்பதனை

அறநிலை திரியா வன்பி னவைக்களத்துத்
திறனி லொருவனை நாட்டி முறைதிரிந்து
மெலிகோல் செய்தேனாகு[350]

என்று பாண்டியன் கூறுவதிலிருந்து அறங்கூறவையம் சான்றோர்களால் நிறைந்திருந்ததை அறிய முடிகின்றது.

**தீர்ப்பு:**

சான்றோர்கள் நிறைந்த இவ்வறங்ககூறவையத்தில் தீர்ப்பானது விரைவில் வழங்கப்பட்டது. நீதி கேட்டு வரும் மக்களுக்கு அவர்களின் வழக்கு மிகவும் சிக்கல் உடையதாக இருப்பினும் விரைவில் தீர்த்து நீதி வழங்கப்பட்டதை புறம்

சான்றோ ரிருந்த வவையத் துற்றோன்
ஆசா கென்னும் பூசல் போல[351]

என்று கூறுவதிலிருந்து அறிய முடிகின்றது.

**3.46. குற்றமும் தண்டணையும்**

தீர்ப்பு, மனச்சான்றின்படி வழங்கப்பட்டதற்குப் 'பொற்கைப் பாண்டியன்' எடுத்துக்காட்டாகும். சங்க காலத்தில் குற்றம் புரிந்தோர்க்குச் சிறைத்தண்டனை வழங்கப்பட்டமையை சங்க இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. குற்றவாளிகளை அடைக்கும் இடம் சிறை அல்லது சிறைக்கோட்டம் என்று அழைக்கப்படும்[352].

சேரமான் கணைக்காலிரும்பொறை, சோழன் செங்கணானோடு போரிட்டுத் தோற்றதனால் சேரன் சிறைப்படுத்தப்பட்டான்; குடவாயிற் கோட்டத்து அடைக்கப்பட்டிருந்த அவன் குடிக்கத் தண்ணீர் கேட்டு, காலம் தாழ்த்தியதனால் அதைக் குடிக்காது துஞ்சிய செய்தியிலிருந்து, 'குற்றவாளிகள் மட்டுமன்றி போரில் தோற்ற பகைவர்களையும், பகை மன்னர்களையும் சிறையிலடைக்கும் வழக்கம்'[353] இருந்ததை வெளிப்படுத்துகின்றது.

'யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரலிரும் பொறை என்னும் சேர அரசன், தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனால் சிறைப்படுத்தப்பட்டதை'[354] புறப்பாடல் வழி அறியலாம். பண்டைய வேந்தர் உற்றார் உறவினர் என்று பாராமல், நடுவுநிலை நின்று குற்றத்தின் தன்மையாராய்ந்து தண்டனை வழங்கியதை

நீமெய் கண்ட தீமை காணின்
ஒப்ப நாடி யத்தக வொறுத்தி[355]

என்ற அடிகள் குறிப்பிடுகின்றன. தண்டனை பற்றி வள்ளுவர், 'தண்டணை கொடுமையானதாக இருந்த போதிலும் அது தவறானதாக கருதப்படவில்லை'. இதனை

'குடிபுறங் காத்தோம்பி குற்றங் கடிதல்
வடுவன்று வேந்தன் தொழில்[356]

என்கிறது. சங்க இலக்கிய வழி நீதி நெறி தவறாது தண்டனை அளிக்கப்பட்டதை அறிய முடிகின்றது.

### 3.46. வருவாய்

அரசு இயங்கப் பொருள் தேவை. அதனால் 'செல்வம் ஈட்டுதல்

அரசனுக்கு அவசியம் எனக் கருதப்பட்டது. வருவாய் வருவதற்குப் பலவழிகளிருப்பினும் முதன்மையானது வரியாகும். இறை, திறை, இரவு, கடமை, குடிமை, ஆயம், கொண்டி, உறுபொருள், உல்குபொருள் முதலிய பெயர்களில் வரிகள் வசூலிக்கப்பட்டன. வரி திரட்டப்படும் நிலப்பகுதி 'வாரியம்' எனப்படும்[357]. வாரி என்பது வரி. வரித்திரட்டும் அதிகாரி 'வாரியார்' எனப்பட்டார் நிலவரியே முதன்மையானதாகக் கருதப்பட்டது.

**இறை**

இறைவன் அல்லது அரசனுக்கு மக்களால் வழங்கப்படுவது. இது பெரும்பாலும் நிலத்தின் மீது விதிக்கப்படும் வரியாகும். நிலமுடையார் அனைவரும் வரி செலுத்த வேண்டும் என்பது அன்றிலிருந்து இன்றுவரை உள்ள நடைமுறையாகும்.

**திறை**

'திறை' என்பது தோற்ற மன்னர்கள் வென்ற மன்னர்களுக்கு ஆண்டுதோறும் வழங்கும் பொருளாகும். இதனை,

பணிந்தோர் தேஎத் தம்வழி நடப்பப்
பணியார் தேஎம் பணித்துத்திறை கொண்மார்[358].

**இரவு:**

சில சூழ்நிலைகளில் கட்டாயமாகப் பெற வேண்டிய பொருள். இதனை அதிகப்படியான 'தண்டல்' அல்லது 'கட்டாய தானம்' என்பர் வள்ளுவர்.

**புரவு:**

புரத்தல் அல்லது காத்தல் வரி எனப்படும். இதனை புறம் 'குடிபுரவு இரக்கும்'[360] என்கிறது.

**கடமை:**

ஒவ்வொரு குடிமகனும் அரசுக்கு ஆற்ற வேண்டிய கடமை அதாவது உழைப்பாகவோ, பொருளாகவோ இருக்கலாம்.

**குடிமை:**

வீடு அல்லது வீட்டுமனை ஆகியவற்றின் மீதும் அரசு விதிக்கும் வரி. குடி மீது விதிக்கப்பட்ட வரி குடிமை எனப்பட்டது.

### கொண்டி

சங்க காலத்தில் அரசர்களுக்கு இடையே நடத்த கடற்போரில் வென்ற அரசன் தோற்றவனிடமிருந்து கொண்ட பெரும்பொருள் 'கொண்டி' எனப்பட்டது.

'கொண்டி வேண்டுவனாயின்'[361]

என்று புறம் கூறுவதிலிருந்து அறியலாம்.

### உறுபொருள்

இது வரியன்று. ஆனாலும் இது அரசுக்குரிய பொருளே செல்வர், வழித்தோன்றலின்றி இறப்பின் அவர்கள் ஈட்டி வைத்த பொருள், பிற உடைமைகள் அன்றியும் கண்டெடுக்கப்பட்ட அல்லது தோண்டி யெடுக்கப்படும் பொற்குவைகள், பொருட்குவைகள் அரசுக்கே உரியன. இதனை,

உறுபொருளும் உல்குபொருளும்தன் ஒன்னார்த்
தெறுபொருளும் வேந்தன் பொருள்.[362]

என்று வள்ளுவர் உரைப்பதிலிருந்து அறியலாம்.

### உல்கு பொருள்:

சுங்க வரி 'வணிகவரி' எனப்படும். இது ஓரிடத்தில் இருந்து மற்றோர் இடத்திற்குப் பொருளைக் கொண்டு செல்லவும், வெளிநாட்டு உள்நாட்டுப் பொருட்களை எடுத்து வரவும் இவ்வரி விதிக்கப்பட்டது.

......... கழுதைச் சாத்தொடு வழங்கும்
உல்குடைப் ெ பருவழி கவலை காக்கும்[363]

எனப் பெரும்பாணாற்றுப்படை கூறுவதன் வழி அறியலாம்.

### தெறுபொருள்:

தெறுதல் என்பது பகை வெல்லுதல் எனப்பொருள்படும். இதுவும்

போர்க்காலத்தில் தோற்றவனிடத்திலிருந்து வென்றவன் வாரிக்கொண்டு வந்த பொருள். இது அரசனால் அரசுடைமையாகக் கருதப் பெறாமல் வெற்றி விளைவித்த வீரர்களுக்கும் தேடிவந்த பாணர்க்கும் பொருநர்க்கும் அளிக்கப்படும்.

### 3.47. செலவுகள்

இயற்றலும் ஈட்டலும் காத்தலும் காத்த
வகுத்தலும் வல்ல தரசு.[364]

என்ற குறளில், 'ஓர் அரசு தனக்குரிய பொருள் வரும் வழியைப் பெருக்கி; அதனை எவ்வாறு செலவிடல் வேண்டும் என்பதையும் வெளிப்படுத்தி உள்ளார்.

மக்களின் நலன் கருதி பல சமுதாய நலத்திட்டங்களை உருவாக்கி அதற்கு செலவிட வேண்டும். 'சோழ நாடு சோறுடைத்து' என்பதற்கேற்ப; அதற்குத் தேவை 'நீர்நிலை ஆதாரம்' அதனை திருமாவளவன்

குளம் தொட்டு வளம் பெருக்கி,
காடு கொன்று நாடாக்கிய செய்தி[365]

பட்டினப்பாலை கூறும் சோழன் நலங்கிள்ளி காவிரியின் நீர் எங்கும் பாய பல கால்வாய்களை வெட்டினான். உயிர் வாழ்வதற்கு வேண்டிய உணவைக் கொடுப்பவை நிலமும் நீருமாகும். நிலத்திற்கு வேண்டிய நீர் வசதிகளைச் செய்து தருவதே முதன்மையான கடமையாகக் கருதப்பட்டது. அதைச் செவ்வனே நிறைவேற்றியதை அறிய முடிகின்றது.

### 3.48 அரச மகளிர் வாழ்வு

நாடாளும் அரசனை 'இறைவன்', அரசன் என்று கூறுவதுண்டு. அரசனது இல்லம் 'கோயில்' என்றழைக்கப்படுதலால் அரசியை 'கோயிலாள்'[367] எனப் பதிற்றுப்பத்து கூறுகின்றது.

கற்பில் சிறந்தவள்; அகமுறுவல் உடையவள்; அடக்கம், மென்மை நிறைந்தவள்; அமுதமொழி பேசுபவள்; ஒளி பொருந்திய நெற்றி உடையவள்; கூர்பார்வையுடைய கண்கள் கொண்டவள் கோப்பெருந்தேவி

என்கிறார் குமட்டூர்க் கண்ணனார்[368]. இத்தேவியின் கற்பு 'மீனொடு புரையும் கற்பு'[369] என அருந்ததியுடன் ஒப்பிடப்படுகின்றது.

பாண்டியன் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியனின் மனைவி கோப்பெருஞ்தேவியின் கற்பின் திறத்தினை இளங்கோவடிகள் குறிப்பிட்டுள்ளார்.

அரசன் மனைவி 'அரசமாதேவி' எனப்பட்டாள் அவளுக்கென்று தனி மனையும் இருந்தது. அரசி வாழ்ந்த பகுதி, 'அந்தப்புரம்' எனப்பட்டது.

'அருந்ததி அனைய கற்பினள்' என்று விண்ணுறை மகளிரோடு இணைத்து உயர்நிலையினராகக் கருதப்பட்டதை

ஒலிந்த கூந்த லறம்சால் கற்பிற்
குழைக்குவிளக் காகிய வொண்ணுதற் பொன்னின்
இழைக்குவிளக் காகிய அவ்வாங் குந்தி
விசும்புவழங்கு மகளி ருள்ளுஞ் சிறந்து
செம்மீ னனையள் ......................[320]

என்ற அடிகள் புலப்படுத்துகின்றன. சேர அரசன் மனைவி ஓவியம் தீட்டப்பெற்ற நெடிய அரண்மனையில் பாவை போன்ற மகளிரொடு செல்வச் செழிப்புடன் இருந்ததை பதிற்றுப்பத்து

ஓவத்தன்ன வுருகெழு நெடுநகர்ப்
பாவையன்ன மகளிர் நாப்பண்
புகன்ற மாண்பொறிப் பொலிந்த சாந்தமொடு
.......... .......... ....................
.......... .......... ....................
சேணாறு நல்லிசைச் சேயிழை கணவ[371]'

என்று காட்டுவதன் வழி அறியலாம்.

### 3.49 மணமுறை:

குடும்ப வாழ்க்கைக்கு ஆதாரமான 'திருமணம்' என்னும் நிகழ்ச்சி இருந்தது. பண்டைக் காலத்தில் முதலில் இவ்வுரிமை அந்தணர், அரசர், வணிகர் என்ற மூவர்க்கு மட்டுமே இருந்தது. பின் மேலோர் மூவர்க்கும் புணர்த்த காரணம்

கீழோர்க்காகி காலமும் உண்டே[372]

என்று தொல்காப்பியர் கூறுவதற்கேற்ப வேளாளர்க்கும் இவ்வுரிமை இருந்தது. இரண்டு முறை திருமணம் செய்யும் வழக்கம் அரசர்களிடம் இருந்தது என்பதற்குச் சான்றாக, 'இமய வரம்பன் நெடுஞ்சேரலாதனுக்கு மனைவியர் இருவர்; ஒருத்தி சோழன் மணக்கிள்ளியின் மகள், நற்சோணை; மற்றொருத்தி வேளாவிக் கோமான் பதுமன் மகள்'[373] என்று பதிற்றுப்பத்து பதிகம் வழி அறிய முடிகின்றது.

பலதார மணம் வேந்தர்களான சேர, சோழ, பாண்டியர்களிடம் இல்லை. ஆனால் ஆய் தம் மகளிரோடு[374] இறந்து போனது பற்றி புறம் கூறுகின்றது. இவர்கள் 'உரிமை மகளிர்' என அழைக்கப்பட்டதாகவும் கூறுவர்.

**உரிமை மகளிர்:**

உரிமை மகளிர் பலர் இருந்தனர். அரசருக்கே உரியவர்கள். கற்பொழுக்கம் மிக்கவர்கள், 'சோழன் கரிகாலன் தன் உரிமை மகளிரொடு வேள்வி செய்ததையும், அவன் இறந்த பிறகு அம்மகளிர் அருங்கலன் முதலிய அணிகலன்களை ஒழித்ததையும் புறம் கூறுகின்றது'.

உரிமை மகளிர் பற்றி மதுரைக்காஞ்சி, 'சாயுங் கால இளவெயில் நிறம், மாந்தளிர்மேனி, மயில் போன்ற சாயல் கற்பு, கல்பதித்த நகைகள், இனிய சொற்கள் என அவர்களின் தோற்றத்தை' எடுத்துரைக்கின்றது[376].

**கைம்மையும் தீப்பாய்தலும்**

'கைம்மை' என்ற சொல் மூன்று[377] இடங்களில் வந்துள்ளது. கணவனை இழந்த பெண் கைம்மையெய்தி தவவாழ்வு மேற்கொள்ளுதல். 'வெந்த வேளையிலையும் பழைய சோறு' எனப் பெருங்கோப்பெண்டு கூறுவதிலிருந்து அறியலாம்[378]. பொரித்த அல்லது வெந்த ஆம்பல் மலரே அவர்களது உணவாம்' என்கிறது புறம்.

கைம்மை நோன்பை அரச மகளிரும் மேற்கொள்வது இயல்பு. ஆனால் 'போரில் வீழ்ந்துபட்ட குடக்கோ சேரலாதனையும் சோழன் வேற்பல்

தடக்கை பெருவிறற்கிள்ளியையும் பாடிய கழாத்தலையார்' தம் பாடலில் கைம்மையை மேற்கொள்ளவில்லை

'............ பெண்டிரும்

பாசடகு மிசையார் பனிநீர் மூழ்கார்'[379]

என்று கூறி உள்ளதிலிருந்த அறியலாம். மேலும் கைம்மை நோன்பை மேற்கொள்ளும் மகளிர்

தொடிகழி மகளிர்[380]

ஆளில் பெண்டிர்[381]

உயவல் பெண்டிர்[382]

பருத்திப் பெண்டிர்[383]

என்று குறிப்பிடப்பட்டுள்ளனர். 'தீப்பாய்தல்' என்ற சொல் 'உடன்கட்டை ஏறுதல்' எனவும் கூறப்பட்டது. சேரன், சோழன் மனைவியர் இறந்த தன் கணவன்மார்களின் போர்க்களத்திலேயே வீழ்ந்து மாண்டனர்.

'மார்பகம் பொருந்தி யாங்கமைந் தினரே'[384]

எனவும்; ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன் மனைவி பெருங்கோப்பெண்டு உடன்கட்டையேறியதை அதாவது தீப்பாய்ந்ததை புறப்பாடல் வழி அறிய முடிகின்றது.

அரச மகளிர் அரசனிறந்த பிறகு தானும் இறத்தலையே மேன்மையாகக் கருதினர் என்பதை அறிய முடிகின்றது.

### 3.50. அரசனின் வேள்வி

தனது நிலையான ஆட்சிக்கும் புகழுக்கும் வேள்வி இயற்றுதல் பழங்கால அரசனிடம் வழக்கமாக இருந்தது. ஆனால் தன்னைப்புகழ்ந்துப் பாடிய ஒரு அந்தணனுக்காகவும் அவன் மனைவிக்காகவும்; அவர்கள் சுவர்க்கம் புக பத்துப் பெருவேள்விகள் செய்வித்தான் பல்யானை செல்கெழுகுட்டுவன்[385].

சேரமான் பெருஞ்சேரலிரும்பொறை யாகம் செய்வதற்குரிய விதிகளைக் கேட்டு நோன்பு மேற்கொண்டு தன் கற்பரசியோடு வேள்வி

செய்தான். இதன் பயனால் அவள் வயிற்றிலிருந்த குழந்தை கருவிலிருந்தே அரசத் துறைக்கு வேண்டுவன எல்லாவற்றையும் பெற்று நல்லறிவினோடு விளங்கியதெனப் பதிற்றுப்பத்து[386] கூறுகின்றது.

சோழன் கரிகாற் பெருவளத்தான் செய்த வேள்வியை[387] புறம் கூறுகின்றது. சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் தன் நாட்டில் பலவிடங்களில் வேள்வி நடத்தினான் என்பதை

அறுதொழி லந்தண ரறமபுரிந் தெடுத்த
தீயொடு விளங்கும் நாடன்[388]

என்று கூறுவதிலிருந்து அறியலாம்.

'பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதி' என்று பெயரிலேயே வெளிப்படுத்தும் அளவுக்கு வேள்வி செய்திருக்கின்றான். அவ்வாறு வேள்வி இயற்றும்போது அவனுக்குத் தானம் கொடுப்பது வழக்கம் கொற்கைக்கிழான் நற்கொற்றன் என்பவனுக்கு 'ஒரு ஊரையே தானமாகக் கொடுத்தான்' என்று வேள்விக்குடிச் செப்பேடு[389] கூறுகின்றது.

### 3.51. அரசன் கொண்டாடும் விழா

பண்டை வேந்தர் பிறந்த நாளையும், முடி புனைந்த நாளையும் கொண்டாடுதல் மரபாக விளங்கிற்று. இதனைத் தொல்காப்பியனார், பாடாண்திணைக்குரியத் துறைகளைக் குறிப்பிடுமிடத்துப் பெருமங்கலம், மண்ணுமங்கலம் என்பவற்றைக் கூறுகிறார். 'பெருமங்கலம்' என்பது பிறந்தநாள் விழாவாகும்; மண்ணுமங்கலம் என்பது முடிசூடுதல் விழாவாகும்

சிறந்த நாளினிற் செற்றம் நீங்கிப்
பிறந்த நாள்வயின் பெருமங் கலமும்[390]

என்று பிறந்த நாள் விழாவினைச் சுட்டுவர். இதற்கு நச்சினார்க்கினியர், சிறையிலிருந்து குற்றவாளிகளை விடுவித்தல், கொலையொழிதல், இறைதவிர்தல், தானஞ்செய்தல் வேண்டியன கொடுத்தல் பிறவுமாகும்[391]என்கிறார்.

பொதுவாக அரசனின் பிறந்தநாள் விழாவினைக் கொண்டாடியதாகக் கூறவில்லை. சங்க இலக்கியமான மதுரைக் காஞ்சியில் உவமைக்காக எடுத்துரைத்துள்ளனர். இதனை, 'முருகனை வழிபடும் போது நேரிடும் ஆரவாரம்' நன்னன் கொண்டாடும் பிறந்த நாள் விழாவின்போது எழும் ஆரவாரத்தை ஒத்தது என்று கூறும் போதும்;[392] சேர வேந்தனின் பிறந்நாளில் கூடும் கூட்டத்தைப் போன்று, 'மதுரை நகரின் நாற்சந்திகளில் நெருங்கி நின்றனர்[393]' என்று கூறும் போது மட்டும் எடுத்துரைத்துள்ளனர். ஆனால் பின்னால் தோன்றிய இலக்கியங்களான சிலம்பு[394], முத்தொள்ளாயிரம்[395], சீவகசிந்தாமணி[396], கலங்கத்துப்பரணி[397] ஆகியவை சிறப்புற எடுத்துரைக்கின்றன.

முடிசூடும் நாளை 'சிறந்த சீர்த்தி மங்கலம்'[398] என்றுத் தொல்காப்பியர் குறிப்பிடுகின்றார். ஆனால் மன்னர் முடிபுனையும் விழாக் கொண்டாடியதற்கான சான்றுகளேதுமில்லை.

விழாக்களை வேந்தர் தம் மக்களிடையே உள்ள உறவை வலுப்படுத்தவும், மக்களை மகிழ்ச்சிப்படுத்தவும், பகைவர் விடுதலை பெறவும் கொண்டாடினர் என்பது மட்டும் தெளிவாகின்றது.

### 3.52 அரசரும் புலவரும்

பழந்தமிழ் அரசர்களுடைய சிறப்புகளுள் ஒன்று, புலவர்களுடன் அவர்கள் கொண்டிருந்த நட்பு. புலவர்கள் அரசரைப் பாடிப் பரிசில் பெறுவதை மட்டும் தொழிலாகக் கொள்ளாமல்; அவர்கள் தவறுகள் செய்யும்போது பாடல்கள் மூலம் கடிதலும்; நிறை கண்டவிடத்து மேம்பட பாராட்டலும் சங்க இலக்கியங்களில் காண முடிகின்றது.

புலவரால் தன்நாடும், தானும் பாராட்டப்படுதலை மேன்மையாகக் கருதியதை பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன்

ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி
மாங்குடி மருதன் றலைவ னாக

உலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பிற்
புலவர் பாடாது வரைகவென் னிலவரை[399]

என்று குறிப்பிடும் வஞ்சினக் கூற்றிலிருந்து அறியலாம்.

கடல்பிறகோட்டிய சேரன் செங்குட்டுவன் தன்னைப் பாடிய பரணர்க்கு தன் மகன் குட்டுவன் சேரலை 'தொல்கடன்'[400] ஆக கொடுத்ததிலிருந்து, அவன் புலவர்மேல் கொண்டிருந்த நட்பை அறிய முடிகின்றது.

கரிகாலன் தம்மைநாடி வந்த புலவர் பெருமக்களை அன்புடன் வரவேற்று, வேண்டியன கொடுத்ததுடன்; தம்மை விட்டுப் பிரியும்போது ஏழடி புலவரின் பின் சென்று வழியனுப்பும் பண்பாட்டையும் பெற்றிருந்தனர்[401].

### 3.53 தமிழுக்கு மதிப்பு

'முரசு கட்டில்' என்றறியாது படுத்துறங்கிய மோசிக்கீரனார்க்கு வாளேந்தி போருடற்றும் தன் மறமிகு கையால் கவரிவீசி சிறப்பித்தான் தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை[402]. இது குட்டுவனின் தமிழ்ப்பற்றினைக்காட்டுகின்றது. இது 'வாழ்வைப் பெருமையுறச் செய்த தமிழன்னைக்கு அரசரும் புலவரும் கொடுத்த மதிப்பை வெளிப்படுத்துகின்றது'[403] என்கிறார் மு.வரதராசனார்.

### 3.54. உரிமை நட்பு

வேந்தரோடு நிகராக அமர்ந்து வட்டாடும் அளவுக்கு புலவர்கள் உரிமை பெற்றிருந்தனர். திருமாவளவனும் தாமப்பல் கண்ணனாரும் வட்டாடி மகிழ்ந்தனர். வட்டுக்களில் ஒன்று, புலவர் அறியாமல் அவர்பால் மறைந்து விட்டது. அதைக் கண்ட வளவன் புலவர் வட்டினை வேண்டுமென்றே ஒளித்தார் என்று நினைத்து அவ்வட்டினால் அவரை எறிந்தான். தவறு செய்யாத தாமப்பல்கண்ணனார் அவ்வரசன் குடிப்பிறப்பில் ஐயங்கொள்வதாகக் கூறினான். அதைக்கேட்ட வளவன், புலவன் மீது சினங்கொள்ளாமல் தன் செயலுக்கு நாணினான். அதனைக்

கண்ட புலவர் வளவனின் பொறுமையினை நினைத்து, 'பெருகி வரும் காவிரி மணலினும் நின்வாழ்நாள் பலவாகப் பெருகுக'[404] என்று வாழ்த்துகின்றார்.

### 3.55 அறிவுரை

அரசர்கள் புகழுடன் விளங்க புலவர்களும் காரணம் எனலாம். ஏனெனில் தவறு செய்யும் அரசனை அறிவுறுத்தும் துணிவு அக்காலப் புலவர்களிடம் இருந்தது. இதனை வள்ளுவர்

இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னன்
கெடுப்பாரிலானுங் கெடும்[405].

என்கிறார்.

ஆளும் அரசனிடம் 'அன்பும் அருளும்' இருக்க வேண்டும் என்று கருவூரேறிய ஒள்வாட் கோப்பெருஞ்சேரலிரும் பொறைக்கு புலவர் நரிவெரூ உத்தலையார் அறிவுரை பகர்கின்றார்.[406] வில்லேருழவனான அரசனின் வெற்றி நல்லேர் உழவனின் கையில் உள்ளது. எனவே உழவர்களைப் பேணிக்காக்க வேண்டும்[407] என்று கிள்ளிவளவனுக்கு புலவர் வெள்ளைக்குடி நாகனார் அறிவுறுத்துகின்றார். உழவிற்கு இன்றியமையாதது நீரே. அதனால் நீர்நிலைகளைப் பெருக்க வேண்டும்[408] என்று பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனுக்கு குடபுலவியனார் அறிவுறுத்துகின்றார். உழவுத்தொழிலைப்பேணி நீர்நிலைகளை அமைத்தால் மட்டும் போதாது. முறையறிந்து விளைச்சலுக்குத் தகுந்தவாறு வரி வாங்க வேண்டும்[409] என்று அறிவுடைநம்பிக்கு பிசிராந்தையார் அறிவுறுத்துகின்றார்.

### 3.56 கொடை

அரசனது மிகச்சிறப்பானதொரு பண்பு 'வள்ளல்தன்மை' ஆகும். சோழ அரசனான கரிகாலனின் வாயில் இரப்போர்க்காக திறந்தே கிடந்தது[410]. புலவர்கட்கு யானை[411], குதிரை [412], தேர்[413] முதலிய ஊர்திகளோடு அருங்கல வெறுக்கையும் கொடுத்தான் அரசன். மேலும் பொன்[414], மணி[415], முத்து[416], யானை மருப்பும்[417], சாந்தமும் ஆனிரையும் நெல்லும், நிலமும், உயர்ந்த ஆடைகளும், இன்சுவையுணவும் வரைவின்றி கொடுத்ததை சங்க

இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன.

தன்னை நாடி இரவலர் வராத போது, தானே அவர்களைத் தேடி சென்று பரிசில் நல்கும் ஆடுகோட்பாட்டுச் சேரலாதனின் வள்ளன்மையை

வாரா ராயினும் மிரவலர் வேண்டி
தேரிற் றந்தவர்க் கார்பத னல்கும்
நகைசால் வாய்மொழி யிசைசா றோன்றல்[420]

என்று காக்கைப் பாடினியார் பாடுவதிலிருந்து அறய முடிகின்றது. மூவேந்தருள் சேரவேந்தர் புலவர்க்களித்த கொடை பெரிதும் குறிப்பிடத்தக்கது. இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன், குமட்டூர்க்கண்ணனார்க்கு உம்பர்காட்டுப்பகுதியில் உள்ள ஐந்நூறு ஊர்களையும், முப்பத்தெட்டாண்டுகள் தென்னாட்டு உருவாயிற் பாகமும் கொடுத்தான்; பல்யானை செல்கெழுகுட்டுவன் பாலைக் கௌதமனாரும் அவன் மனைவியும் சுவர்க்கம் புக வேண்டி பத்துப் பெருவேள்விகளைச் செய்வித்தான்; களங்காய்க் கண்ணி நார்முடிச்சேரல் புலவர் காப்பியாற்று காப்பியனார்க்கு நாற்பது நூறாயிரம் பொன் கொடுத்துதான் ஆருவதிற் பாகமும் கொடுத்தான்; கடல் பிறகோட்டிய செங்குட்டுவன் புலவர் பரணர்க்குத்தன் உம்பற்காட்டு வருவாயினையும் தன் மகனையும் கொடுத்தான்[421]

ஆடுகோட்பாட்டுச் சேரலாதன், புலவர் காக்கைப்பாடினியார் நச்சென்னையார்க்கு, ‘கலனணிக் என்று ஒன்பது காப்பொன்னும் நூறாயிரம் காணமும் கொடுத்தான்’[422]

செல்வக் கடுங்கோ வாழியாதன், புலவர் கபிலர்க்கு நூறாயிரம் காணமும்; ‘நன்றா’ வென்னும் குன்றேறி கண்ணில் கண்ட நாடெல்லாம் காட்டிக் கொடையாகக் கொடுத்தான்[423].

தகடூரெறிந்த பெருஞ்சேரலிரும்பொறை, புலவர் அரிசில்கிழாருக்குத் தன் ஆட்சியையேக் கொடுக்க, அவர் அதை ஏற்காது அமைச்சர் பதவியினை ஏற்றுக் கொண்டார்[424].

குடக்கோ இளஞ்சேரலிரும்பொறை புலவர் பெருங்குன்றூர்கிழார் மருளுமாறு முப்பத்தீராயிரம் காணங்கொடுத்து அவர் எண்ணமடியாத அளவு அருங்கல வெறுக்கையும் கொடுத்தான்[425].

மதுகை யின்றி வயிற்றுத்தீத் தணியத்
தாமிரந் துண்ணு மளவை
ஈன்ம ரோவில் வுலகத் தானே[427]

எனத் தன் நிலைக்கு இரங்கிப் பாடிவிட்டு தன் மானமே பெரிதென உயிர் துறந்தான்.

### 3.57 அரசருள் புலவர்

### கருவூர்ச்சாத்தன்:

கருவூரைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி புரிந்த அரசன். இவன் குறுந்தொகையில் ‘களவு ஒழுக்கத்தில் ஈடுபட்ட தலைவன் தலைவியின் நிலையை எடுத்துரைத்து வரைந்து கோடலே சிறந்தது’[428] என்பதை எடுத்துரைத்துள்ளார்.

### குட்டுவன் கண்ணனார்

குட்ட நாட்டை ஆண்டவன். இவன் பாடல்வழி, ‘வேட்டைக்குச் செல்வோர் நாய்களுடன் செல்வர் என்றும்; யானை மூங்கிலை விரும்பியுண்ணும்’[429] என்பதையும் அறியமுடிகின்றது.

### கோட்டம்பலத்துத் துஞ்சிய மாக்கோதை

தன் அகப்பாடலில் தன் முன்னோனின் பெருமையை, ‘யானைக்கன்றை உறங்க வைக்கும் மலைச்சாரல் ஒலியானது, தன் குடி முன்னோனான பெருஞ்சோற்றுதியன் சேரலாதன் என்பான் அளித்த பெருஞ்சோற்றை உண்ணவருவார் செய்யும் பேரொலியை ஒத்தது’[430] என்று கூறுவதிலிருந்து அறிய முடிகின்றது.

இவன் மனைவி போரிளமைப் பருவம் எய்திதுவதற்கு முன்னர்

இறந்துவிட்டாள். இவள் மேல் பேரன்பு கொண்ட அரசன் இவளுடைய உடல் தீயில் எறிவதைக் கண்ட அவன் பெருந்துயரம் அடைந்தான். 'என் துயரம் என் உயிரைப் போக்கி அவளுடன் சேர்க்க மறுக்கிறதே'[431] என்று துயரத்தோடு பாடினான்.

**சேரமானெத்தை:**

இவர் குறுந்தொகையில், தோழி தலைவியிடம் 'தலைவன் நின்னோடுதான் செல்வார்' எனக் குறிப்புபட மொழியும் பாடலைக் காணலாம்.

**நம்பி குட்டுவன்:**

இவர் குறுந்தொகையில் இரண்டும், நற்றிணையில் மூன்றும் பாடியுள்ளார். பொருள்வயின் பிரிந்து சென்ற தலைவனை நோக்கி, 'நம்பிக்கையினால்தான் இவ்வுலகமே இயங்கிக் கொண்டு இருக்கின்றது', 'நினைப்பிரியேன்' என்று நீ கூறிய வார்த்தையினால் தான் அவள் உன் அன்பு கொண்டாள். நீயே சொன்ன சொல் பொய்த்தாய் எனின், இவ்வுலகில் யாரிடம் நம்பிக்கை வைப்பது[433] தோழி கூற்றாகப் பாடியுள்ளார். இவ்வாறு பெண்களின் அன்புள்ளத்தை தம் பாடல்களில் வெளிப்படுத்தியுள்ளார்.

**பாலை பாடிய பெருங்கடுங்கோ:**

வஞ்சி நகரைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி புரிந்தவன். பொதுவாக வேந்தர்க்கு அவர்தம் வீரம், வெற்றியின் அடிப்படையில் பட்டப்பெயர் அமையும். ஆனால் இவர்க்கோ இவர்தம் புலமையின் அடிப்படையில் அமைந்துள்ளது.

இவ்வரசன் பாலைக்கலியில் முப்பந்தைந்தும்; அகநானூற்றில் பன்னிரெண்டும்; குறுந்தொகையில் பத்தும்; நற்றிணையில் பத்தும்; புறநானூற்றில் ஒன்றும் என அறுபத்து எட்டு பாடல்களைப் பாடியுள்ளார்.

பழுதெண்ணும் மந்திரியின் பக்கத்துள் தெவ்வோர்
எழுபது கோடி உறும்[434]

என்ற குறளுக்கேற்ப நாட்டின் ஆட்சி மேம்பாட்டுக்கு அமைச்சனே

உறுதுணையாக இருக்க வேண்டும். அமைச்சன் நல்லவனாக இருப்பின் அரசன் நல்லவனாக இருப்பான். குடிமக்கள் அழஅழ வரி 'வாங்க மாட்டான் அமைச்சன் தீயவனாக இருப்பின் பகைவர்படை எளிதில் நாட்டிற்கும் புகுந்துவிடும்'[433] என்று அரசியல் நுட்பத்தை எடுத்துரைத்துள்ளார்.

உலகத்தில் வாழும் எவரையும் தீநெறியில் செல்லவிடாது, நன்னெறியில் வாழ வைப்பது. பிறர்மனைமுன் நின்று பிச்சையேற்று வாழாத பெருவாழ்வு வாழ வைப்பது எல்லாமே பொருள்தான்.அ ப்பொருளை விரும்புவோர் தாமே நல்வழியில் ஈட்ட வேண்டும். அவ்வாறு ஈட்டுபவரே ஆள்வினையுடையவர்[436].

செல்வம் நிலையில்லாதது, அது வரும்போது இன்பத்தையும் போகும்போது துயரத்தையும் கொடுக்கும். சிறுமைக்குணம் பெற்றவனிடம் செல்வம் சேர்ந்தால், 'நாய் பெற்ற தெங்கம்பழம் போல' அது அவனுக்கும் பயன்படாது; பிறருக்கும் உதவியாக அமையது. நல்ல வழியினின்று விலகி பொருள் தேடுவார்க்கு அப்பொருள் இம்மையும் மறுமையும் அவர்க்குப் பகையாக விளங்கும். பொருள் அவரவர் பழைய நல்வினையினையொட்டி வரும் போகும். அறநெறிகளை உணர்ந்து கொடுப்பதில் குறையாதவனுடைய செல்வமானது நாளுக்கு நாள் செழித்துப் பெருகும்[437] என்று பாலைக்கலியில் பெருங்கடுங்கோ செல்வத்தின் இயல்பினையும் நிலையாமையினையும் எடுத்துரைக்கின்றார்.

இவ்வாறு அரசியல், வாழ்வியல், உலகியல் நுட்பங்களை எடுத்துரைத்துள்ளார். சந்தனம், பூசுபவர்க்கும்; முத்து அணிபவர்க்கும்; யாழீல் இசை அதை கேட்பவர்க்கும் தான் பயன்தரும்; அதுபோல்தான் பெண்பிள்ளையும் எந்த ஒரு பொருளும் பிறர்க்குப் பயன்படதான் சிறப்படைகின்றன என்ற நுட்பமான இயற்கை உண்மையை இப்பாடல் எடுத்துரைக்கின்றது. இதனை,

பலவுறு நறுஞ் சாந்தம் படுப்பவர்க் கல்லதை
மலையுளே பிறப்பினு மலைக்கவைதா மென்செய்யு
நினையுங்கா நும்மக ளுமக்குமாய் கனையனே

சீர்கெழு வெண்முத்த மணிபவர்க் கல்லதை
நீருளே பிறப்பினு நீர்க்கவைதா மென்செய்யுஞ்
..........            .....................
ஏழ்புண ரின்னிசை முரல்பவர்க் கல்லதை
யாழுளே பிறப்பினும் யாழ்க்கவை தாமென் செய்யுஞ்[438]

**மருதம் பாடிய களங்கடுங்கோ**

பறந்தலைப் போரில் சேரன், பாண்டியனை வெற்றி கொண்ட சோழனைப் பாடியுள்ளார்[439]. இவர் பாடியுள்ள மூன்று பாடல்களிலும் மருதத்தினை ஒழுக்கத்ததுடன் கூடிய பரத்தையர் பிரிவின் இழிவைச் சுட்டிக் காட்டியுள்ளார்.

**முடங்கிக் கிடந்த சேரலாதன்**

நெய்தல் திணைப் பாட்டொன்றைப் பாடிய இவர் அதில் வலைஞரின் வாழ்வினை, "வலைஞர் கடலிலே கலங்கொண்டு மீன் பிடிப்பர்; பிடித்தவற்றில் ஒரு பகுதியை இரவலர்களுக்கு பழங்குவர்; மீதமுள்ளவற்றை பலகூறுகளாக்கி விற்பர்; கரையின் கண் குவிந்துள்ள மணல் மேட்டிலே உறங்குவர்"[441] என அப்படியே படம்பிடித்துக் காட்டியுள்ளார்.

**சோழர்**

இருபத்து நான்கு சோழ வேந்தரில் ஐவர் புலவராக விளங்கி உள்ளனர். உறையூரைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி செய்தவன். புரவலனை வாழ்த்தும் மேம்பட்ட புரவலன் கிள்ளிவளவன்.

**கிள்ளிவளவன்**

குட்டுப்பட்டாலும் மோதிரக் கையால் குட்டுப்பட வேண்டும். என்பது பழமொழி அதற்கேற்ப வளவன் வாயால் வாழ்த்துப் பெற்றவன். சிறுகுடி கிழான் பண்ணன். அவனையும் அவனுடைய இல்லத்தையும் குறிப்பிடும்போது, "பழமரத்திலே பறவை இனம் ஒலித்தாற்போன்று அவனுடைய இல்லத்தில் உளன் உண்டார் ஆரவாரம் கேட்கின்றது;

எறும்புகள் முட்டைகளை மேட்டு நிலத்திற்குக் கொண்டுச் செல்வது போல, சிறார்கள் தம் சுற்றத்தோடு சோறு பெற்றுக்கொண்டு செல்கின்றனர். இவ்வாறு எளியோர், வறியவர் என்றிராது எல்லோருக்கும் உணவு வழங்கும் அவனை 'பசிப்பிணி மருத்துவன்' என்றும்; அவனுடைய இல்லத்தை, 'பசிப்பிணி மருத்துவனில்லம்' என்றும் பாராட்டியதோடு

'யான் வாழும் நாளம் பண்ணன் வாழ்க'[442]

என்று வாழ்த்தும் பண்பு போற்றத்தக்கது.

## கோப்பெருஞ்சோழன்

உறையூரைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி புரிந்தவன். இவனுடைய பாடல் புறநானூற்றில் மூன்றும்; குறுந்தொகையில் நான்கும் உள்ளன. இவன் புலவர்பால் நட்பு பூண்ட புலவன் என்றும் கூறலாம். இவ்வரசன் வடக்கிருந்த போது, 'பிசிராந்தையார் வருவார்' என இரண்டு பாடல்கள் பாடினான். அவன் நம்பிக்கையின் படியே பிசிராந்தையாரும் வந்து வடக்கிருந்து உயிர் துறந்தார். இவன் தன் பாடலொன்றில், 'எல்லோரும் செய்த செயலின் பயனைப் பாராது உயர்ந்த குறிக்கோளுடையவராக வாழ வேண்டும்'[446] என்று அறிவுரை கூறியுள்ளார்.

## நல்லுருத்திரன்

முல்லைக்கலியைப் பாடியுள்ளார். இக்கலித்தொகைப் பாடல்களில் காணப்பெறும் பாரதக்கதை நிகழ்வுகள்; சிவன், திருமால் போன்றோரின் கதைகள் அவற்றை நன்கு பயின்றவர் இவர் என்பதைக் காட்டுகின்றது. ஏறுதழுவல் பற்றி இக்கலி குறிப்பிடுகின்றது. இதில் காளையின் வழி, 'பெரும்போராயினும் எதிர்வரும் பகைவன் மறமற்றவனாக இருப்பின் அவனை விட்டுச் செல்லும் வீரரின் பெருமிதத்தினைப்பாடியுள்ளார்'[447]. மேலும் ஆயர் மகளிர், 'உலகமே பெறுவதாயினும் இருமணமொன்பது அவர்களுடைய வழக்கில் இல்லை'[448] என்று கூறுவதிலிருந்து அவர்களின் கற்பு மேம்பாட்டை வெளிப்படுத்தியுள்ளார்.

"எலியைப் போன்று பிறர் பொருளை தம் வயமாக்குபவர்களும்;

*புலியைப் போன்று தனக்குரிய பொருளை மட்டும் விரும்புபவரும் உள்ளனர்”[449] என்று கூறுவதிலிருந்து சுற்றமாய்ந்து அதற்கேற்பு நட்பு பூண்டு வாழ்ந்தவன் என்பதைத் தெளிவுறுத்துகின்றது.*

***நலங்கிள்ளி:***

*புகாரைத் தலைநகராகக் கொண்டு ஆட்சிப்புரிந்தவன். இவன் எண்ணத்தினை, செயலினை, “மூத்தோர் வழி வரும் அரசுரிமை ஊழினால் வருவது; தம் வலியினால் அரசுரிமைப் பெறுபவனுக்கே ஆட்சி செலுத்துதல் எளிது”[450] என்று வெளிப்படுத்தியுள்ளார்.*

***மாவளத்தான்***

*இவ்வரசன், “தலைவியைப் பிரிந்து சென்ற தலைவனை நினைத்து கண்ணீர் விடுகின்றாள். அவளைத் தேற்றும் பொருட்டு தோழி கூற்றாக அமைந்த பாடலைப் பாடியுள்ளார்”[451]*

***பாண்டியர்:***

*இருபத்திநான்கு பாண்டிய வேந்தருள் பதின்மூன்றுபேர் புலவர்களாக இருந்திருக்கின்றனர்.*

***அண்டர்மகன் குறுவழுதியார்***

*“மறக்குடியில் பிறந்த மகளை பலர் மகட்கொடை வேண்டி நின்றனர். அவள் தந்தையும் தமயனும் மறுக்கவே போர் உண்டாயிற்று அதனால் ஊர் பாழாகும்”[452] என்று சங்க கால சமுதாய நிலையினை எடுத்துரைத்துள்ளார். மேலும் தலைவி, “தலைவன் தன்னுடன் பகலில் மட்டும் இருந்தால் போதுமென்று நினைக்கின்றாள். ஏனென்றால் இரவில் அவன் வரும் வழியில் உள்ள இடருக்கு அஞ்சினாள்” என்ற செய்தியின் மூலம் அவளின் அன்புள்ளத்தை வெளிப்படுத்துகின்றார்[453].*

***அறிவுடை நம்பி:***

*அறிவில் சிறந்து விளங்கினமையால் இப்பெயர் பெற்றிருக்கலாம் என்பதற்கு இவருடைய பாடல்களே சான்றெனலாம். “பலரோடு பகுத்துண்ணும் உடைபெருஞ்செல்வராயினும், அவர்க்கு மக்கட்*

பேறில்லையெனில் அவருடைய பெருவாழ்வு பயனுடையதாக போற்றப்படமாட்டாது" என்று தமது

படைப்புப்பல படைத்து பலரோ டுண்ணும்
உடைப்பெருஞ் செல்வ ராயினு மிடைப்படக்
குறுகுறு நடந்து சிறுகை நீட்டி
இட்டுந் தொட்டுங் கவ்வியுந் துழந்தும்
நெய்யுடை யடிசின் மெய்பட விதிர்த்தும்
மயக்குறு மக்களை யில்லோர்க்குப்
பயக்குறை யில்லைத் தாம்வாழு நாளே[454]

என்ற புறப்பாடலில் குழந்தைச் செல்வத்தை 'பேறு' என்று குறிப்பிட்டுள்ளார்.

**ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன்:**

கல்வி கற்ற ஒருவனை அன்னையும் மதிப்பாள் அரசனும் மதிப்பான் எனவே எல்லோரும் எப்படியாவது கற்றல் வேண்டும் என்பதை

உற்றுழி யுதவிய முறுபொருள் கொடுத்தும்
பிற்றைநிலை முனியாது கற்ற னன்றே
பிறப்போ ரன்ன வுடன் வுயிற்றுள்ளும்
சிறப்பின் பாலாற் றாயுமனந் திரியும்
ஒருகுடிப் பிறந்த பல்லோ ருள்ளும்
மூத்தோன் வருக வென்னா தவருள்
அறிவுடை யோனா றரசுஞ் செல்லும்
வேற்றுமை தெரிந்த நாற்பா லுள்ளும்
கீழ்ப்பா லொருவன் கற்பின்
மேற்பா லொருவனு மவன்கட் படுமே[455]

என்ற பாடல்வழி அவர் விருப்பத்தை வெளிப்படுத்தியுள்ளார்.

**ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன்**

தன் அகநானூற்றுப்பாடலில் வேனிற்கால அழகு, திதியன் மலைவளம் கூறி ஆற்றாத தலைவியை தோழி வற்புறுத்தியதைக் கூறியுள்ளார்.[456] மேலும் தன்குயடியல் பிறப்பதைப் பெருமையாகக் கருதியவன் என்பதை தான்

போரில் வெல்லாவிட்டால் தன் பாண்டியர் குடியில் பிறக்காமல் போவேனாக[457] என்ற வஞ்சினக் கூற்றே மெய்ப்பிக்கின்றது.

**கடலுள் மாய்ந்த இளம்பெருவழுதி**

இவனுடைய பாடல்கள் இரண்டு. அவை பரிபாடலிலும் புறநானூற்றிலும் உள்ளன. இவர் பரிபாடலில்

தைய யவரொடுந் தந்தா ரவரொடும்
கைம்மக வோடுங் காத லவரொடும்
தெய்வம் பேணித் திசை தொழுதனிர் சென்மின்[458]

என்று தெய்வ வழிபாடு அவசியம் என்பதைக் குறிப்பிட்டுள்ளார். பல நற்குணங்களையுடைய சான்றோர் சிலர் இருப்பதால்தான் இவ்வுலகம் நிலைத்துள்ளது என்ற பொருளில் அவரது பண்புகளை, தம் புறப்பாடலில்

உண்டா லம்மவிவ் வுலக மிந்திரர்
அமிழ்த மியைவ தாயினு மினிதெனத்
தமிய ருண்டலு மிலரே முனிவிலர்
துஞ்சலு மிலர்பிற ரஞ்சுவ தஞ்சிப்
புகழெனி னுயிருங் கொடுக்குவர் பழியெனின்
உலகுடன் பெறினுங் கொள்ளல ரயர்விலர்
அன்ன மாட்சி யனைய ராகித்
தமக்கென முயலா நோன் றாட்
பிறர்க்கென முயலுந ருண்மை யானே[459]

என்று எடுத்துரைத்துள்ளார்.

**கானப்பேரெயில் கடந்த உக்கிரப்பெருவழுதி**

அகநானூற்றைத் தொகுப்பித்தவன். இவன் சேரன் மாரி வெண்கோவுடனும், சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியுடனும் நட்பு பாராட்டி வாழ்ந்தான். அவன் தம் பாடலொன்றில் அக்கால மகிளர் இயல்பிலேயே மனஉறுதி குறைந்தவராக உள்ளதை, “தன்னைப் பிரிந்து பரத்தையிடம் சென்று மீண்டும் தன் இல்லத்திற்கு வந்த தலைவனை ஊடநினைத்த தலைவி ஊடல் செய்யாமல் அவனொடு கலந்து

விடுகின்றாள்"[460] என்று கூறுவதிலிருந்து அறியலாம்.

நிமித்தம் பார்க்கும் பழக்கம் இருந்ததைக் குறிப்பால், "பன்றி தினையை உண்பதற்காக இயந்திரம் அமைந்த புழையில் புகும்போது பல்லி ஒலிப்பக் கேட்டு தனக்கு ஊறுநேரும் நிலையினை உணர்ந்து தம் இருப்பிடம் திரும்பும் நிலையினைக் குறிப்பிட்டுள்ளார்"[461]

**குறுவழுதியார்:**

இவன் அகநானூற்றில், "தலைவனின் கூட்டத்தால் தலைவிக்குண்டான பேரழகினைக் கண்டு இற்செறித்துவிடுகின்றான்". எனவே தலைவியை மணஞ்செய்து கொள்ளுமாறு கூறும் பாடலைப் பாடியுள்ளார்.

**தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன்**

இருபெருவேந்தர், எழுபெருவேளிர் ஆகியோரை ஆலங்கானத்தில் வென்றவன். மதுரைக்காஞ்சி, நெடுநல்வாடையின் தலைவன். இவன் புலவர்களைப் போற்றுபவன். தம்குடிமக்களைக் காப்பவன் ஆதலால் தன் வஞ்சினப் பாட்டொன்றில்,

"புலவர் பாடாது வரைகவென் னிலவரை"

என்கிறான். வாழ்நாளின் பெரும்பகுதியைப் போரிலேயே கழித்தவன்.

**நல்வழுதி:**

தன் பாடலில் வையையாற்றின் பெருக்கையும், அதைக் கொண்டாடும் மக்களையும் அழகுற வெளிப்படுத்தியுள்ளார். வையையாறு வரவுகேட்ட மதுரை மக்கள் அகில், சந்தனம், அழகிய ஆடைகள், அணிகள் ஆகியவற்றினை எடுத்துக்கொண்டு குதிரை, யானை, தேர் ஆகியவற்றின் மீது ஏறிச் சென்று 'புனல் விழாவினைக்' கொண்டாடினர்[464] என்கிறார் நல்வழுதி.

**மதிவாணன்:**

இவரைப் பற்றி அரங்க.இராமலிங்கம் கூறியுள்ளார்.

**மாலைமாறன்:**

இவன் பாடிய குறுந்தொகைப்பாடல், "தலைவனைப் பிரிந்த தலைவி,

தன் நலன் அழிந்துவிட்டது; ஊரார் தூற்றுகின்றனர்"[465] என்று கூறுவதனைத் தெரிவிக்கின்றது.

**மாறன் வழுதி**

தலைவனைப் பிரிந்த தலைவியின் நிலையினை, "வேல் பாய்ந்த புண்ணிலே மீண்டும் வேல் பாய்ந்தது போன்றது"[466] என்கிறார்.

**முடத்திருமாறன்**

இடைச்சங்க காலத்தவன். இவன் நற்றிணையில் இரண்டு பாடல்கள் உள்ளன. 'மலை அழகைப்[467] பாடியுள்ளார்'.

**தொகுப்புரை:**

சங்க காலத்தில் ஆட்சிபுரிந்த அரசர்களை "இறை, இறைவன், காவலன், மன்னன், வேந்தன்" என்று பல பெயர்களால் அழைத்தனர். அவர்களின் வாழ்வியலை இவ்வின எடுத்துரைக்கின்றது.

இன்றைய சேலம், கோவை மாவட்டங்களை உள்ளடக்கிய பகுதி அன்றைய "அன்றைய சேரர்களின் ஆட்சிப்பகுதி" அவர்கள் உதியன், இரும்பொறை மரபினர்கள் ஆவர். தலைநகர் வஞ்சி! 'சேரநாடு வேழமுடைத்து' என்பது சிறப்பு. அவர்கட்கு சிறப்பு சேர்த்தது முசிறி.

இன்றைய தஞ்சை, திருச்சி, புதுக்கோட்டை மாவட்டங்கள் மற்றும் வட, தென் ஆர்க்காட்டின் ஒருசில பகுதிகள் ஆகியவற்றை உள்ளடக்கியது சோழநாடு. தலைநகரங்கள் 'உறையூர், புகார்' ஆகும். 'சோழநாடு சோறுடைத்து' என்பது சிறப்பு. சோழநாட்டுக்கு மேலும் சிறப்பு சேர்த்தது 'புகார்'.

இன்றைய பழனிமலைக்குத் தெற்கிலுள்ள நிலப்பகுதி பாண்டிய நாடாகும். தலைநகரம் 'மதுரை' தமிழ் வளர்த்த பெருமையும் கொற்கை முத்தும் பாண்டிய நாட்டிற்குச் சிறப்பு சேர்த்தது.

மூவேந்தரும் தனித்தனியாக அவர்களின் சிறப்பை வெளிப்படுத்தும் வகையில் படை, கொடி, குடை, முரசு, புரவி, களிறு, தார், முடி ஆகியவற்றைக் கொண்டிருந்தனர்.

போருக்குப் புறப்படுமுன் போர்ப்பூச்சூடல், வஞ்சினம் உரைத்தல் மரபாக இருந்தது. போரில் காவல் மரபை காப்பதும் வெட்டுவதும் முதற்கடமையாகக் கருதப்பட்டது. போருக்கு மண்ணாசை, பெண்ணாசை, ஆட்சியுரிமை, அரசுரிமை, இனமானம் என பல காரணங்கள் இருந்தன.

போருக்குத் தேவை வலிமைவாய்ந்த படைகள். மூவேந்தர்களில் கரிகாற்பெருவளத்தானிடம் யானை, குதிரை, தேர், மறவர் என்ற நான்கு படையுடன் கடற்படையும் இருந்தது. தனித்து நின்று போரிட்டு வென்ற பெருமை பாண்டிய நெடுஞ்செழியனைச் சாரும். கடற்போரில் மூவருமே சிறந்து விளங்கினர்.

மூவேந்தரும் போரிட்ட களம் தலையாலங்கானம் அதில் வென்றவன் பாண்டியன் நெடுஞ்செழியன். அவன் வென்றதன் அடையாளமாக கடவுட்படிமத்தை எடுத்து வந்தான். சேரரும் சோழரும் போரிட்டு இருவருமே மடிந்த இடம் 'திருப்போர்ப்புறம்' ஆகும்.

போரில் வெற்றி பெற்றவேந்தர்கள் தான் பெற்ற வெற்றியைத் தன் பெயரோடு சேர்த்து, 'கானப்பேரெயில் கடந்த உக்கிரப்பெருவழுதி, செருப்பாழியெறிந்த இளஞ்சேட் சென்னி, போரவை கோப்பெரு நற்கிள்ளி, தகடூரெறிந்த பெருஞ்சேரலிரும்பொறை' என்று வழங்கிக் கொள்வதை மரபாகக் கொண்டிருந்தனர்.

போர் முடிவில் வெற்றி பெற்ற வேந்தன் பகைவர் நாட்டை தீக்கிரையாக்குவதும், பொருட்களை கொள்ளையடிப்பதும் பாழாக்குவதும் வழக்கமாய் இருந்தது. அப்பொருட்களில் யானை, தேர், குதிரை, பொன் என்று எதுவாயினும் அவற்றை அப்படியே தன்மை நாடி வரிசையில் காத்திருக்கும் இரவலர்கட்குக் கொடுத்தனர். போர் வெற்றியைத் தன்

வீரர்களோடு கள் உண்டும் ஊன் விருந்தளித்தும் அரசர்கள் கொண்டாடினர்.

அரசர்கள் வீர இறப்பையேப் பெருமையாகக் கருதினர். பிறந்த குழந்தை பிண்டமாயிருப்பினும் அதை வாளாற்கீறி புதைத்தனர். இறந்தோர்க்கும், ‘தென்புலக்கடன்’ செய்யும் வழக்கமிருந்ததை உதியன் சேரலாதன் பாடல் தெளிவுபடுத்துகின்றது.

சங்க காலத்தில் ஊரையோ, நாட்டையோ, மானத்தையோ, ஆநிரையையோ காக்க நடக்கும் போரில் வீரமணமடைந்த வீரர்கட்கு ‘நடுகல்’ நடும் மரபும் அதனை வழிபடும் மரபும் இருந்தது.

வேந்தன் மக்களின் ‘முதன்மைக் காவலன்’ மட்டுமின்றி இன்றுபோல் அன்றும் காவல்துறை அவர்களிடமே இருந்தது. அப்போது நகர்க்காவலர், ஊர்க்காவலர், தெருக்காவலர் என்ற பிரிவினர் இருந்தனர்.

நீதி வழங்குவதில் சோழ மன்னர்கள் சிறந்து விளங்கியதை கரிகாலன் வழங்கிய நீதியைக் கூறலாம். நீதி வழங்குவதற்கு ஊரவை, நாளவை, அறங்கூறவையம் ஆகியவை செயல்பட்டன. கிராமங்களில் மன்றமும் பொதியிலும் இருந்தன. ஊரவை உறுப்பினர் குடவோலை முடிறயில் தேர்ந்தெடுக்கப்பட்டனர். இன்று துறை வாரியாக மாவட்ட ஆட்சியர் அலுவலகத்தில் நடைபெறும் ‘குறைதீர்க்கும் நாள் கூட்டம்’ போல் சங்க காலத்தில் நாளவை கூட்டம் நடைபெற்றது. அதில் பரிசிலர்க்கு பரிசில் வழங்குதல், குறைதீர்த்தல் அகியவை அன்றே நடைபெற்றதை சேரன் செங்குட்டுவன் அரசவை செய்தி கூறுகின்றது.

உறையூர், மதுரை ஆகிய தலைநகர்களில் அறங்கூறவையம் செயல்பட்டது. அறங்கூறவையத்தில் தீர்ப்புகள் விரைவில், ‘இன்றைய நடமாடும் நீதிமன்றம்’ (Mobile Court) போல வழங்கப்பட்டன.

அரசிற்கு பெருமளவில் வருவாய் வந்தது வரி மூலமே ஆகும். வரிதிரட்ட வாரியங்கள் இருந்தன. நிலவரியான ‘இறை’ யே முதன்மையான வரியாகும். கட்டாயமாக ‘தண்டல்’ வரியும், தோற்ற வேந்தர்களிடமிருந்து திறையும்; மக்களைக் காக்க ‘புரவும்’; வீட்டுவரியாக ‘குடிமை’ வரியும்

கடற்போரில் தோற்ற மன்னரிடமிருந்து ‘கொண்டியும்’ வசூலிக்கப்பட்டன. மேலும் அரசிற்கு வருவாயாக வாரிசில்லாத சொத்து, புதையல், வணிக வரி ஆகியவையும் சேர்ந்தன.

அரசனின் கடமைகளில் முதன்மையானதாக நீர்நிலைகளைப் பெருக்குதல் கருதப்பட்டது. அதற்கு அடுத்துக் காட்டாக கரிகாலன் கட்டிய கல்லணை மற்றும் சோழன் நலங்கிள்ளி வெட்டிய வாய்க்கால்கள் ஆகியவற்றைக் கூறலாம்.

இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனுக்கு இரு மனைவியர் இருந்தனர். ஆனால் உரிமை மகளிர் பலரிருந்ததை கரிகாலன் இறந்த பிறகு அவர்கள் அருங்கலன்கள் அனைத்தையும் ஒழித்தனர் என்று புறம் கூறுதிலிருந்து தெளிவுபடுத்த முடிகின்றது.

அரசர் குடியிலும் பெண்கள் உடன்கட்டை ஏறினர் என்பதற்கு பெருங்கோப்பெண்டை கூறலாம்.

தன்னைப் பாராட்டியதற்காக பல்யானை செல்கெழுகுட்டுவனும் பெருவேள்விகளும் செய்தான் சோழனும் வேள்வி செய்தான். பல்யாகசாலை முதுகுடுமி பெருவழுதி என்ற பெயரே அவன் செய்த வேள்வியை தெரியப்படுத்துகின்றது.

அரசர்கள் தம் பிறந்த நாளை ‘மண்ணுமங்கலம்’ என்ற பெயரிலும், தாம் முடிசூடிய நாளை ‘முடிமங்கலம்’ என்ற பெயரிலும் கொண்டாடினர்.

வேந்தர் புலவர் நட்பு வேந்தனுக்கு மகிழ்ச்சியைத் தருவதோடு அறிவுறுத்துவதாகவும் இருந்தது. வேந்தர் தமிழுக்கு அளித்த மதிப்பை முரசுக்கட்டிலில் படுத்துறங்கிய மோசிகீரனார்க்கு கவரி வீசிய தகடூரெறிந்த பெருஞ்சேரலரும் பொறையின் செயலிலிருந்தே தெரியப்படுத்தலாம். மேலும் உரிமை நட்புக்கிலக்கணமாய் கிள்ளிவளவன் தாமப்பல்கண்ணனார் நட்பைக் கூறலாம். அரசர்கள் பரிசிலர்க்கு யானை, தேர், குதிரை, பொன், மணி, யானை, சாந்தம், ஆனிரை, நெல், நிலம், உயர்ந்த ஆடை, ஊர்கள், இன்சுவையடிகில் என வரையாது வழங்கினர்.

அரசர்களும் புலமை பெற்றவர்கள் என்பதற்கு சேரர்களில் பத்து பேரும் சோழர்களில் ஐந்து பேரும் பாண்டியர்களின் பதிமூன்று பேரும் புலவர்களாக இருந்தனர் என்பதற்கு சான்றாகும்.

# இயல் - 4
# வணிகர்

### *4.1. வணிகர்*

*உழவும் தொழிலும் உண்டாக்கிய உணவுப் பொருட்களை விற்றவர்கள் வணிகர் எனப்பட்டனர். வணிகருள் பொன் வணிகர், கூலவாணிகர், அறுவை வணிகர், மணி வணிகர் எனத் தொழிலுக்கேற்பு பெயர் பெற்றனர். அவர்கள் குழுவினராக இயங்கினர்[1] என்று சிவத்தம்பி கூறுவதாக அ.தெட்சிணாமூர்த்தி கூறுவதிலிருந்து வணிகர் பலப்பிரிவினராக இருந்தனர் என்பதை அறியமுடிகின்றது.*

### *4.2. வணிகர் வகை:*

*"நெல், புல்லரிசி, வரகு, தினை, சாமை, இறுங்கு, தோரை, மூங்கிலரிசி போன்ற உணவுப் பொருட்களை விற்பனை செய்தோர் 'கூலவாணிகர்' என்று அழைக்கப்பட்டனர். மேலும், பூச்சரங்கள், சந்தனம், பச்சைக்கற்புரம் போன்ற நறுமணப்பொருட்கள் மற்றும் வெண்கலம், செப்புக்கலங்கள், செயற்கைப் பூங்கொத்துகள் போன்றவையும் உற்பத்தி செய்யப்பட்டு விற்பனை செய்யப்பட்டன"* [2] *என்று ஜே.கே.தர்மராஜ் கூறுவதிலிருந்து இவர்கள் 'பண்ட வணிகராக இருக்கலாம். மேலும், இங்கு உப்பு வணிகரும், வெற்றிலை வணிகரும் ஆட்டு வணிகரும், மீன் விற்கும் பரதவரும் இருந்தனர்' என்கிறார்.*

### பெரு வணிகர், சிறு வணிகர்

*பெரிய அளவில் உற்பத்தி செய்து உள்நாட்டு, வெளிநாட்டு வணிகம் செய்தோர் பெரு வணிகர் என்று அழைக்கப்பட்டனர். பணிகாரம், பூ, பூமாலை, சுண்ணம், வெற்றிலை, பாக்கு ஆகியவற்றை கையில் எந்தித் திரிவோர் 'சிறுவணிகர்' என்றும் 'வினைஞர்' என்றும் அழைக்கப்பட்டனர்.*[3]

*சிறிய அளவில் உப்பை உற்பத்தி செய்து உப்பு விற்றதை குறுந்தொகை*

*"உப்பை மாற்றி வெண்ணெய் தரீஇய*
*உப்புவிளைக் கழனி சென்றனள்"*[4]

என்று கூறுவதன் மூலம் உப்பு வணிகருள் சிலர் சிறு வணிகராக இருந்துள்ளனர்.

**உமணர்**

உப்பு வணிகரைப் பெரும்பாலும் 'உமணர்' என்றே அழைத்தனர். மருத நிலத்தில் உப்பு தேவைப்பட்டதற்குக் காரணம் அங்குதான் மக்கள் முதலில் குடியேறினர். அவர்கள் முதுலில் உப்புத் தேவையை நிறைவு செய்ய உவர்மண் பயன்படுத்தியிருக்க வேண்டும். அதை முதலில் விற்றவர் உமணர் என்று அழைக்கப்பட்டிருக்க வேண்டும். இதற்குச் சான்றாக கு.வெ.பாலசுப்ரமணியன்[5], நற்றிணைப் பாடலொன்றை

தம்நாட்டு விளைந்த வெண்ணெல்தந்து
பிறநாட்டு உப்பின் கொள்ளை சாற்றி
நெடுநெறி யொழுகை நிலவுமணல் நீந்தி
அவனுறை முனிந்த ஒக்கலொடு புலம்பெயர்ந்த
உமணர் போகலும் இன்னா தாரும்[6]

என்று கூறும்போது, 'மருத நிலத்தைச் சேர்ந்தவர்கள் நெல்லைக் கொடுத்து உப்பை பெற்று விற்றனர்' என்று கூறுவதில் இருந்து அறிய முடிகின்றது. பின்னர் நெய்தல் நிலத்துப் பிறந்தவர்கள் உப்பு விளைவித்த போதும் 'உமணர்' என்றே அழைக்கப்பட்டனர்.

**சாத்து**

உமணர்கள், உப்பு வாணிகத்திற்கு எருதுகளைப் பயன்படுத்தியதற்குச் சான்றுகள் பல உள்ளன. அவர்கள் கூட்டமாகவே சென்றதால் 'சாத்து' எனப்பட்டனர். உமணர்கள் எருதுகள் பூட்டப்பட்ட வண்டிகளில் வரிசையாகச் சென்றதை ஔவையார்,

'உமணர்எருது ஒழுகைத் தோடுநிரைத் தன்ன'[7]

என்று கூறுவதிலிருந்து அறியமுடிகின்றது.

**உப்பு வணிகரின் வாகனம்:**

எருது பூட்டிய வண்டிகளைப் பயன்படுத்தியதற்கான சான்று மேற்காணலாம்.

கழுதைகளும் பொதி சுமக்கும் வாகனமாக பயன்படுத்தியதை அகப்பாடல்வழி அறியலாம்.

அவணெதாக பொருளென் றுமணர்

கணநிரை யன்ன[8]

**உமணர் செல்லும் வழி**

உமணர் கடத்தற்கரிய பல சுரப்பாதைகளைக் கடந்து சென்றதை அகம் கூறுகின்றது வலிமையான பாறைகளையுடையது. வண்டியிலுள்ள பொலிவில்லாதப் பூணை சிதைக்கக்கூடியது[9] உமணர் செல்லும் வழி ஆறலைக்கள்வர்கள் நிறைந்த இடம். அது கடத்தற்கரிய பாழ்பட்ட ஊர் போன்று காட்சியளிக்கும். முட்கள் நிறைந்த ஓமை மரங்கள் மிகுந்த காட்டுவழி[10] என்கிறார் பெருங்கடுங்கோ

உமணர் செல்லும் வழி கடத்தற்கரியதாகவும், சுரநெறியாகவும், நெடுந்தொலைவாகவும் இருப்பதால் ‘ஆனிரையை எழுப்பும் நெடிய நெடியிற் செலுத்தும் வண்டிகள் மடுத்து முழங்கும் ஓசை பெரியதாகவும்[11]; மணலும் கல்லும் நிறைந்த வழிகளிலே உரப்பியோட்டுகின்ற ஒலி பெரியதாகவும்; காட்டுவழியென்பதனால் எருதுகளுக்கு பெரிய மணிகளைக் கட்டியுள்ளனர். அது எழுப்பும் ஒலியும் அவர்கள் விரும்பி வாயினை மடித்து எழுப்பும் ஒலியும் பெரியதாக ஓமை மரங்களடர்ந்த காட்;டில் வருவார்க்கு பாதுகாப்பளிக்கும் வகையில் உள்ளது.[12]

உமணர் செல்லும் வழியில் வண்டி முறிந்தவிடத்திலே விட்டுவிட்டுச்சென்ற பழைய பாரினை அக்காட்டிலே காணலாம்.[13] அப்பரற்கற்கள் நிறைந்த வழியில் உயரமாகத் தோன்றும் சிறுகுடில்களைக் காணலாம்.[14]

உமணர்கள் செல்லும் வழி நெடுத்தொலைவான காட்டுவழி என்பதால் குடில்களை உயரமாக அமைத்து, அங்கேயே எருதுகளை மேயவிட்டுக்கல் அடுப்பு வைத்துச் சமைத்துள்ளனர்[15] என்பதைக் கவுதமான் சாதேவன் பாடல் வழி அறிய முடிகின்றது.

சமைப்பதற்கு களிறுகள் சுவைத்துப் போட்ட 'யா' மரத்தின் சக்கையே சுள்ளிகளாக பயன்படுத்தினர் என்பதை அகநானூறு காட்டுகின்றது.[16] அவர்கள் உணவாக அகன்ற பாலை நிலத்தில் புலி கொன்று தின்றுப் போட்ட பெரிய யானையின் மீதமுள்ள உணவை ஆரவாரம் மிகுந்த கள்வர் கோர்த்து தின்றது போக எஞ்சியதை தீக்கடைக்கோலால் தீமூட்டி அதில் வதக்கி உண்டனர். அங்குள்ள சுனையில் கிடைத்த இனிய நீரினால் சோற்றின் உலையைக் கூட்டி ஆக்கினர்.[17] என்று ஆமூர் சாத்தனார் கூறுவதிலிருந்து அவர்களின் வாழ்வின் நிலையை அறிய முடிகின்றது.

**பண்டமாற்று முறையும் உமணரும்**

வணிகத்தின் அடிப்படை பண்டமாற்றுமுறை அன்றைய காலத்தில் காசுகள் அச்சடிக்கப்படாததனால் அவ்வந்நிலத்தில் விளையும் பண்டங்களே பண்டமாற்று பொருளாகப் பயன்பட்டது. பண்டமாற்றுப் பொருளாக நெல்லும், உப்புமே அதிகம் பயன்பட்டன. நெல்லை உப்பயைும் பால், தயில், கள், மீன், இறைச்சி, காய்கறிகள் ஆகியவற்றிற்கு மாற்றிக் கொண்டனர். இதனால் 'பண்டமாற்று முறையை, 'வாணிகத்தை மாற்றுதல்' என்று பா.இறையனார்' கூறினார்[18].

பண்டமாற்று முறையில் நெல் முதன்மை பெற்றிருந்ததற்குக் காரணம், 'மருத நிலத்து ஊர்களிலேயே நெல் விளைந்ததனால் பாலை நிலந்தவிர மற்ற முந்நில மாந்தரும் தத்தம் நிலத்துச் சிறப்புப் பண்டங்களை அங்கு கொணர்ந்து நெல்லிற்கு மாற்றினர்'[19] என்று புறம் கூறுவது பொருத்தமானதாக உள்ளது. ஆனால் எயினர் இனமக்கள் தன்னிடம் பொருள் எதுவுமில்லாததால் காட்டில் வேட்டையாடிய யானைத்தந்தத்தைத் தருகின்றேன். அதற்குப்பதிலாக இப்போது கள்ளைக் கடனாகக் கொடு என்று மதுவிற்பவனிடம் கேட்டுப் பெறுகின்றனர்[20] என்பதிலிருந்து நெல் தவிர மற்ற பொருட்களையும் பண்டமாற்று முறையிலும் கடனாகவும் பெற்றனர்[21] என்பதனை செ.மாரிமுத்து எடுத்துரைக்கின்றார்.

**உமணரின் சொந்த நிலம்**

உப்பை வண்டிகளில் ஏற்றிச் சென்று ஊர் ஊராக விற்பவர் 'உமணர்' எனப்பட்டனர்.

> தம் நாட்டு விளைந்த வெண்ணெல் தந்து
> பிறநாட்டு உப்பின் கொள்ளை சுற்றி
> நெடுநெறி ஒழுகை நிலவுமணல் நீந்தி
> அவுணுறை முனிந்த ஒக்கலொடு புலம்பெயர்ந்து
> உமணர் போகலும் இன்னாதாகும்[22]

இவ்வடிகள் மருதநிலத்தைச் சேர்ந்த உப்புவணிகர் தமது நாட்டில் விளைந்த வெண்மையான நெல்லை வண்டிகளிலேற்றிச் சென்று அதன் விலையாகிய உப்பை அயல்நிலமாகிய நெய்தலிலே பெற்றுக் கொண்டு போய் விலைகூறி ஊர் ஊராக விற்கும் போது தம் சுற்றத்தினரைப் பிரிந்து வருந்தியதோடல்லாமல் ஆறலைக்கள்வராலும் துன்புற்றனர் என்று கூறுவதிலிருந்து மருத நிலத்திலும் உப்பு வாணிகர்கள் வாழ்ந்திருக்கின்றனர் என்பதை அறிய முடிகின்றது.

**உப்பளங்கள்:**

மரக்காணம், ஆயத்துறை, வாரியூர், குமரி ஆகிய இடங்களில் உப்பளங்கள் இருந்தன[23] என்கிறார் கபட அறவாணன்.

**உமணரும் சகடமும்:**

வலிமையான பாரினையும், தாளிப்பனை ஓலையாற் வேயப்பட்ட கூரையினையும், முழுமரத்திலே கடையப்பெற்ற உருளியினையும் உடையது உமணரின் சகடம். அதன் மூக்கணைமீது ஊறுகாய் சாடியையும் வைத்திருந்தனர். உரலையும் வரிந்து கட்டி எடுத்துச் சென்றனர். ஏனெனில் போகும்வழியில் கிடைக்கும் நெல்லினை குற்றி உணவாகச் சமைப்பதற்கு உரலைப் பயன்படுத்தினர். அவர்கள் தன் குடும்பத்தினருடன் சென்றனர் என்பதை அவர்தம் மனைவி குழவியுடன் சென்றனர் என்பதை அவர்தம் மனைவி குழவியுடன் சென்றாள். அக்குழவியைக் கையில் வைத்துக் கொண்டே எருது பூண்ட அச்சகடத்தை ஓட்டிச் சென்றாள்[24] என்ற

செய்தியை விளக்குகின்றார் உருத்திரங்கண்ணனார்.

உமணர் தாம் எந்த நாட்டினர் என்பதை விளக்கும் வகையில் வேம்பினது இலை இணைத்துக் கட்டப்பட்ட மாலையினை எருதின் கொம்பிலே அணிவித்து இருக்கிறார்கள். இது அவர்கள் பாண்டியனது கொற்கைத் துறைமுகத்தைச் சேர்ந்தவர்கள் என்பதை விவரிக்கும் வகையில் உள்ளது என்கிறார் பொ.வே.சோமசுந்தரனார்[25].

உப்பு வணிகர் கூட்டமாகச் செல்வதுடன் மட்டுமின்றி தன்குடும்பத்தினருடனும் செல்கின்றனர். அதனால் அவர்களுடன் தம்பிள்ளைபோல் வளர்த்த மந்தியும் சென்றது என்பதனைச் சிறுபாணாற்றுப்படை கூறுகின்றது[26].

**உமணரின் கடல் வாகனம்:**

உமணர்கள் நிலத்தில் எருமை, கழுதை ஆகியவற்றை வாகனமாகப் பயன்படுத்தினர். கடலில் உபர்ங்கழிகளில் செலுத்துவதற்குச் சிறிய படகுகள் வைத்திருந்தனர். அது ‘பஃறி’ எனப்பட்டது. இத்தகைய படகுகள் தறிகளிலே பிணிக்கப்பட்டிருந்தன. அது குதிரை வரிசை போல் தோன்றியது என்று உருத்திரக்கண்ணனார்[27] கூறுகின்றார்.

**யவனர்**

யவனர் என்ற சொல் கிரேக்கச் சொல்லாகும் எனினும் முதலில் உரோம, கிரேக்க வணிகர்களைக் குறிக்கின்றது. பின் மேற்கு திசை வணிகர் அனைவர்க்குமே குறியீடாய் வழங்கலாயிற்று[28] என்று பா.இறையனார் கூறுகின்றார். யவனர் மெய்க்காப்பாளராகவும், வணிகராகவும் இருந்து உள்ளனர் என்பதை முல்லைப்பாட்டும், நெடுநல்வாடையும் பிற சங்க இலக்கியங்களும் கூறுகின்றன.

**யவனர் தோற்றமும் உடையும்**

இறுக்கமான உடை, சட்டையணிந்த உடல், அச்சந்தருந் தோற்றம், வலிமிகு உடல், தறுகண்மை ஆகியவற்றினை உடைய யவனர். அரசனின்

ஒப்பனை மாண்புடைய இல்லத்திலே மாணிக்கமணியாகிய ஒளிவிளக்கை எற்றி வைத்தனர். அவர்கள் அரசனின் மெய்க்காப்பாளராகவும் இருந்தனர் என்பதை முல்லைப் பாட்டு கூறுகின்றது.[29]

**யவனர் தொழில்:**

யவனர் மெய்க்காவலர், வணிகர் மட்டுமின்றி விளக்கும் செய்தனர் என்பதை நெடுநல்வாடை மூலம்

'யவனர் இயற்றிய வினைமாண் பாவை'[30]

என்று கூறும் வரிகள் 'யவனரால் செய்யப்பட்ட தொழிற்திறம் வாய்ந்த பாவை' நக்கீரர் பொருள் கூறுவதன் வழி அறிய முடிகின்றது. மேலும் யவனர், அந்தணர் வேள்விச் சாலையில் நட்ட வேள்வித் தூணத்தின் மேலே ஓதிம விளக்கினை (அன்ன வடிவ விளக்கு) ஏற்றினர்[4] என்பதையும் அறிய முடிகின்றது. இதன் மூலம் அவர்கள் திறமையானவர்களாகவும், மாறுபட்ட சிந்தனையுடையவராகவும் இருந்தனர் என்பதை அறியமுடிகின்றது. யவனர் என்பது மேற்குதிசை வணிகர் என்ற பா.இறையனார் கூற்றை மெய்ப்படுத்துகின்றது.

**யவனரும் வணிகமும்**

யவனர் பொன்கொடுத்து மிளகை ஏற்றிச் சென்றனர் என்று தாயங்கண்ணனார் அகநானூற்றில்

'சேரலர்
சுள்ளியம் பேரியாற்று வெண்ணுரை கலங்க
யவனர் தந்த வினைமாண் நன்கலம்
பொன்னொடு வந்து கறியொடு பெயரும்
வளங்கெழு முசிறி'[31]

என்று கூறுவதிலிருந்து அறிய முடிகின்றது மேலும் 'யவனர் இறக்குமதி செய்த திராட்சை ரசத்தை தமிழ் வேந்தரும் செல்வரும் அருந்தி மகிழ்ந்தனர்'[32] என்ற பி.இராமநாதன் கூற்றை மெய்ப்படுத்தும் வகையில் புறம்

யவனர் நன்கலந் தந்த தண்கமழ் தேறல்[33]

என்ற வரியில் இலவந்திகைப் பள்ளி துஞ்சிய பாண்டியன் நன்மாறன்

அவையில் வரும் இரவலர்க்குப் பொன், பொருள் மட்டுமின்றி, பொற்கலத்தில் குளிச்சியான, யவனரின் திராட்சை, ரசத்தையும் கொடுத்து மகிழ்ந்தனர்[34] என்று நக்கீரனார் கூறுவதிலிருந்து புலப்படுகின்றது. மேலும் இச்செய்தி, 'அரிக்கமேடு போன்ற இடங்களில் நடந்த அகழாய்வுகளில் யவனர் பயன்படுத்திய மதுச்சாடிகளான அம்போரே (amphorae) கிடைத்துள்ளதிலிருந்து' உண்மையென உணரமுடிகின்றது. மேற்கண்டவையிலிருந்து பொன், திராட்சை ரசம் போன்றவற்றை யவனர் தமிழ்நாட்டிற்குக் கொண்டு வந்தனர் என்பதைக் காட்டுகின்றது.

### 4.3. வணிகம்

ஒரு நாட்டின் பொருளாதாரம் வாணிகத்தை அடிப்படையாகக் கொண்டது. வாணிகப் பெருக்கம் உள்ள நாடுகள் அனைத்துத் துறைகளிலும் வளம் பெற்று முன்னேற முடியும். உலகில் இன்று முன்னணியில் இருக்கும் நாடுகள் அனைத்தும் வணிக வளம் பெற்ற நாடுகளாகும். 'சங்க காலம், பொற்காலம்' என்பதற்கு அடிப்படை வணிகமும் ஒன்றாகும் என்று ஏ.வீரப்பன்[35] கூறுகின்றார்.

#### சங்க கால வணிகம்

சங்க கால வணிகத்தைப் பற்றி, தாலமி, பெரிப்புளூஸ், பிளினி போன்றோரின் குறிப்புக்கள் தமிழர்கள் அயல்நாடுகளோடு தொடர்பு கொண்டு வணிகம் செய்ததையும் மற்றும் ஏற்றுமதி, இறக்குமதி ஆகியவற்றையும் கூறுகின்றன. மேலும் நாணயமாற்று, உள்நாட்டு பண்டமாற்று வணிகம் பற்றியும் குறிப்பிடுகின்றது.

அயல்நாட்டு வாணிகத்தை விட உள்நாட்டு வாணிகம் பய்டமாற்று முறையில் நடைபெற்றதை சங்க இலக்கிய குறிப்புகள் அதிகம் காட்டுகின்றன.

### 4.4 வணிக வகை:

வணிகம் இரண்டு வகைப்படும்: ஒரே இடத்தில் இருந்து விற்பனை செய்வது (கடைத்தெரு விற்பனை); ஓரிடத்திலிருந்து மற்றோர்

இடத்திற்கோ, நாட்டிற்கோ எடுத்துச் சென்று விற்பனை செய்வது (ஏற்றுமதி, இறக்குமதி) இரண்டாவதாகக் கூறப்பட்ட விற்பனையில் உள்நாட்டு வணிகமும், அயல்நாட்டு வணிகமும் அடங்கும்.

### *4.5. அங்காடி*

வணிகம் செய்யும் அங்காடிக்கு 'ஆவணம்' என்று பெயர். இதனை 'கடைத்தெரு விற்பனை' என்பர். ஆவணம் அல்லது அங்காடி என்பது பண்டங்களை வைத்துச் சில்லறை வணிகம் செய்யும் இடம் ஆகும். பகலில் விற்பனை செய்யும் இடம் 'நாளங்காடி' எனப்படும். சாயங்காலத்தில் விற்பனை செய்யுமிடம் 'அந்தியங்காடி' எனப்படும். இரவில் விற்பனை செய்யுமிடம் 'அல்லங்காடி' எனப்படும்.[36] விற்பனை பொருட்களை குறிக்க பகலில் வண்ணக்கொடிகளை பறக்கவிட்டிருந்தனர். இரவில் வண்ண விளக்குகளை எரியவிட்டிருந்தனர். மதுரை, புகார் போன்ற நகரங்களில் இவ்வங்காடிகள் இருந்தன. கடைத்தெருக்கள் நிறைந்த ஊர்கள் 'நியம மூதூர்' எனப்பட்டன.

'நெடுங்கொடி நுடங்கும் நியம மூதூர்'[37]

### *4.5.1. நாளங்காடி*

பகலில் கூடும் சந்தை 'நாளங்காடி' எனப்படும். பகையரண் பலவற்றை வென்ற மிகப்பெரும் மாறுபாடு கொண்ட படையினைக் கொண்டவன் பாண்டியன். வேம்பு மாலை அணிந்த அவனது மதுரை காலைக்கடைத்தெரு மணம் வீசியது என்பதனை நக்கீரனார்.

'வாடா வேம்பின் வழுதி கூடல்
நாளங்காடி நாறும் நறுநுதல்'[38]

என்று கூறுதில் இருந்து மதுரையில் நாளங்காடி இருந்ததையும் அங்கு பல்வேறு மணப்பொருட்கள் விற்பனை செய்யப்பட்டதையும் அறிய முடிகின்றது.

காவிரிப்பூம்பட்டினம், மருவூர்ப்பாக்கம் என்றும்; பட்டினப்பாக்கம் என்றும் இரண்டு பிரிவாகப் பிரிக்கப்பட்டிருந்தது இரண்டு பிரிவாகப்பிரிக்கப்பட்டிருந்தது. இரண்டு பாக்கங்களும் நெருங்கியிராமல்

விலகியிருந்தன. அவற்றிற்கு நடுவே தோட்டம் ஒன்று இருந்தது 'அத்தோட்டத்திலே சந்தை கூடினபடியினாலே அதற்கு நாளங்காடி' எனப் பெயர் கூறப்பட்டது.

காவிரிப்பூம்பட்டின நாளங்காடி பற்றி அடியார்க்கு நல்லார் தன் உரையில், 'பெருவேந்தர் இருவர் போர் குறித்து வந்துவிட்ட பாசறையிருப்புக்கு நடப்பட்ட நிலம் போர்க்களமானாற்போன்று மேற்கூறிய இருபாக்கத்திற்கும் பொதுவிடம் நாளங்காடியானது அது நெருக்கமான மரச்சோலையில் மரங்களின் கால்களே தூணாகக் கட்டப்பட்ட கடைகளையுடையது இங்கு கொடுப்போர், கொள்வோர் இடையறாது வந்து, சென்று கொண்டிருந்த நாளங்காடியாக இருந்தது. இதனை சிலம்பு

இருபெரு வேந்தர் முனையிடம் போல
இருபாற் பகுதியின் இடைநில மாகிய
கடைகால் யாத்த மிடைமாச் சோலைக்
கொடுப்போர் ஓதையும் கொள்வோர் ஓதையும்
நடுக்கின்றி நிலைஇய நாள ங்காடி[39] என்கிறது.

## நாளங்காடியும் கொடியும்

பொருட்கள் கொண்டுவரப்பட்ட பாய்மரக்கப்பல் மீது கொடி ஏற்றப்பட்டிருந்தது. மீன் பொறித்து விற்பவர்கள், கள் விற்பவர்கள் மற்றும் ஏனைய பண்டங்கள் விற்போரும் பல்வேறு வண்ணமும் வடிவமும் உடைய கொடிகள் ஏற்றப்பட்டிருந்ததை பட்டினப்பாலை கூறுவதன் மூலம் அறியலாம்.[40]

## நாளங்காடியும் விற்பனைப் பொருட்களும்

கடலில் மரக்கலத்தே வந்து நிமிர்ந்த செலவினையுடைய குதிரை ; நிலத்தில் சகடங்களில் வந்த மிளகுப் பொதிகள் காணப்பட்டன. மேருவின் மாணிக்கம், சாம்பூநதம் எனும் பொன்; குடகு சந்தனம், அகில்; தென்திசைக் கடலிற் பிறந்த முத்து, கீழ்த்திசைக் கடலிற பிறந்த பவழம் போன்றவைகளும் இருந்தன.மேலும் கங்கை, காவிரி, ஈழம், கடாரம் ஆகியவற்றில் பிறந்த

பொருட்களும் நிலம் நெளிய வந்து குவிந்து கிடந்தன[41].

### 4.5.2 அல்லங்காடி

'அல்' என்றால் 'இரவு' என்று பொருள் மதுரை மாநகரம் 'தூங்கா நகரம்' என்று அழைக்கப்படுகின்றது. இன்று சென்னை மாநகரம் சிறப்புடன் விளங்குவது போன்று சங்க காலத்தில் தென்மதுரை பெருஞ்சிறப்புடன் விளங்கியது.

மதுரை அல்லங்காடியில் இனிய பண்ணியகாரம், பூ, பூமாலை, நவமணி, பொன், சந்தனம், கருப்பூரம் ஆகியவற்றுடன் புனுகு, சுண்ணம் கலந்து இடிக்கப்படும் சுண்ணம், வெற்றிலை, பாக்கு, சுண்ணாம்பு ஆகியவற்றை விற்போர் சுறுசுறுப்பாக இயங்குவதைக் காணலாம்.[42]

மதுரை கடைத்தெருவில் பலமொழி பேசும் பலநாட்டு மக்கள் நிறைந்திருந்தனர். வெளிநாட்டு வணிகர்கள் தங்கள் நாட்டுப் பொருள்களை தங்கள் நாட்டில் விற்பதற்காக வாங்கிச் சென்றனர்.[43]

சங்கு வளையல் செய்வார், மணிகளைத் துளையிடுவார், பொன் வணிகர், செம்பு வணிகர், ஓவியர் எனப் பல்வேறு பிரிவினர் விற்பனை நட இங்கு செய்யப்பட்ட அணிகலன்களை அயல்நாட்டு வணிகர் வாங்கிச் செல்ல அங்கும் இங்கும் சென்ற ஆரவாரம் அதிலிருந்தது[44]

### 4.6. பண்டக சாலைகள்:

அங்காடிகளுக்கு அருகில் பண்டங்களை அடுக்கி வைக்கும் 'பண்டக சாலைகள்' கட்டப்பட்டிருந்தன.[45] அவை சாளரம் இல்லாத புழுக்கறைகளாக இருந்தன. சிலம்பில் இளங்கோவடிகள் அல்லங்காடிகளை

திருமகள் இல்லம்[46]

என்று கூறுகிறார். ஆகவே சங்க காலத்தில் பூம்புகாரிலும், மதுரையிலும் நாளங்காடி, அல்லங்காடிகள் சிறப்புடன் நிகழ்ந்தமையை மேலே உள்ள பகுதிகளால் தெளிவாக அறியலாம்.

### 4.7. உள்நாட்டு வணிகம்:

சங்க காலத்தில் உள்நாட்டு வணிகம் நன்கு வளர்ச்சியுற்றிருந்தது. நானிலத்தவரும் தத்தம் பொளைக் கொடுத்துத் தமக்குத் தேவையான பொருள்களை மாற்றிக் கொண்டனர். எனவே 'மாறுதல்' என்றாலே வணிகம் செய்தல் என்று பொருள்படுவதாயிற்று என்கிறார். அ.தெட்சிணாமூர்த்தி[47]. அக்காலத்தில் நெல்லே பண்டமாற்று முறையில் விலையைக் கணக்கிட அடிப்படையாக இருந்தது எனலாம். உப்பும் நெல்லும் ஒரே மதிப்புடையனவாக இருந்ததையும் அது உள்நாட்டு வணிகத்திற்கு உதவியதையும்

நெல்லும் உப்பும் நேரே யூரிர்
கொள்ளீ ரோவெனச் சேரிதொறும் நுவலும்[48]

என்று கூறும் உமணப்பெண்ணின் கூற்றிலிருந்து அறிய முடிகின்றது. மேலும்

நெல்லின் நேரே வெண்கல் உப்பெனச்
சேரி விலை மாறு கூறலின்[49]

என்று அகமும் கூறும் படகில் மீன் பிடிக்கச் சென்ற பரதவனுக்கு,அவன் மகள் உப்புக்கு மாற்றிய வெண்ணெல் சோற்றினை அயிலைமீன் குழம்போடு கொடுத்தாள்[50]. உப்பை மாற்றி வெண்ணெல் கொண்டுவர தன்தாய் சென்றதை பரதவப்பெண் கூறுகிறாள். படகில் உப்பை ஏற்றிச் சென்று விற்றனர்[51]. திரும்பி வருகையில் படகு நிறைய வெண்ணெல் வந்ததைப்பட்டினப்பாலை

வெள்ளை உப்பின் கொள்ளை சாற்றி
நெல்லோடு வந்த வல்வாய்ப் பஃறி[52]

என்று கூறுவதைக் காணலாம். உள்நாட்டு வணிகத்தில் நெல்லுக்கு இணையாக உப்பின் விலை மாற்றப்பட்டது. தயிரும் இறைச்சியும் மாற்றப்பட்டது.

### 4.7.1 உள்நாட்டு வணிகமும் பண்டமாற்று முறையும்

தம் நிலப்பகுதிகளில் விளையும் பொருள்களை நிலவழியில் வண்டிகள் மூலம் கொண்டு சென்று உள்நாட்டில் விற்பனை செய்வது 'உள்நாட்டு வணிகம்' எனப்படும். உள்நாட்டு வணிகத்தில் பண்டமாற்றுமுறையே அதிகம் இடம்பெற்றிருந்தது. இதனை,

*கான்உறை வாழ்க்கை கதநாய் வேட்டுவன்*
*மான்தசை சொரிந்த வட்டியும் ஆய்மகள்*
*தயிர்கொடு எந்த தசும்பும் நிறைய*
*ஏரின் வாழ்நர் பேரில் அரிவையர்*
*குளக்கீழ் விளைந்த களக்கொள் வெண்ணெல்*
*முகத்தனர் கொடுப்ப உகந்தனர் பெயரும்*[53]

என்கிற அடிகள் காட்டில் வாழும் வேடன் சினமிகு நாயுடன் வருவான் அவன் வட்டிலே மான்கறியைக் தொண்டு வருவான். ஆயர் பாடியிலே இருக்கிற ஆயர் மகள் பானையிலே தயிர் கொண்டு வருவாள். அவற்றைப் பெற்றுக் கொண்ட மருத நில மக்கள் அவ்வட்டிலும் பானையும் நிறையும் படி நெல்லை முகந்து கொடுப்பார்கள். அவர்களும் அதைப்பெற்றுக் கொண்டு மகிழ்ச்சியோடு செல்வார்கள். இதன் மூலம் சங்க காலத்தில் இறைச்சிக்கும் தயிர்க்கும் நெல் மாற்றப்பெற்றதை அறிய முடிகின்றது.

'நெல்லிற்கு மட்டுமின்றி வேறு பொருள்களுக்கும் மாற்றப்பட்டது' இதனைப் பொருநராற்றுப்படை, 'தேனையும் கிழங்கையும் விற்ற குறிஞ்சி மக்கள் விலையாக அவர்களிடமிருந்து மீன் நெய்யையும் நறவையும் கொண்டு சென்றதைக் குறிப்பிடுகின்றது.[54] இனிய கரும்பையும் அவலையும் விற்ற மருதநில மக்கள் அதனைக் குறிஞ்சி நில மக்களிடம் கொடுத்து அதன் விலையாக மான் தசையையும் கள்ளையும் கொண்டு போயினர் என்று குறிப்பிடுகின்றது.'[55]

கூரிய பற்களையுடைய பாணர்மகள் தான் கொண்டுவந்த இனிய கெளிற்றுமீனைக் கொட்டிய கூடை நிரம்பும்படி உழவன் மகள் வயலில் விளைந்த பயற்றை நிரப்பினாள் என்பதை ஐங்குறுநூறு

*முள்ளெயிற்று பாண்மகள் விண்செடி சொரிந்த*
*வகன்மெரு வட்டி நிறைய மனையோ*
*ளரிகாற் பெரும்பயறு நிறைக்கு மூர*[56]

கூறுவதிலிருந்து நெல், கரும்பு தவிர நெல்லரிந்த வயலில் பயறு போன்ற தானியங்கள் சங்க காலத்திலேயே விதைக்கப்பட்டதை அறிய முடிகின்றது.

மேலும் சிலமீன்களைக் கொடுத்துவிட்டு அவற்றிற்கு பலவாகிய நெல்லை அதாவது அதிகமாகவும் பெற்றனர்[57] என்பதையும்; வரால் மீனை வாங்கிக் கொண்ட உழவன் மனைக்கிழத்தி அப்பெட்டி நிறைய ஓராண்டு கழிந்த வெண்ணெல்லை சொரிந்து நிறைக்கின்றாள் என்பதையும் ஐங்குறுநூறு கூறுகின்றது[58]. இதிலிருந்து மீனிற்கு மாற்றாக பயறு, நெல் போன்றவை பெறப்பட்டன என்பதையும் உணர முடிகின்றது.

முல்லை நில இடைச்சியர் பால், தயிர், மோர், நெய், வெண்ணெய் போன்றவற்றை மருதநிலத்தில் நெல்லிற்கு விற்றனர். அதனைக்கொண்டு சுற்றத்தினரை உண்ணச்செய்தாள் பின்பு குறிஞ்சி நிலத்தில் பாலெருமைக்குமட் ஆவிற்கும், எருமைக்கடாவிற்கும் மாற்றி வந்தாளொழிய அவளதற்கு பொன்னை வாங்கவில்லை[59] என்று கூறுவதிலிருந்து பொன்னைவிட மேலானதாக ஆக எருமை போன்றவை கருதப்பட்டதை அறியலாம்.

### 4.8 அயல்நாட்டு வணிகம்

பழந்தமிழ் நாட்டில் கி.மு. முதலே அயல்நாட்டு வணிகத்தை ஆரம்பித்துவிட்டனர் என்கிறார். க.ப.அறவாணன்[60] இதற்குச் சான்றாக பழந்தமிழ்நாட்டில் கிரேக்கர், உரோமர், சீனர், அரேபியர் ஆகியோர் தமிழக கரையோரங்கட்கே வந்து தம் இடங்களில் கிடைக்காத பொருட்களை வாங்கிச் செல்லவும், தம் நாட்டுப் பொருட்களை அவை இல்லா த தமிழக ஊர்களில் விற்றதையும் கூறலாம்.

### அயல்நாட்டு வணிகருடன் வணிகத் தொடர்பு:

சங்க காலத்தில் வாழ்ந்த தமிழர்கள் அயல்நாட்டினரோடு கொண்டிருந்த தொடர்பை பட்டினப்பாலை எடுத்துக்காட்டுகின்றது.

பல் லாயமொடு பதிபழகி
வேறுவே றுயர்ந்த முதுவா யொக்கற்
சாறயர் மூதூர் சென்றுதொக் காக்கு
மொழிபல பெருகிய பழிதீர் தேஎத்துப்

புலம்பெயர் மாக்கள் கலந்தினி துறையும்

முட்டாச் சிறப்பிற் பட்டினம்[61]

என்னும் பாடல் அடிகளில் உலகிலுள்ள பல்வேறு நாடுகளுக்குச் சென்று அங்குள்ள மக்களுடன் பேசிப் பழகியதனால் பல்வேறு அறிவு நிரம்பிய சுற்றத்தையுடைய சான்றோர் திருவிழாக் கொண்டாடுவதற்குத் தம்பழைய ஊரிலே கூடினாற்போல பல நாட்டிற்குச் சென்று பன்மொழி பேசுகின்ற பல நாட்டு வணிகர்களும் இங்கு வந்து கூடித் தம்மைப் போல வாழும் வணிகர்களோடும் மக்களோடும் உள்ளங்கலந்து மகிழந்திருப்பதற்கிடம்தான் குறைவற்ற பல்வளமுடைய காவிரிப்பூம்பட்டினமாகும்.

'கடல் சார்ந்த நிலமாகிய நெய்தல் நில மக்களுக்கு கடல்வழி வணிகம் செய்ய வேண்டியது அவசியமாயிற்று'[62] என்ற கருத்தை பி.டி.சீனிவாச அய்யங்கார் கறித்தமைப்படி அவர்கள் வணிகம் செய்வதற்கு இப்புகார் பெரும்பங்களித்ததெனலாம். தமிழ் வணிகர்களிடம் விலையுயர்ந்த கற்களையும் நறுமணப்பொருட்களையும் பெற்ற அரபு வணிகர்கள் எகிப்திற்குச் சென்று பெரும் பொருள் ஈட்டினர்[63] என்று பி.டி.சீனிவாச அய்யங்கார் கூற்றை மெய்ப்படுத்தும் வகையில், இமயமலையில் விளைந்த பலவகை மணிகளும், தென்கடல் முத்துக்களும், கீழ்க்கடலில் விளைந்த பவளங்கள் ஆகிய பூம்புகார் துறைமுகத்தில் ஏற்றுமதியாயின[64] என்று பட்டினப்பாலை கூறும் செய்தி உள்ளது.

தமிழகத்திற்கும் பாபிலோனியாவிற்கும் இடையே வணிகத் தொடர்பு இருந்ததை

'பாபிலோனியாவின் உடைப்பட்டியலில் பட்டாடை காணப்படுகின்றது. இது தமிழகத்திலிருந்து சென்றது'[65] என்று பி.டி.சீனிவாச ஐயங்கார் குறிப்பிடுகின்றார். ஆனால் புற நானூற்றிலும்[66], நற்றிணையிலும்[67] 'பருத்திப்பெண்டிர்' பற்றிய செய்திதான் காணப்பட்டினாலும், ஆட்டின் ரோமத்தாலும், பருத்தி நூலினாலும் ஆடைகள் நெய்யப்பட்டதை சிலப்பதிகாரம்

பட்டினும் மயிரினும் பருத்தி நூலினும்

*கட்டும் நுண்வினைக் காருகர் இருக்கை*[68]

*என்ற வரிகளில் கூறுவதோடு அவர்கள் தனித்தெருவில் வசித்ததையும் அவர்கள் பட்டுத்துணியை, 'நூலாக்கலிங்கம்' என்று அழைத்ததையும் கூறுகின்றது. இதனையே பதிற்றுப்பத்து*

*நூலாக் கலிங்கம் வாலரைக் கொளீஇ*[69]

*என்று கூறுகின்றது. மேலும் பட்டிற்கு குஞ்சம் கட்டுவோரை, 'வம்புதிரை முடிநர்' என்றும் கூறுகின்றது. இதனைப்பற்றி பொருநராற்றுப்படை*

*கொட்டைக் கரைய பட்டுடை நல்கி*[70]

*என்று கூறுவதினாலும் பாபிலோனியாவிற்கு பட்டு ஏற்றுமதியானது உறுதிப்படுத்தப்படுகின்றது.*

### *4.8.1. உரோம் நகர வணிகத் தொடர்பு:*

*உரோம் நகர வணிகத்தொடர்பு தமிழகத்திற்கு கி.மு.முதல் நூற்றாண்டிற்கு முன்னரே ஏற்பட்டிருக்க வேண்டும் என்பதை, 'ஸ்ட்ரோபோ, அகஸ்டஸ் ஆகிய இருவரும் கி.மு. முதல் நூற்றாண்டினர். அவர்கட்குத் தமிழக மேலை கடற்கரையில் யவனர் 'அகஸ்டஸ்' கோயிலைச் சமைத்து இருந்தனர்.'*[71] *என்று கூறிய நிக்கோலஸ் கருத்து மெய்ப்படுத்துகின்றன. இதனை கு.வெ.பாலசுப்ரமணியனும் தன் நூலில் எடுத்துக்கூறியுள்ளார்.*

*அயல்நாட்டு வணிகத்திற்கு நாணயங்கள் பயன்படுத்தப் பட்டதையும் அதிலும் ரோம நாணயங்கள் அதிகம் பயன் படுத்தப்பட்டதையும் அகழாய்வு. கண்டுபிடிப்புகள் வெளிப்படுத்துகின்றன. இதனைத் 'தென்னிந்தியாவில் தலைச் சேரிக்கு அருகில் உள்ள கோட்டம்; மதுரை மாவட்டத்திலுள்ள கலியன்புத்தூர்; கோவை மாவட்டத்திலுள்ள பொள்ளாச்சி, கருவூர் ஆகிய இடங்களிலும்; புதுக்கோட்டையிலும் பெருமளவு உரோம் நாணயங்கள் கண்டு எடுக்கப்பட்டதை சேவா ஐயங்கார் குறிப்பிடுவதாக ஏ.வீரப்பன் வெளிப்படுத்துவதிலிருந்து அறிய முடிகின்றது.'*[72]

#### *4.8.2. வணிகத் தொடர்பும் சொற்பரவலும்*

*வெற்றிலை – பெடல் (*Betal*); ஏலம் – ஹேல் (*Hel*); அரிசி – ஒருசா (*Orusa*); இஞ்சிவேர் – ஜிஞ்சிபேர் (*Zingipur*); அகில் (*Agil*) என்பன போன்ற தமிழ்ச் சொற்கள் ஆங்கிலம், இலத்தீன், கிரேக்கம் போன்ற மொழிகளில் வழங்கப்படுகின்றன. இச்சொற்களின் வாயிலாக தமிழர் பிறநாட்டினருடன் கொண்டிருந்த வாணிபத்தொடர்பை அறிய முடிகின்றது.*

#### *4.8.3 ரோம நாணயங்கள் கூறுவன*

*அரிக்கமேடு ஆராய்ச்சியில் கிடைத்த ரோம நாணங்கள் சேர நாட்டுத் துறைமுகப்பட்டினங்களான தொண்டியைத் "திண்டிஸ்" என்றும்; முசிறிமை 'முசிரிஸ்' என்றும்; குமரியை 'கொமாரி' என்றும்; கொற்கையைக் 'கொற்காய்' என்றும்; நாகப்பட்டினத்தை, 'நிகரயா' என்றும்; புதுச்சேரியை, 'பொதுகே' என்றும்; மரக்காணத்தை, சோபட்டமா என்றும்; மசூலிப் பட்டினத்தை, 'மசோலியா'[73] என்றும் குறித்துள்ளனர் என்கிறார் அ.தெட்சிணாமூர்த்தி.*

#### *4.8.3. தமிழர் உரோமர் வணிக வளர்ச்சி*

*தமிழர் உரோமர் வணிக வளர்ச்சிக்கு உதவியது, 'மிளகே' யாகும். தாம் இறக்குமதி செய்த பொருள்களில் நான்கில் மூன்று பகுதியாகும். அவர்கள் உணவுப்பொருள் கெடாமல் பாதுகாக்க மிளகைப் பயன்படுத்தினர். உரோமாபுரியில் ஒரு இராத்தல் மிளகின் விலை 'பதினைந்து தெனாரி' என்கிறார். பிளைனி அது இந்திய விலைமதிப்பில் அரைப்பங்குகூட இல்லை என்கிறார். மேலும் மிளகு பசியை அதிகரிப்பதனால் இதன் முக்கியத்துவத்தை உணர்ந்த பிளினி இதனை உணவுப் பொருளாக கொள்ளும் வழக்கத்தை கொண்டு வந்தவர் பற்றி ஆராய்ந்ததைப் பிளைனி கூறுவதாக க.வித்தியானந்தன் வழி அ.தெட்சிணாமூர்த்தி கூறுகின்றார்.*[74]

#### ரோமர் குடியிருப்பு:

*எகிப்து நாட்டவரான ரோமர் தமது வணிக வளர்ச்சியின் காரணமாக இந்தியாவில் பெருமளவில் குடியிருப்பை ஏற்படுத்தினார்கள். அவர்கள்*

‘ரோமநாட்டு குடிமக்கள்’ என்ற முறையில் நிரந்தரமாய் வசித்து வந்தார்கள் என்பதையும் புதுச்சேரிக்கருகிலுள்ள வீராம்பட்டினத்தில் பூமியைத் தோண்டியபோது அங்கு ரோம் நாட்டு வியாபாரிகளின் பெரிய கட்டடமிருந்ததாகத் தெரிகிறது[75]. இதனை மோதிசந்திரர் குறிப்பு வழி அறிய முடிகின்றது.

### 4.8.4. தமிழர் – வடநாட்டினர் வணிகம்

தமிழர் – வடநாட்டினர் வணிகத் தொடர்புக்கு பாலமாக அமைந்தது தாமரலிப்தி துறைமுகம். இது கங்கை, வங்காள விரிகுடாவில் கலக்குமிடத்தில் அமைந்துள்ளது. இது வங்காளத்தின் புராதனத் துறைமுகம். இதன் வழியாகக் கங்கையை அடைந்து கங்கையில் தமது கலங்களைச் செலுத்தினர். அங்குள்ள உள்நாட்டுத் துறைமுகங்களிலும் தமது வாணிகத்தை நிலைநாட்டினர் என்பதை

பல்புகழ் நிறைந்த வெல்போர் நந்தர்
சீர்மிகு பாடலிக குழீஇம் கங்கை
நீர்முதற் கரந்த நீதியங் கொல்லா[76]

மா.மூலனார். தம் பாடல்வழி ‘மௌரியர் காலத்தில் கி.மு.4 ஆம் நூற்றாண்டில் ஆண்ட அரசன் நந்தன் அரசுச் செல்வத்தைக் கங்கைக் கரையில் புதைந்திருந்தான்’ என்ற செய்தி வெளிப்படுகின்றது. இது சாணக்கியர் கங்கைக் கரையில் புதைந்திருந்த செல்வத்தைத் தோண்டியெடுத்து குதிரைகளில் கட்டிப் பாடலிபுத்திர வீதிகளின் வழி ஓட்டிச் சென்று அதனை மக்களை சென்றடையச் செய்தான் என்று சரித்திரக் கதைகள் கூறும் ஆனால் அவ்வாறு புதைத்திருந்த விவரத்தை மாமூலனார் அந்நதி வழிச் சென்று வணிகம் செய்ததை வெளிப்படுத்துகின்றது.

‘தக்காணம் கங்கைச் சமவெளியாகிய வட நாட்டிலிருந்து பொன்னும் மணியும் கங்கையாற்றில் பிறந்த பொருட்களும் புகாரில் குவிந்துகிடந்தன’ என்று பட்டினப்பாலை கூறுவதிலிருந்து தமிழர் நாட்டிலுள்ள வணிகர்கள் வியாபாரம் செய்ததோடு மட்டுமின்றி இறக்குமதி செய்ததையும் அறிய முடிகின்றது.

### 4.9 ஏற்றுமதி

சங்க காலத்தில் பெரிய அளவிலான வணிகம் கடல் வணிகம் மூலம் நடைபெற்றது.

யவனர் தந்த வினைமாண் நான்கலம்

பொன்னொடு வந்து கறியொடு பெயரும்

வளங்கெழு முசிறி[77]

என்று கூறும் அகநானூற்று அடிகள் மூலம் முசியிலிருந்து மிளகு ஏற்றுமதி செய்யப்பட்டதை அறிய முடிகின்றது. மிளகு தவிர வாசனைத் திரவியம், தந்தம், துணி ஆகியவை ஏற்றுமதி, செய்யப்பட்டதை 'வியன்னா' அருங்காட்சியகத்தில் உள்ள ஆவணத்தில் உள்ள முசிறியிலிருந்து அலெக்காண்பிரியாவிற்கு வாசனைத்திரவியம், தந்தம், துணி ஆகியன ஏற்றுமதி செய்யப்பட்டன. அவை முதலில் செங்கடல் துறைமுகத்தில் இறக்கப்பட்டன[78] என்ற செய்தி குறிப்பிடுகின்றது.

பட்டை பாபிலோனியாவிற்கு ஏற்றுமதி செய்ததைப் பற்றி பி.டி.சீனிவாச ஐயங்கார் குறிப்பிட்டுள்ளார்[79]. இதனை உறுதிப்படுத்துமு; வகையில்

'கொட்டைக் கரைய பட்டுடை நல்கி'[80]

என்று பொருநராற்றுப்படை கூறுகின்றது.

வடநாட்டிற்குப் பொருட்கள் ஏற்றுமதி ஆகியிருப்பதை, 'கங்கைக்கும் சென்ற கப்பல்கள், 'சோழந்தி' என்றும்; சங்கரர் என்றும் பெய் கொண்ட பெரிய கப்பல்கள் ஆகியவை சோழர் துறைமுகமான பூம்புகாரில் நின்றன' என்று பொருள் கூற்றை கூறுவதிலிருந்து உறுதி செய்ய முடிகின்றது.

### 4.10 இறக்குமதி

தமிழ்நாட்டிற்குத் தேவையான இங்கு கிடைக்காத மதுபான வகைகள்; சந்தனம், அகில் போன்ற மணப்பொருள்கள்; உணவுப்பொருட்கள், மட்பாண்டங்கள், கண்ணாடிப் பொருட்கள், பாவை விளக்குகள் எங்கிருந்து இறக்குமதி செய்யப்பட்டன என்பதை காண்போம்.

வடநாட்டிலிருந்து இறக்குமதி செய்யப்பட்ட வெள்ளிய நிறமுடைய வட்டக்கல்லில் பொதிகைமலை சந்தனக்கட்டையால் பிற மணப்பொருட்களைச் சேர்த்து அரைத்துப்பூசினர் என்பதை நக்கீரனார்

வடவர் தந்த வான்கேழ் வட்டம்
குடபுல உறுப்பிற் கூட்டுபு நிகழ்த்திய
வண்டிமிர் நறுஞ்சாந் தணிகுவம்[81]

என்று கூறுவதிலிருந்து இறக்குமதியின் முக்கியத்துவத்தை அறிய முடிகின்றது.

காவிரிப்பூம்பட்டினத்தின் துறைமுகத்தில் இறக்குமதி செய்யப்பட்ட பொருள்களைக் கூறுகின்றன. "கடலிலே மரக்கலத்தில் வந்த நிமிர்ந்த செலவினை உடைய குதிரர் நிலத்தில் சகடங்களில் வந்த மிளகுப் பொதிகள்; மேருவிலே பிறந்த மாணிக்கம், சாம்பூநதம் என்னும் பொன்; குடகு மலையில் பிறந்த அகில்; தென்திசைக்கடலில் பிறந்த முத்து; கீழ்த்திசைக் கடலிற் பிறந்த பவளம்; கங்கையில் பிறந்த பொருள்; காவிரி ஆற்றின் கரையில் விளைந்த நெல், கரும்பு போன்ற உணவுப்பொருட்களும்; கடாரம், ஈழம் போன்ற நாடுகளிலிருந்தும் பொருள்கள் வந்து குவிந்து கிடந்தன"[82]

என்று கூறுவதிலிருந்து இந்தியாவிற்குள் உள்ள பல்வேறு இடங்களிலிருந்தும் அயல்நாடுகளிலிருந்தும் இறக்குமதி செய்யப்பட்டதை அறிய முடிகின்றது. குதிரைகளின் பிறப்பிடம் ஆசியாவின் வடநடுப்பாகமென்றும் அங்கிருந்து தான் அதன் கிழக்கேயுள்ள சீனாவிற்கும் மங்கோலியாவிற்கும் ஏற்றுமதியாயின. மேலும் அதன் மேற்கேயுள்ள ஐரோப்பாவிற்கும்; அதன் தென்மேற்கேயுள்ள பாரசீகம், அரேபியா முதலிய நாடுகட்கும் ஏற்றுமதி செய்யப்பட்டன. அரேபியக்குதிரைகள் பெரியனவாகவும், பேணுதற்கரியானவும் இருந்தனவென்பதால் பெரும்பாலும் படைகளுக்கும் அரசன் ஊர்தற்கும் பயன்பட்டிருக்க வேண்டும்[83] என்று தேவநேயப்பாவாணர் கூறும் கருத்து 'நிமிர்ந்த செலவுடைய புரவி என்பதனால் அவை அரேபியக்குதிரைகளாக இருந்திருக்க வேண்டும்' என்பதை உணர்த்துகின்றது.

யவன நாட்டிலிருந்து இறக்குமதி செய்யப்பட்ட பொருள்களில் உயர்வகை மதுவும் ஒன்று அவற்றை இலவந்திகைப் பள்ளி துஞ்சிய பாண்டியன் நான்மாறன் அருந்தியதையும் அதைக் கொடுக்க ஏவல் மகளிருந்ததையும் புறம்

யவனர் நன்கலம்தந்த தண்கமழ் தேறல்
பொன்செய் புனைகலந் தேந்தி நாளும்
ஒண்தொடி மகளிர் மடுப்ப[84]

என்று கூறுகின்றது. இதேபோல் பாவை விளக்கு, ஓதிம விளக்கு போன்றவையும் இறக்குமதி செய்யப்பட்டனவென்பதை

'யவனர் இயற்றிய வினைமான் பாவை'[85]
'............................................ யவனர்'
ஓதிம விளக்கின் உயர்மிசைக் கொண்ட[86]

இவ்வரிகள் எடுத்துரைக்கின்றன.

**குதிரை இறக்குமதி:**

துறைமுகத்தில் வந்திறங்கும் சரக்குகளில் பால் போன்ற வெள்ளை நிறக் குதிரைகள் வந்திறங்குவதை

....... ...... ....... பாற்கேழ்
வாலுளைப் புரவியொடு வடவளந் தரூஉம்
நாவாய்சூழ்ந்த நளிநீரிப் படப்பை[87]

என்று கூறுகின்றது. பெரும்பாணாற்றுப்படை இதில் கூறப்படும் துறைமுகம் 'நீர்ப்பாயற்றுறை எனவும்; இது 'சலசயனம்' எனவும்; இதன் பெயர், 'மாமல்லை, மாவலிபுரம், மாமல்லபுரம்' என்ற பெயர்களெல்லாம் மருவி 'மகாபலிபுரம்' என்று வழங்கப்படுவதாக உரை ஆசிரியர் பொ.வே.சோமசுந்தரனார்' கூறுகின்றார்.[88]

மேலும், 'திருநெல்வேலி மாவட்டம் அம்பாசமுத்திரம் வட்டத்தில் உள்ள திருப்புடைமருதூர் என்ற ஊரில் அமைக்கப்பட்டுள்ள கோவிலின் சித்திரங்கள் அழகும் சரித்திர முக்யத்துவமும் வாய்ந்தவை இங்குள்ள ஓர் வண்ண ஓவியத்தில் ஓர் அரேபியக்கப்பலின் மீது அரேபிய மாலுமிகள் பல குதிரைகளைக் கொண்டு வருவதையும் காண முடிகின்றது' என்கிறார்.

நரசய்யா[89] இச்சித்திரம் கடல்வழி வணிகத்தில் அரேபியக் குதிரைகள் இறங்குமதி செய்யப்பட்டதை காட்டுகின்றது. மேலும் தென்னிந்திய கடல்வழி வணிகத்தில் குதிரை இறக்குமதி சிறந்த தொன்றாக கருதப்பட்டதை அறிய முடிகின்றது.

'முசிரிஸ் அரேபியாவினின்று வந்துள்ள கப்பல்களால் நிறைந்திருக்கும்'[90] என்று நரசய்யா கூறுவதன் வழி முசிறியிலும் குதிரை இறக்குமதி செய்யப்பட்டதை அறிய முடிகின்றது.

### 4.11. துறைமுகங்கள்

சங்க காலத்தில் சிறந்த துறைமுகங்களாக முசிறி, தொண்டி, புகார், கொற்கை ஆகியவை விளங்கின. இவைகள் ஏற்றுமதி, இறக்குமதி மையங்களாக விளங்கின. துறைமுகங்களில் கப்பல்களும், தோணிகளும் நிறைந்திருந்தன. 'கப்பல்' என்ற சொல் தெலுங்கிலிருந்து வந்தது. 'கப்பு' என்றால் 'போர்த்திக் கொள்ளுதல்' என்று பொருள். அடித்தட்டுக்கு மேல் மேற்கட்டி அல்லது மறைப்புடையது. 'கப்பல்' எனப்பட்டது. தமிழர்கள் கட்டிய வங்க நாட்டு பாணிக் கப்பல்கள் 'வங்கம்' என்றும்; ஆந்திர பாணியில் கட்டப்பட்ட பெரிய கப்பல்கள் 'நாவாய்' என்றும் அழைக்கப்பட்டதாக நரசய்யா கூறுகின்றார்.[91]

### 4.11.1 துறைமுகத்தின் சிறப்பு:

கடல்வழி வணிகத்திற்கு துறைமுகங்கள் சிறந்ததாக இருக்க வேண்டும். கடல்வழி வணிகம் சிறக்க உள்நாட்டு வணிகம் சிறந்தோங்க வேண்டும். ஏனெனில் கப்பலில் வரும் சரக்குகளைச் சரியாக வேண்டிய இடங்களுக்கு பகிர்ந்தளிக்கும் மையங்கள் இருந்தாலன்றி இவை துறைமுகத்திலேயே முடங்கி விடும். எனவே தான் துறைமுகங்களை பொருளாதார விரிவாக்கிகள்[92] (Economy Multipillars) என்கிறார்கள்.

மேலே கூறப்பட்டுள்ள வசதிகள் 'புகாரில் இருந்தன. அவையாவன புகாரில் வெளிநாட்டு மாலுமிகள் ஓய்வு எடுத்துக் கொள்ள மாலுமி இல்லங்களும்; கப்பல்கள் செப்பனிட பணிமனைகளும், உலர்துறைகளும்

இருந்தன' என்பதை பட்டினப்பாலை

'மொழிபல பெருகிய பழிதீர் தேனத்து'[93]

புலம்பெயர் மாக்கள் கலந்தினி துறையும்[94]

என்கிறது. மேலும் கப்பல்களை செப்பனிட பணிமனைகள் இருந்தன வென்பதை

'பெருங்கடல் நீந்திய மரம் வலியுறுக்கும்

பண்ணிய வினைஞர்'[95]

என்ற அடிகள் கடல் வணிகர்கள் பெருங்கடலைக் கடந்து சென்று மீண்டனர். அதாவது 'பண்ட வாணிகர்கள்' அதிகமான பண்டங்களை ஏற்றிச் சென்று விற்றுவிட்டு மீண்டனர். ஆகையால் அவர்களுடைய மரக்கலன்கள் பழுதுபட்டது. அதனை நீக்கி முன்னைப் போல வலிமையுடையதாக ஆக்கினர் என்று கூறுவதிலிருந்து சங்க காலத்திலேயே துறைமுகம் சிறப்பான முறையில் அமைக்கப்பட்டிருந்ததையும் அதில் முசிறி ஓர் சிறந்த துறைமுகமாக விளங்கியதையும் காட்டுகின்றது.

'துறைமுகத்திற்கே அழகு' சேர்ப்பது போல பல நாட்டுக் கப்பல்களும் துறைமுகத்தில் நங்கூரம் பாய்ச்சி நின்றன. இன்று நாம் பெரிய துறைமுகங்களில் காணக்கூடிய காட்சியைத் தான் அன்றே இருந்ததாக கடியலூர் உருத்திரங்கண்ணனார், 'கட்டப்பட்டிருக்கும் யானை இருபுறமும் அசைந்தாடிக் கொண்டே இருக்கும். அவ்விடத்தை விட்டு நகராது அதே போல பெரிய கப்பல்கள் நங்கூரம் பாய்ச்சி நிற்கையில் அலைகளின் அசைவால் தாமும் ஆடுகின்றன'[96] ஆனால், அவை ஒரே இடத்தில்தான் நிற்கின்றன. இது அக்காலக் கடல் வணிக வளர்ச்சி சிறப்பைக் காட்டுகின்றது.

### 4.11.2. முசிறி:

பெரியாறு கடலில் கலக்குமிடத்தில் அமைந்துள்ளது. இத்துறைமுகம் "அதிக ஆழமில்லாதது ஆயினும் மிக அதிகமான வணிகம் இதன் மூலம் நடைபெற்று வந்தது"[97] என்கிறார் நரசய்யா.

### முசிறி துறைமுகத் தோற்றம்:

முசிரிஸ் அரேபியாவினின்று வந்துள்ள கப்பல்களால்

நிறைந்திருக்கும்[98] என்று கூறுவதிலிருந்து இத்துறைமுகத்தில் ஏற்றுமதி மட்டுமல்ல இறக்குமதியும் நடைபெற்றதைக் காட்டுகின்றது.

கப்பல்கள் மட்டுமல்ல தோணிகளும் நிறைந்திருந்தன. இத்தோணிகள் ஆழமில்லாத சில துறைமுகங்களில் கப்பல்கள் சிறிது தூரத்திலேயே கடலில் நங்கூரம் பாய்ச்சி நிற்கும். சிறு "பார்ஜ்" என அழைக்கப்படும் தளமமைந்த இப்படகுகள் பொருட்களை எடுத்துச் செல்லவும், கொண்டுவரவும் துறைமுகப்போக்குவரத்து வாகனமாகப் பயன்படும் இது அன்றே நடந்தது. இது முசிறியில் நடந்ததை

"கலம் தந்த பொற்பரிசம்
கழித் தோணியின் கரைசேர்க்குது"[99]

என்ற புறப்பாடல் வழி அறியலாம்.

**முசிறியும் மிளகும்:**

மிளகு உற்பத்தி மேற்கு மலைத் தொடரில் தான் வெகுவாக நடந்தது. மற்ற இடங்களான தற்போதைய கருநாடகத் துறையிலும் சாவகத்திலும் கிடைத்தாலும் அவை சேர நாட்டு மிளகு போன்று தரம் வாய்ந்தனவில்லை. ஆகையால் மேலை நாட்டினர் சேர நாட்டு மிளகையே விரும்பி வாங்கிச் சென்றனர். அதனால் வளம் மிகுந்ததானது. பொன்னைக் கொண்டு வந்து கொடுத்துவிட்டு மிளகை ஏற்றிச் சென்ற யவனர்களின் நல்ல கப்பல்களால் நிறைந்திருந்த முசிறி. மேலும், இயற்கையிலே சேர மன்னர்களின் கட்டுப்பாட்டில் இருந்த முசிறி வளமிக்கது. இதனை மெய்ப்பிக்கும் வகையில் அகநானூறும்

"சேரலர்
சுள்ளியம் பேரியாற்று வெண்ணுரை கலங்க
யவனர் தந்த வினைமாண் நன்கலம்
பொன்னொடு வந்து கறியொடு பெயரும்
வளங்கெழு முசிறி"[100]

என்று கூறுவதிலிருந்து அறியலாம்.

குட்டுவன் என்ற சேரமன்னனின் துறைமுகமான முசிறியில்

தமிழகத்தின் பல்வேறு பகுதிகளிலிருந்து பல்வேறு பொருள்கள் வந்து நிறைந்திருந்ததை புறநானூறு

மீனொடு நெற்குவைஇ
மிசையம்பியின் மனைமறுக்குந்து
மனைக்குவைஇய கறிமூடையாற்
கலிச்சும்மைய கரைகலக்குந்து
கலந்தந்த பொற்பரிசும்
கழித்தோணியால் கரைசேர்க்குந்து
மலைத்தாரமும் கடற்றாரமும்
தலைப்பெய்து வருநர்க்கியும்[101]

என்ற அடிகளில் மீனைவிற்று நெல்லை மாற்றாகப் பெற்றனர். அந்நெற்குவியல்கள் வீட்டையே நிரம்பச் செய்தன. மிளகு மூடைகள் வந்த உயர்ந்த அம்பிகளும் நெல் நிரம்பிய வீடும் பிரித்தறிய முடியாதபடி காண்பாரை மயங்கச் செய்தன. அம்மிளகு மூட்டைகள் கப்பலில் ஏற்றப்பட்டன. அவற்றிற்கு விலையாக வந்த பொன்கட்டிகளை ஓடங்கள் கரைக்கு கொண்டு வந்து சேர்த்தன. மலைபடுபொருட்களும், கடல்படுபொருட்களும் வந்து சேர்ந்தன என்று கூறுவதை மெய்ப்பிக்கும் வகையில் "முசிறியிலிருந்து மிளகும், முத்தும் யானைத்தந்தங்களும் பட்டும் இரத்தினமும் ஏற்றுமதி செய்யப்பட்டன"[102] என்று சு.வித்தியானந்தன கூறுவது உள்ளது.

மேலைநாட்டுக் கப்பல்கள் அங்கு ஏராளமாக வந்தன. கடம்பர் என்பார் கடற்கொள்ளையில் ஈடுபட்டனர். அவர்கள் கடலிடத்தே செல்லும் கலங்களைத் தாக்கி குறும்பு செய்தனர். அவர்களை அக்கடலினிடத்தே எதிர்த்து சேரன் தன் வேற்படையை ஏவி வென்றாராதலின் சேரமன்னன். செங்குட்டுவன் "கடல் பிறகோட்டிய செங்குட்டுவன்" என்று அழைக்கப்பட்டார்[103]. இதனையே அ.தெட்சிணாமூர்த்தி அவர்களும், "கடல் வணிகத்திற்கு இடையூறாக இருந்த கடற்கொள்ளையர்கள் சேர மன்னரால் அடக்கப்பட்டனர்"[104] என்கிறார். இதனைப் பதிற்றுப்பத்து

துளங்கிருங் குட்டம் துளங்க வேலியிட்டு

அணங்குடைக் கடம்பின் முழுமுதற் தடிந்து[105]

என்று கூறுகின்றது.

மேலைக்கடற்கரையான முசிறி சேரனுக்கு மட்டும் கலஞ்செலுத்த அனுமதி கொடுத்திருந்ததும்; மறமிக்க சேனை வீரர்கள் கடல் எல்லையை காவல் செய்ததும் சேரர்கள் கடல் வணிகத்தில் சிறந்திருந்ததைக் காட்டுகின்றது என்கிறார். ஏ.வீரப்பன்.[106] இதனை மெய்ப்படுத்தும் வகையிலேயே மாறோக்கத்து நப்பசலையாரும்

சினமிகு தானை வானவன் குடகடல்
பொலந்தரு நாவாய் ஓட்டிய அவ்வழி
பிறகலம் செல்கலாது அன்னயேம் [107] என்கிறார்.

**முசிறியின் சிறப்பு:**

முசிறியிலிருந்து மிளகு ஏற்றுமதி செய்யப்பட்டது மட்டுமல்ல. அரேபியக் குதிரைகளும் இறக்குமதி செய்யப்பட்டதை அறிய முடிகின்றது. "ஹிப்பலஸ் கண்டுபிடித்த பருவக்காற்றின் உதவியால் யவனர்கள் நேராகச் செங்கடலினின்றும் முசிறிக்கு வர முடிந்தது. கி.பி.3ம் நூற்றாண்டு வரை இவ்வணிகம் நடைபெற்றது"[108] என்று டாக்டர் இ.ஹெச் புளும்பெரி கூறுவதிலிருந்து முசிறி சிறந்த துறைமுகமாக விளங்க கடலில் கப்பல் செலுத்த பருவக்காற்றும் உதவியதை அறிய முடிகின்றது.

**முசிறியில் ரோமர் குடியிருப்பு:**

எகிப்து நாட்டவரான ரோமர்கள் முசிறியில் சந்தையைத் தமக்கென்று வைத்திருந்தனர். அதைப் பாதுகாக்க அவர்களே ஒரு படையை நியமித்து இருந்தனர். இங்குப் பழைய உரோம நாணயங்கள் கண்டு எடுக்கப்பட்டன[109] என்ற நரசய்யா கூறுகின்றார். மேலும், "கோயமுத்தூர் மாவட்டத்தைச் சேர்ந்த பொள்ளாச்சியில் கி.பி.1800 ஆம் ஆண்டு கண்டெடுக்கப்பட்ட முதல் ரோமானியக் காசுப் புதையலில், 'அகஸ்டஸ் உருவம்' பொறிக்கப்பட்டு, 'கி.மு.31' என்று அச்சிடப்பட்டிருந்தது.[110] என்கிறார். ப.சண்முகம் இக்குறிப்புகள் ரோமர்கள் முசிறியில் காசு தயாரிக்க ஆலைகள் நிறுவியிருந்ததை வெளிப்படுத்துகின்றது.

### *4.11.3 கொற்கை*

*தூத்துக்குடி மாவட்டம், ஸ்ரீவைகுண்டம் வட்டத்தில் தாமிரபரணி நதிக்கு 3 கி.மீ தொலைவில் வடக்குப் பக்கம் அமைந்துள்ளது.*

**கொற்கையின் சிறப்பு**

*தாமிரபரணிக் கரையிலிருந்த கொற்கை என்ற கிராமம் சங்க காலத்தில் பாண்டிய நாட்டின் தலைநகரமாய் சிறந்து விளங்கியது. இங்கு பெரிய சந்தை கூடும். அக்காலத்தில் கடலைத் தொட்டுக் கொண்டிருந்த இவ்வூர் இப்போது ஏழு மைல் அளவில் உள்நாட்டுப் பகுதியில் அமைந்துள்ளது. "ஓஃபிர் அல்லது உவரி இவ்வூரின் ஒரு பகுதியாகும். இப்போது அதே பெயரில் இங்கிருக்கும் மீனவர் கிராமத்தில் மணல்மேடுகள் உள்ளன. இம்மணல்மேடுகள் ஒரு காலத்தில் தங்கச் சுரங்கள் இருந்ததாகச் சொல்லப்படுகின்றது. 'இன்றும் மழை பெய்த பின்னர் கிராமமக்கள் அங்குச் சென்று தங்கப் பொடியைப் பொறுக்குகின்றனர்'[111]என்கிறார்.*

*கொற்கையின் சிறப்பைப் பற்றி கால்டுவெல் கூறுவதை நரசய்யா குறிப்பிடும் போது 'கொற்கை, கொல்கை எம்போரியம்' எனப்பட்டது. சங்க காலத்தில் கொற்கை முத்து வணிகத்தில் சிறப்பிடம் பெற்றிருந்தது. குமரியைச் சுற்றிய பின் கிரேக்கர்கள் அடைந்த முதல் துறைமுகம் இதுதான் அவர்கள் மன்னார் வளைகுடாவை 'கொல்கை வளைகுடா'[112] என்று அழைத்ததாகக் கூறுகின்றார்.*

**முத்து**

*முத்து 6 முதல் 7 அடிக்குள் முத்து கிடைக்கும் நல்ல முத்து 40 முதல் 50 அடி ஆழத்தில்தான் கிடைக்கும். 1 டன் முத்துச்சிப்பிக்குள் 4 அல்லது 5 முத்துக்கள் தான் கிடைக்கும். சிப்பிக்குள் முத்து இருப்பதைப் பொறுத்து அதன் தரம் அதிகமாக இருக்கும் ஜப்பானில் முத்துக் குளிப்பவர்கள் 'அம்மாக்கள்' என்று அழைக்கப்பட்டனர். 1893ல் (*imitation*) செயற்கை முத்தை ஜப்பான் நிறுவனம்தான் முதலில் தயாரித்தது.*

**கொற்கையும் முத்தும்**

*பாண்டியர்களின் சிறந்த துறைமுகமாகும். கொற்கையின் வளத்தை*

*சிலப்பதிகாரமும்,*

*“தண் செங்கழுநீர்த் தாதுவிர் பிணையல்*

*கொற்கையாம் பெருந்துறை முத்தொரு பூண்டு”*[113]

*என்கிறது.*

*கொற்கைத் துறைமுகத்தில் முத்துக் குளித்தல் சிறப்பாக நடைபெற்றது. முத்தும் சங்கும் குளிப்பவர்களின் குடியிருப்பு இருந்ததை மதுரைக்காஞ்சி*

*“விளைந்து முதிர்ந்த விழுமுத்தின்*

*இலங்குவளை இருஞ்சேரிக்*

*கட்கொண்டிக் குடிப் பாக்கத்து*

*நற்கொற்கையோர் நசைப்பொருந்”*[114]

*என்று குறிப்பிடுகின்றது. மேலும் உமணர்களோடு வந்த குழந்தைகளைப் போன்ற குரங்குகள் சிப்பிகளின் உள்ளே முத்துக்களை இட்டு கிலிகிலியாடின என்பதை சிறுபாணாற்றுப்படை*

*“மகாஅர் அன்ன மந்தி மடவோர்*

*நகாஅர் அன்ன நளிநீர் முத்தம்*

*வாள்வா யெருந்தின் வயிற்றகத் தடக்கி”*[115]

*என்று கூறுகின்றது. கொற்கைத் துறைமுகத்தில் கடலலைகள் கொண்டு வந்து வீசும் குளிர்ந்த, ஒளியினையுடைய முத்துக்கள் கிடந்தன. அவை அங்குச் செல்லும் குதிரைகளின் கால்களைத் தடுத்து வடுக்களைச் செய்தனவென்று அகம் தெளிவுறுத்துகின்றது*[116]*. மேலும், இந்த பாடல் அடிகள் கொற்கையில் முத்துக்கள் நிறைந்திருந்ததைக் காட்டுகின்றது. மேலும் பாண்டியனுடைய இத்துறைமுகத்தில் சங்கும் முத்தும் நிறைந்திருந்ததை*

*வினைநவில் யானை விறற்போர் பாண்டியன்*

*புகழ்மலி சிறப்பிற் கொற்கை முன்றுறை*

*அவிர்கதிர் முத்தமொடு வலம்புரி கொரிந்து*[117]

*என்று அகம் கூறுகின்றது.*

*பரதவர் முத்துக்குளிப்பில் ஈடுபட்டதை அகம்*

*இலங்கிரும் பரப்பின் எறிசுறா நீக்கி*

*வலம்புரி மூழ்கிய வான்திமில் பரதவர்*
*ஒலிதலைப் பணிலம் ஆர்ப்பக் கல்லெனக்*
*கலிகெழு கொற்கை எதிர்கொள இழிதரும்*[118]

*"கிரேக்க அறிஞர் பிளைனி, "கொற்கை பாண்டியனுக்குரியது. அங்கு முத்துக்குளிக்குமிடம் பலவுள்ளன. அவற்றில் முத்துக்குளிப்பவர்கள் சிறையிலிடப்பட்ட குற்றவாளிகள்" என்று கூறியுள்ளார். மேலும், "கிரேக்கர்கள் தென்னகத்தை முத்தினைப் பெறுமிடமாகவே கருதினர். உரோமாபுரி மகளிர் முத்தினை ஆடைகளின் அருகுகளிலும், செருப்பிலும் வைத்துத் தைத்துக் கொண்டனர். கையசு என்னும் பேரரசனின் மனைவி பௌவீனா என்பவள் நான்கு கோடி பொன் மதிப்புள்ள இரத்தினங்களாலும் முத்துக்களாலும் தன்னை அழகு செய்து கொண்டாள்"*[119] *அன்று பிளைனி கூறுகின்றார். இவற்றை அ.தட்சிணாமூர்த்தி கூறியுள்ளதில் இருந்து, "கொற்கையிலிருந்து முத்து அதிகளவு ஏற்றுமதியானதையும்; அம்முத்து மிகச் சிறந்ததாக இருந்ததையும் அறியமுடிகின்றது".*

### *4.11.4 காவிரிப்பூம்பட்டினம்*

*சோழ நாட்டின் துறைமுகமான காவிரிப் பூம்பட்டினம் எவ்வாறு அழைக்கப்பட்டது என்பதையும் அது வணிகத்திற்கு உதவிய விதம் பற்றியும் அறியலாம்.*

**வேறு பெயர்கள்**

*காவிரிப்பூம்பட்டினத்திற்குப் "புகார்" என்றும்; 'பூம்புகார்' என்றும் பெயர்கள் உள்ளன. 'காகந்தி' என்றும்; 'சம்பாபதி' என்றும் அழைக்கப்படுகின்றது. மிகப்பழமையான புத்த ஜாதக கதைகளிலே அகித்தி ஜாதகத்தில் இந்தப் பட்டினம் 'டமிள நாட்டு கவீரப்பட்டணம்' என்று கூறப்படுகின்றது. பெரிபுளூஸ் என்னும் கிரேக்க நூலாசிரியர் இதனைக் 'கமரர் என்று கூறுகிறார்' தாலமி என்னும் யவனர் இப்பட்டினத்தை கபேரிங் எம்போரியஸ்*[120] *என்றும் எழுதியிருக்கின்றார்.*

***நுழைவாயில்:***

*ஈழம் (இலங்கை), சாவகம் (ஜாவா முதலிய கிழக்கிந்தியத் தீவுகள்),*

காழகம் (பர்மா), கடாரம் (மலேயோ) முதலிய நாடுகளுக்கு பொருட்களை ஏற்றுமதி செய்யவும்; அவற்றிலிருந்து பொருட்களை இறக்குமதி செய்யவும் புகார் பெருந்துணை புரிந்தது.

**இருப்பிடம்:**

காவிரிப்பூம்பட்டினம் சீர்காழிக்கத் தென்கிழக்கே ஒன்பது மைல் தூரத்திலே ஆறு கடலில் கலக்கிற புகர் முகத்திலே இருந்தது. அப்பட்டினம் தற்போது சிறு கிராமமாகக் காட்சியளிக்கிறது. காவிரி ஆற்றின் புகர் முகத்தில் அமைந்திருந்தபடியால் இப்பட்டினத்திற்குப் புகார்ப்பட்டினம் என்றும்; ‘புகார்’ என்றும்; ‘பூம்புகார்’ என்றும் பெயர்கள் அமைந்தன.

**புகார்த் துறைமுகம்:**

மணல் பரந்த கடற்கரை ‘நெய்தலங்கானல்’ என்று பெயர் பெற்றிருந்தது. நெய்தலங்கானலுக்கு மேற்கே காவிரிப்பூம்பட்டினம் இருந்தது இது மருவூர்ப்பாக்கம், பட்டினப்பாக்கம் என்று இரு பகுதிகளாகப் பிரிந்திருந்தது. அவ்றறின் நடுவே ஒரு பெரிய தோட்டம் இருந்தது. இதில் பகல் வேளையில் பண்டங்கள் விற்கப்பட்டன. ஆகவே இது நாளங்காடி எனப்பட்டது.

காவிரிப்பூம்பட்டினத்தின் மருவூர்ப் பாக்கத்துத் தெற்கே காவிரி ஆறு கடலில் கலக்கிற புகர் முகத்திலே பூம்புகார்த் துறைமுகம். இதன் கோட்டை வாயில் உயரமாகவும் மேற்புறம் மகர உருவம் உள்ள சிற்பம் அமைந்ததாகவும் உள்ளது என்பதை பரணர் அகநானூற்றில்

‘மகர நெற்றி பொன்றோய்ப் புரிசை
சிகரந் தோன்றாச் சேணுயர் நல்லில்
புகாஅர் நன்னாடு’[121]

என்று கூறுவதன் வழி அதன் தோற்றத்தை அறிய முடிகின்றது.

**கப்பலின் தோற்றம்:**

புகார்த் துறைமுகத்தில் வந்து தங்கிய நாவாய்கள் கம்பங்களில் கட்டப்பட்ட யானைகள் அசைந்து கொண்டிருப்பது போல துறைமுகத்தில் அசைந்து கொண்டிருந்தன. இதனை கடியலூர் உருத்திரங்கண்ணனார்.

*'வெளில் இளக்கும் களிறு போலத்*
*தீம்புகார்த் திரை முன் நுரைத்*
*தூங்கு நாவாய்த் துவன் றிருக்கை*
*மிசைக் கூம்பின் அசைக் கொடியும்'*[122]

*என்று பட்டினப் பாலையில் கூறுகிறார்.*

***பண்டக சாலை:***

*மருவூர்ப்பாகத்தின் தெற்கே ஆற்றங்கரையிலே, துறைமுகத்தின் அருகிலே பண்டக சாலை இருந்தது. அங்கு ஏற்றுமதிப்பண்டங்களான மிளகு மூட்டைகள், மணி, பொன், குடமலை ஆரம் அகில்; தென்கடல் முத்து; கங்கை மற்ம் காவிரியில் கிடைக்கும் பொருட்களும் குவிந்து கிடந்தன அது மட்டுமின்றி ஈழத்துணவுப் பொருட்கள், காழகத்துப் பொருட்கள் மற்றும் நீர்வழி வந்த குதிரைகள் என இறக்குமதிப் பொருட்களும் குவிந்து கிடந்தன*[123] *என்று பட்டினப்பாலை கூறுகின்றது.*

*"ஏற்றுமதி, இறக்குமதிப் பண்டங்களுக்குச் சோழ மன்னனுடைய புலி அடையாளம் பொறிக்கப்பட்டு சுங்கம் வசூலிக்கப்பட்டது*[124]*" மேலும் சுங்கம் வாங்குவோர் நள்ளிரவிலே காவிரியாற்று வெள்ளம் சூழ்ந்த மணல் மேட்டிலே உறங்குவார்கள் அவர்கள் உறங்கும்போது கூட தங்கள் கடமையில் கண்ணும் கருத்துமாயிருப்பர். அரசனுடைய பண்டகசாலைத் தெருவில் குவிந்திருக்கும் அப்பண்டங்களை பிறர் கவராமல் பாதுகாப்பதிலே அவர்கள் வல்லவர்கள். அவர்கள் கதிரவன் தேரிற்பூட்டிய குதிரைகள் போல அயராது சுற்றி வருவார்கள். சளைக்காமல் வாங்க வேண்டிய சுங்கங்களை வாங்கிக் கொண்டே இருப்பார்கள் என்பதை*

*மாஅகாவிரி மணங்கூட்டும்*
*தூஉவெக்கர்த் துயில் மடிந்து*
*வாலிணர் மடற்றாழை*
*வேலாழி வியன்தெருவின்*
*நல்லிறைவன் பொருள்காக்கும்*
*தொல்லிசைத் தொழில் மாக்கள்*
*காய்சினத்த கதிர்ச்செல்வன்*

தேர்பூண்ட மாஅபோல
வைகல்தொறும் அசைவின்றி[125]

என்று பட்டினப்பாலை கூறுகின்றது.

**புகாரத் திருவிழா**

புகார் வணிகத்திற்கு சிறப்பு பெற்று விளங்கியதனால் அது எப்போதும் திருவிழா நகரம் போல் காட்சியளித்தது. திருவிழாவில் மக்கள் குழுமியது போல் புகாரில் கூடியிருந்தனர்.

"சாறயர் மூதூர் சென்றுதொக் காங்கு
மொழிபல பெருகிய பழிதீர் தேஎத்துப்
புலம்பெயர் மாக்கள் கலந்தினி துறையும்
முட்டாச் சிறப்பிற் பட்டினம்"[126]

காவிரி கடலோடு கலக்குமிடத்தில் புகார் அமைந்திருப்பதால் அதன்கண் பெருங்கப்பல்கள் வெளிநாட்டிலிருந்து பொருட்களை கொண்டு வந்து இறக்கின. அக்கப்பலின் பாய்கள் விரித்தபடியே இருந்ததை

"கூம்பொடு
மீப்பாய் களையாது மிசைப்பரம் தோண்டாது
இடைப்புலப் பெருவழிச் சொரியும்
கடற்பஃறா ரத்த நாடுகிழ வோயே"[127]

என்கிறது.

**புகாரின் சிறப்பு**

மதுரை, "தூங்கா நகரமாக, இருப்பது போல அன்று புகார்" தூங்கா துறைமுகமாக விளங்கியது எனலாம். இதற்கு புகாரில் ஏற்றுமதியும் இறக்குமதியும் இடையறாது நிகழ்ந்தது என்பதை, "மலையில் பெய்த நீர் கடலில் கலப்பது போலவும், வான்முகந்த நீர் மலையில் பொழிவது போலவும்; பொருட்கள் நீரிலிருந்து நிலத்திற்கு இறங்குவது போலவும், நிலத்தில் இருந்து கலத்தில் ஏற்றுவதுமாய் இருந்தன"[128] என்று பட்டினப்பாலை கூறுவதன் வழி அறியலாம். மேலும் பூம்புகாரின் தெருக்களிலே பல செல்வங்கள் குவிந்து கிடக்கின்றன. சூரியனின் சூடான கதிர்கள் நுழைய முடியாதபடி நிழல்தந்து கொண்டிருக்கும் வளமும்

செழுமையும் நிறைந்த பூம்புகார் நகரம் என்றும் புகழ்மணம் மாறாதது தேவர்களால் காக்கப்பட்டு வருவதாலே இங்கே வேற்றுநாடுகளிலிருந்து கடல்வழியாகக் கொண்டுவரப்பட்ட குதிரைகளும்; வண்டிகளில் ஏற்றிப்பக்கத்து ஊர்களிலிருந்து வந்த கருமிளகு மூட்டைகளும் இருந்தன. மேலும்மேரு மலையின் சந்தனம், கில்; தென்கடலின் முத்து, கீழ்க்கடலில் விளைந்த பவளம் மடடுமல்லாது கங்கை, காவிரி கரையிலிருந்து வந்த பொருட்களும்; கடாரத்திலிருந்து வந்த நுகர் பொருட்களும் மற்றும் சீனம், யவனம் முதலிய பல நாடுகளில் இருந்து வந்த பல வகை வண்ணங்களும்; இலங்கைத்தீவிலே உண்டான உணவுப் பொட்களும் ஏராளமாக குவிந்து கிடக்கின்றன. இதனைத்தான்

செல்கதிர் நுழையாச் செழுநகர் வரைப்பின்
செல்லா நல்லிசை அமரர் காப்பின்
நீருன் வந்த நிமிர்பரிப் புரவியும்
காலின் வந்த கருங்கறி மூடையும்
வடமலைப் பிறந்த மணியும், பொன்னும்
குடமலைப் பிறந்த ஆரமும், அகிலும்
தென்கடல் முத்துங் குணகடல் துகிரும்
கங்கை வாரியும் காவிரிப் பயனம்
ஈழத் துணவும் காழகத் தாக்கவும்
அரியவும் பெரியவும் நெரிய ஈண்டு
வனந்தலை மயங்கிய நனந்தலை மறுகின்[129]

என்கிற பாடல்வரிகள் எடுத்துக் காட்டுகின்றன. இந்நகரத்தைப் பற்றிக் கி.பி.இரண்டாம் நூற்றாண்டில் இங்கு வந்த தாலமி, "காவிரிப்பூம்பட்டினம் ஒரு வணிக முக்கியத்துவம் வாய்ந்த நகரமாகத் திகழ்ந்தது"[130] என்று கூறுவதை அ.தெட்சிணாமூர்த்தி அவர்கள் கூறுவதிலிருந்து இதன் சிறப்பை அறிய முடிகின்றது.

புகாரின் சிறப்பை அங்குக்குவிந்து கிடந்த பொருட்களின் சிறப்பிலிருந்து அறியலாம். மேலும் பெரும் பொருட்களை சேமித்து வைக்க விசாலமான கிடங்குகள் இருந்தன. அங்கேயே சுங்கத் தீர்வைகள்

செய்ப்பட்டன என்ற செய்தியும் “தற்போதைய காலகட்டத்தில் பெரிய துறைமுகங்களில் அறிமுகம் செய்யப்பட்ட ஒற்றைச் சாளர முறையை ( Single window system) நினைவுக்குக் கொண்டு வருகிறது”[131] என்கிறார் நரசய்யா.

**புகார்–மிகப்பெரிய துறைமுகம்:**

புகார்த் துறைமுகத்தில், “கூம்புடனே மேலே விரிக்கப்பட்ட பாயை இறக்காமலும் கப்பலின சுமையைக் குறைக்காமலும் நதியின் முகத்துவாரத்தில் புகுந்த பெரிய கப்பல்கள்[132] என்று கூறுவதிலிருந்து இதன் சிறப்பை அறிய முடிகின்றது. அதாவது, கப்பல்கள் சரக்குகளுடன் வரும்போது பளுவாக உள்ளதால் ஆழமாகவும் மிதக்கும். வேகம் அதிகமாகவும் இருக்கும் அவற்றைச் சுலபமாய் கட்டுப்படுத்த முடியாது. இன்றைய துறைமுகங்களில் கூட வேகத்தைக் கட்டுப்படுத்தியே கப்பல்களைத் துறைமுகத்திற்குள் “டக்குகளின்” உதவியுடன் கொண்டு வருகின்றனர். ஆனால் அன்றைய கால கட்டத்திலேயே பாய்களைத் தளர்த்தாமலேயே நுழைய முடிந்ததெனின் அத்துறைமுகங்கள் நல்ல ஆழமும் பெரிய பரப்பளவும் கொண்டிருந்திருக்க வேண்டும். ஆதலால் “புகார் மிகப்பெரியத்துறை முகம் தான்” என்பதில் ஐயமில்லை”[133] என்கிறார் நரசய்யா.

## *4.12 வணிகக்குறி* (**Trade Mark**)

உற்பத்தி செய்வோர் அல்லது வணிகர் தம் (சரக்கை) பொருளை அதைப் போன்ற பிற பொருட்களிலிருந்து வேறுபடுத்திக் காட்டுவதற்கெனப் பயன்படுத்தும் குறி, ‘வணிகக்குறி’ எனப்படும். இது பதிவு செய்யப்பட்டிருத்தல் வேண்டும். அவ்வாறு பதிவு செய்யப்பட்ட குறியைத் தாம் மட்டும் பயன்படுத்த அவர்கள் உரிமை பெறுகிறார்கள். இது கி.பி.1958ல் தான் சட்டமாக்கப்பட்டது. ஆனால் இது சங்க காலத்திலேயே பின்பற்றபட்டு வந்ததைப் பட்டினப்பாலையில்

‘புலிபொறித்துப் புறம்போக்கி’[134]

புகார்த் துறைமுகத்திலிருந்து ஏற்றுமதி செய்யப்பட்ட பொருட்கள் சோழனின் அடையாளச் சின்னமான ‘புலி’ பொறிக்கப்பட்ட பின்னரே

வெளியில் அனுப்பப்பட்டது.

வணிகக் குறியானது 'பொருட்களின் அடையாளம் காட்டும் குறி, அதன் பெயர், கையொப்பம் தெளிவான அடையாளம்' படம் ஆகியவற்றில் ஏதாவதொன்றிருக்க வேண்டும்.[135] எ.கா.மீன், புலி, வில்

**வணிக அளவைகள்:**

அளவைகள் என்பன அளத்தற்குரிய மிகச்சிறிய அளவுகளிலிருந்து பெரியது வரை உள்ள அளவுகளாகும்.

'எண்' என்னுஞ் சொல்லைத் தமிழர் பெயர்ச் சொல்லாகவும் வினைச்சொல்லாகவும் ஆண்டனர். எண்ணுவதற்கு இன்றைய காலத்தில் மணிகளைப் பயன்படுத்துகின்றனர். ஆனால் 'அன்று கழங்குகளைக் கொண்டு அவர்கள் எண்ணினர்'

சங்கத் தமிழர்களுக்கு ஒன்றிலிருந்து ஆயிரம் வரை உள்ள எண்களை எண்ணத்தெரியும். ஆயிரத்திற்குமேற்பட்ட எண்களை ஆயிரமாயிரமாக எண்ணினர் என்பதை தொல்காப்பியத்தில் தொள்ளாயிரம் என்ற சொல்லின் வரலாறு; ஆயிரம் என்பதோடு பிற சொற்கள் எவ்வாறு புணர்கின்றன; நூறாயிரம் என்னும் சொல் வரலாறு ஆகியவற்றிற்கு தொல்காப்பியர் விளக்கம் தந்துள்ளார். இதற்கு மேல் உள்ள எண்களைக் குறிக்க 'வெள்ளம்', 'ஆம்பல்', 'தாமரை' ஆகிய சொற்களைப் பயன்படுத்தி இருக்கின்றனர். தமிழர் சுழியத்தை 'பாழ்' என்றனர்.

சங்க த் தமிழர்கள் நாழி, ஆழாக்கு பதக்கு அம்பணம் (மரக்கால்) ஆகியவற்றினைக் கொண்டு அளந்ததை

'அம்பண வளவை விரிந்துறை போக்கிய' (பரி, 3:77)

என்ற அடியும்

'உண்பது நாழி' (புறம் 189)

என்ற அடியும் தெரிவிக்கின்றது.

பொன்னை 'கா' என்றனர். மேலும் 'கூப்பிடு' என்றும் ஒரு தூரம்; ஒருவனை இயற்பாக விளிக்கும் போது அவ்விளி எத்தனைத் தூரம்

கேட்குமோ அது ஒரு கூப்பிடு ஆகும். இவற்றிலிருந்து அக்கால வணிகர்கள் உள்நாட்டில் பண்டமாற்றுமுறையில் வணிகம் செய்தாலும் அதை அளக்க அம்பணம் போன்ற அளவைகளும்; வெளிநாட்டில் தங்கக்காசுகளைப் பயன்படுத்தியிருக்க வாய்ப்புண்டு என்பதையும் அறிய முடிகின்றது. மேலும் எண்களையும் அறிந்திருந்ததைக் காண முடிகின்றது.

### 4.14 வணிகர் செலுத்திய வரி:

நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்கு காரணம் தொழில் வளர்ச்சியும் அதன் மூலம் கிடைக்கும் வருவாயாகும். அரசின் வருவாய்க்கு மூலாதரமாக இருந்தது. உழவும் வணிகமும் ஆகும். வணிகர் செலுத்திய வரி ‘உலகு’ எனப்பட்டது.

**உல்கு:**

உல்கு என்றால் சுங்கப்பொருள் ஆகும். சுங்கப்பொருள் என்பது ஒரு நாட்டின் பொருள் மற்றொரு நாட்டிற்குள் புகும்போது அந்நாட்டின் மன்னர்களால் வசூலிக்கப்படும் வரியாகும். உல்கு வரி வசூலித்ததையும் அவ்வழிகளில் விற்படையேந்திய பாதுகாப்பு வீரர்கள் நின்றதையும் பெரும் பாணாற்றுப்படை கூறுகின்றது. இதனை உருத்திரங்கண்ணனார்.

உல்குடைப் பெருவழி கவலை காக்கும்[136]

என்றார்.

மேலும் இவரே பட்டினப்பாலையில் வெள்ளிய பூங்கொத்தையும் மடலையுமுடைய தாழை பூத்திருக்கும் கடற்கரையின்கண் அகன்ற தெரு உள்ளது. கடற்கரையின் வழியே வேற்றுநாட்டிற்கு பொருள் கொண்டு செல்வோரும் இந்நாட்டிற்கு (காவிரிபூம்பட்டினத்திற்கு) பொருள் கொண்டு வருவோரும் சுங்கம் செலுத்த வேண்டும். அவ்வரி நல்லரசனின் ஆட்சிக்கு உதவுகிறது. எனவே பொருள் கொள்ளையிடப் படாமலிருக்கவும்; அதற்கு உரிய வரியை (சுங்க) கொள்வோர் சூரியனைப் போன்று இரவுபகல் பாராமல் நாள்தோறும் வசூலித்தன என்பதை

‘வேலாழி வியன்தெருவின்
நல்லிறைவன் தொழில் மாக்கள்

*காய்சினத்த கதிர்ச் செல்வன்*
*தேர்பூண்ட மாஅபோல*
*வைகல்தொறும் அசைவின்றி*
*உல்கு செயக் குறைபடாது'*[137]

*என்ற அடிகளில் கூறியுள்ளார். இதனை, 'சுங்கம் கொள்வோர் இறக்குமதி, ஏற்றுமதி பொருட்கள் துறைமுகத்திற்கு வரும்போதும் நீங்கும்போதும் சுறுசுறுப்பாக சுங்கம் விதித்து வசூலித்தனர்' என்கிறார் டாக்டர் ந.சுப்ரமணியன்*[138].

*சிலப்பதிகாரம் 'வாரியக்கணக்கதிகாரிக்கு ஆயக்கணக்கர்' என்று கூறுகிறது. 'ஆயம்' என்றால் 'சுங்கம்' என்று பொருள். 'ஆயக்கணக்கர்' என்பவர் சுங்கவரியைக் கணக்கு வைப்பவராவார்.*

*உள்நாட்டு வணிகர்கள் இடம்விட்டு இடம் பெயர்பவர்கள் ஆதலால் அவர்களிடமிருந்து ஆயம் வசூலிப்பவர்கள் சாலைகளிலும், ஓடத்துறைகளிலும், சந்தைகளிலும், வரி வசூலித்திருக்க வேண்டும் மேலும் உள்நாட்டு வணிகத்தில் பண்டமாற்று முறையே வழக்கில் இருந்ததனால், சிலம்பில் கூறப்படும் கூற்று, 'ஆயர் குலத்தார் தமது மரபுப்படி முன்பே நியமித்துக் கொண்ட நாளில் அரண்மனைக்குத் தமது வரியை பால், தயிர் முதலியவற்றை பண்டங்களாகவே கொணர்ந்து கொடுத்தனர்' என்பதைத் தெரிவிக்கின்றது.*

***நாணயங்கள்***

*காசு என்ற நாணயம் இருந்தது. அது ஒரு வேப்பம்பழத்தின் அளவிலிருந்தது. அக்காசுகளை இன்றைய காலத்தில் மகளிர் அணியும் 'காசுமாலை' போன்று அன்றும் அணிந்திருந்தனர் என்பது குறுந்தொகை வழி*

*'வேப்ப ஒண்பழம்*
*புதுநாண் நுழைப்பான் நுதிமாண் வள்ருகிர்*
*பொலங்கல ஒருகா சேய்க்கும்' (குறுந். 67: 2-4)*

*அறியலாம்.*

*'வெள்ளி வெண்கலத் தூட்டலன்றி' (புறம். 390:18)*

என்ற வரியில் வெள்ளி கலத்தில் விருந்தினர்க்கு உணவளித்ததைக் குறிப்பிடுவதனால் 'தங்கம், வெள்ளி' இரண்டையும் பயன்படுத்தி ஆனால் வரி செலுத்தவோ, பண்டத்திற்கோ கொடுக்கவில்லை என்பதை அறியமுடிகின்றது.

### 4.15 வணிகரின் போக்குவரத்து சாதனம்

#### நிலவணிகரின் வாகனம்

உள்நாட்டு வணிகம் அதிகம் நிலவணிகமாக இருந்தது. உள்நாட்டு வணிகம் பண்டமாற்று முறையில் நடைபெற்றது. இதில் உப்பே முதன்மையாக இருந்துள்ள இவ்வுப்பு வணிகம் செய்தவர்கள் 'உமணர்கள்' எனப்பட்டனர். இவர்களின் வாகனமாக எருது, கழுதை, குதிரை, கோவேறு கழுதை ஆகியவை பயன்பட்டன.

நில வணிகம் செய்யும் உப்பு வணிகர் தம் பாதுகாப்பு கருதி எப்போதுங் கூட்டமாகவே சென்றனர். அக்கூட்டத்திற்கு 'சாத்து' என்று பெயர்.

வலிமை வாய்ந்த தலைவனை தலைமை ஏற்றுக்கொண்டு சென்றனர் என்பதை கலித்தொகை

நல்லெழில் மார்பனைச் சார்ந்து[139]

என்று கூறுகின்றது. 'சாத்து' என்ற பெயர் 'சார்தல்' என்று பொருள் கூறி அதற்குச் 'சேர்தல்', 'கலத்தல்', 'கூடுதல்' என்று பொருள் கூறுகின்றார். ஞா.தேவநேயப்பாவாணர்.[140] நன்னூலில் மயிலை நாதர் சாத்து சாத்தன் என்பதற்கு, வணிகர் கூட்டத் தலைவன் என்று பொருள் தருகின்றார்.[141] சாத்தர் வெளிநாடு சென்று வரும் கூட்டத்தார் என்று

'அதர்கெடுத் தவறிய சாத்தரொ டாங்கு'[142]

அகம் பொருள் தருகின்றது. சாத்தர் தம் போக்குவரத்துச் சாதனமாக முதலில் எருதுகளைப் பூட்டிய கட்டை வண்டிகளில் உப்பினைக் கொண்டு சென்றதைப் புறநானூற்றுப் பாடல்

'உப்பெய் சாகாட்டு உமணர் காட்ட'[143]

என்று கூறுவதன் மூலம் அறியலாம். இதனை இராசமாணிக்கனாரும்

கூறியுள்ளார்.[144]

நிலவாணிகத்திற்குக் கழுதை சிறந்த வாகனமாக பயன்பட்டது. நீண்ட கழுத்தினையும் குறுகிய காலினையும் உடைய ஆண் கழுதையின் முதுகில் நிறைய பொருட்கள் ஏற்றிச் செய்வதை வழக்கமாக கொண்டிருந்தனர் என்பதை அகநானூறு

'நெடுஞ்செவிக் கழுதைக் குறுங்கால் ஏற்றை
புறம்நிறை பண்டத்து பொறைஅசா அக்கரை'[145]

எனக் கூறுகின்ற சாத்தர் தம் வணிகச் சரக்குகளை ஏற்றிச் செல்ல முதலில் பொதியெருதுகளையும் பின்னர் மேலையாசிரியாவில் இருந்து கழுதை, குதிரை, ஒட்டகம், கோவேறுகழுதை ஆகியவற்றை படிப்படியாக கொண்டு வந்து பழக்கினர். 'கழுதையின் பிறப்பிடம் வடகிழக்கு ஆப்பிரிக்காவின் உள்ள எத்தியோப்பியா, சோமாளியா ; மேலையாசியாவின் சிரியா பாரசீகம், பலுசிஸ்தானம்; நடு ஆசியாவின் திபெத், மங்கோலியர்' ஆகியவை ஆகும்[146] என்று ஞா.தேவநேயப்பாவாணர் கூறுவதிலிருந்து வணிகம் இறக்குமதியை ஊக்குவித்ததை அறிய முடிகின்றது.

வளைந்த பலா மரத்தினடியில் தொங்கும் சிறிய சுளைகளுடைய பெரிய பழத்தைப்போல முதுகின் இருபுறமும் ஒத்த கனமான மிளகுச் சுமையைத் தாங்கிச் சென்றது. அக்கழுதையின் முதுகு வடு அழுந்திய வலியினையும், காது எடுப்பாகவும் உள்ளது. அதன் மீது ஏறி வணிகர் கூட்டமாகச் சென்றனர் என்பதைப் பெரும்பாணாற்றுப்படை

தடவுநிலைப் பலவின் முழுமுதற் கொண்ட
சிறுசுனைப் பெரும்பழங் கடுப்ப நெரியற்
புணர்ப்பொறை தாங்கிய வடுவாழ் நோன்புறத்
தணர்ச் செவி கழுதைச் சாத்தொடு வழங்கும்[147]

கூறுவதிலிருந்து கழுதை உமணர்க்கு மட்டுமல்ல வணிகர்க்கும் சிறந்த போக்குவரத்துச் சாதனமாகப் பயன்பட்டது என்பதை அறிய முடிகின்றது.

**நீர் வணிக வாகனம்:**

நீர் வணிகமே உள்நாட்டு, வெளிநாட்டு வணிகத்திற்கு உதவியது.

உள்நாட்டு வணிகத்தில் ஆறுகள், கடற்கரைக்குப் பொருட்களை எடுத்துச் செல்லப் பயன்பட்டது. ‘பலகை, கட்டுமரம், மிதவை, புணை, தெப்பம் ஆகியவை மரங்களைக் கட்டி மிதக்கச் செய்த அமைப்பாக இருந்தது. பரி, ஓடம், திமில், படகு, அம்பி, தோணி ஆகிய சிறுகலங்கள் ஆற்றில் செலுத்தப்பட்டன. வங்கம், நாவாய் போன்றவை நெடுந்தொலைவு செல்ல உதவும் பெரிய கப்பலாகும்’[148] என்று பா.இறையனார் கூறுகின்றார்.

**கப்பலின் சிறப்பு:**

கப்பல் மிகப்பெரியதாக இருந்தது அது அசைந்து புறப்பட்ட போது உலகமே அசைந்து செல்வது போலிருந்தன என்பதும் பலநாள் இரவும் பகலும் செல்லக்கூடிய நீண்ட பயணங்களாக இருந்தன. கப்பலுக்குத் துறைமுகத்தை அறிவிக்க கலங்கரை விளக்கங்களிருந்தன என்பதும் அது மாலுமிக்கு குறித்த இடத்திற்கு கப்பலை செலுத்த உதவியது என்பதனை அகம்

உலகிளர்ந் தன்ன உருகெழு வங்கம்
புலவுத்திரை பெருங்கடல் நீர் இடைப்போழ
இரவும் எல்லையும் அசைவும் இன்றாகி
விரைசெலல் இயற்கை வங்கூழ் ஆட்டக்
கோடு உயர்திணிமணல் அகன்துறை நீகான்
மாட ஒள்ளி மருங்கு அறிந்து ஒய்ய[149]

என்கிறது. இதில் உலகமே நகர்ந்து செல்வது போல கப்பல் அசைந்து சென்றது என்று கூறுவதிலிருந்து ‘பலநூறு மக்கள் பயணம் செய்யக்கூடியதாக இருக்க வேண்டும்’[150] என்கிறார். மா.இராசமாணிக்கனார்.

**4.16 கலங்கரை விளக்கம்:**

ஆங்கிலத்தில் Light house என்றழைப்பர். கடலில் செல்லும் மரக்கலங்களும், கப்பல்களும் வழிதவறிச் சென்றுவிடாது துறைமுகத்திற்கு வருவதற்கு உதவியாக கலங்கரை விளக்கங்கள் கடற்கரையோரங்களில் அமைக்கப்படுகின்றன. நீர்ப்பெயற்றுத்துறையில் சங்க காலத்திலேயே அமைந்திருக்கும் விதம் பற்றிக் கடியலூர் உருத்திரங்கண்ணனார்.

வான மூன்றிய மதலை போல

*ஏணி சாத்திய ஏற்றருஞ் சென்னி*
*விண்பொர நிவந்த வேயா மாடத்து*
*இரவின் மாட்டிய இலங்குசுடர் ஞெகிழி*
*உரவுநீ ரழுவத் தோடுகலங் கரையுந்*
*துறை!*[151]

என்று பெரும்பாணாற்றுப்படையில் கூறுகையில், "வானம் விழாதபடி முட்டுக்காலாக ஊன்றி வைத்த பற்றுக்கோல் போல விண்ணைத் தொடும்படி அமைந்த உயரமான கட்டிடம். அதன் மீது ஏணி சாத்தினாலும் ஏறமுடியாத உயரமான உச்சியினை உடையது. தட்டோடிட்டுச் சாந்து வாரப்பட்ட மாடத்தினைக் கொண்டது. அங்குள்ள மற்ற விளக்குகளைவிட அதிக ஒளியினைக் கொடுக்கக் கூடியது. அவ்வொளியானது திசைதப்பிப் பெருங்கடற் பரப்பிலே ஓடாநின்ற மரக்கலங்களை கரைக்கு அழைக்கும் வகையில் உள்ளது" என்கிறார். இக்கலங்கரை விளக்கம் ஓயாது மரக்கலங்களும் நாவாய்களும், கப்பல்களும் வந்து சென்ற வண்ணம் இருந்ததைக் காட்டுகின்றது. இது மேலும் வணிக வளர்ச்சி அதிகமிருந்ததை உறுதிப்படுத்துகின்றது.

### 4.17 வணிகரின் உரிமை:

நாம் செய்ய வேண்டியது "கடமை" ஆகும். நமக்கு கொடுக்கப்பட்டது உரிமை எனப்படும். இது போல் வணிகர்க்கும் கொடுக்கப்பட்டது என்பதை பெரும்பாணாற்றுப்படையில், "வணிகர்கள் மலையிலிருந்து பெறப்படும் பொருள்களான மணி, பொன், சந்தனம்" போன்றவையும்; கடலில் கிடைக்கும் முத்து, பவளம், சங்கு போன்றவைகளையும் மட்டுமல்லாது. வாழும் இடங்களில் கிடைத்தற்கரிய உணவுப்பொருட்களையும் காட்டுவழிகளைக் கடந்து கொண்டு சென்றனர். அக்காட்டுவழியில் ஆறலைக் கள்வர்களின் பொருட்கவர்தலைத் தடுக்க, 'திருந்தியதாக தொடுத்த வினையின் அசைவில்லாத வலிய முயற்சியினை உடையவர் கள்வர்பலர். அவர்கள் அடிமறையும்படி செருப்பை அணிந்திருந்தனர். சட்டை அணிந்திருந்தனர் ஆறலைப் போரில் எய்யும் அம்பின் வலியைத் தொலைத்த மார்பினை உடையவர்கள். மார்பினிடத்தே கச்சினைக்

கட்டியதனுள் வெண்மையான ஒளிரும் கைப்பிடியை உடைய வாளினை செருகியிருந்தார்கள். இறுக்கமான உடையினையும், வலி பொருந்திய தோளினையும் உடையவர்கள். முருகன், அரசுரர்களிடம் போரிட்ட போதிருந்த தோற்றத்தினையும் உடையவர்கள்[152] என்று உருத்திரங்கண்ணனார் கூறுவதிலிருந்து வணிகர்கள் அனைவரும் இத்தோற்றத்தினை உடையவர்கள் என்றோ, மேற்கண்ட தோற்றத்தினை இட்டுக் கொண்டு சென்றார்கள் என்றும் கூற இயலாது. ஆனால் இச்செய்தி, வணிகர்கள் தம் பாதுகாப்புக்குப் படை தாங்கிச் செல்ல உரிமையளிக்கப்பட்டது[153] என்று அ.தெட்சிணாமூர்த்தி அவர்களின் கூற்றை மெய்ப்படுத்தும் வகையில் உள்ளது.

## 4.18 புலவரும் வணிகமும்

சங்க காலப் புலவர்கள் செல்வந்தர்களை எதிர்நோக்கி வாழ்கின்ற நிலையிருந்தது. அவற்றிற்கு அவர்களில் சிலர் வாணிபத்தில் ஈடுபட்டனர் “கூலவாணிகன் சீத்தலைச்சாத்தனார் என்று கூறுவதிலிருந்து தானிய வகைகளை விற்றதையும்; அறுவை வாணிகர் இளவேட்டனார் என்பதிலிருந்து அவர் ஆடை வாணிபம் செய்ததையும்; மதுரை பண்ட வாணிகர் இளநத்தனார் என்பதிலிருந்து அவர் பல சரக்கு வாணிபம் செய்ததையும்; மதுரை பெருங்கொல்லனார், உறையூர் இளம் பொன்வாணிகர் என்ற பெயர்களிலிருந்து அவர்கள் பொன் வாணிபம் செய்ததையும் அறியமுடிகின்றது”[154] இவற்றிலிருந்து சிறந்த வாணிபமான உடைவாணிபம், கூல வாணிபம், பண்ட வாணிபம், பொன் வாணிபம் ஆகியவற்றை செய்து வந்தனர்[155] என்று ஜே.தர்மராஜ் கூறுகின்றார். இதன் மூலம் இவர்கட்கு ‘புலமைவேறு, தொழில்வேறு என்று அமைந்திருந்ததனால் புலவரில் சிலர் வறுமையின்றிருந்தனர்’[156] என்று கு.வெ.பாலசுப்ரமணியன் கூறும் கருத்து ஏற்றுக் கொள்ளத்தக்கதாகும்.

## 4.19 வணிகரும் தமிழ்ப்பெயரும்

வணிகர் சங்க காலத்திலேயே பல நாட்டிற்கு சென்று வந்ததினாலும், பலமொழி பேசும் அயல் நாட்டினர் இங்கு வந்து வணிகம் செய்ததினாலும் அதிக மொழிகளை கேட்கவும் கற்றுக்கொள்ளவும் செய்தனர் என்பதைச்

சங்க இலக்கியக் குறிப்புகள் வழி அறிய முடிகின்றது. 'அனைத்து மொழிகளிலும் உள்ள வார்த்தைகளைக் கேட்டபின் தம்மொழி ஒன்றிலேயே 'ழ' கரம் சிறப்பாக உள்ளதைக் கண்டு 'தமிழ்' என தம் மொழிக்குப் பெயரிட்டிருக்கலாம்[157] என்கிறார் தேவநேயப்பாவாணர் இதில் அதற்கான குறிப்புகளேதுமில்லை என்றே கூறலாம்.

### 4.20 வணிகர்களின் நுண்ணறிவு

கடல் வணிகம் செய்வதற்குப் பண்டைத் தமிழர்கள் மரக்கலங்களைப் பயன்படுத்தினர். உலகம் கிளர்ந்தது போன்று உருகெழுவங்கங்களைச் செலுத்துவதற்குப் பாய்மரங்களையும் துடுப்புகளையும் பயன்படுத்தினர். இவர்களுக்குப் பருவக்காற்று பற்றிய அறிவும் பெற்றிருந்தனர். வணிகர் காற்று வீசும் திசையறிந்து மரக்கலங்களைச் செலுத்தும் திறன் உடையோராய் விளங்கினர் என்பதை

நளியிரு முந்நீர் நாவாயோட்டி
வளி தொழில் ஆண்ட உரவோன் மருக[157]

புறம் குறிப்பிடுவதன் மூலம் அறியலாம்.

எப்பொருள் எங்கு கிடைக்குமென்று இன்று தொலைக்காட்சிகளிலும், வலைத்தளத்திலும், வானொலியிலும் விளம்பரம் செய்கிறோம். ஆனால் இவைகள் கண்டுபிடிக்கப்படாத சங்க காலத்திலேயே அவ்வணிகர்கள் எளிய வழியொன்றை கடைப்பிடித்தனர் "ஒவ்வொரு கடைகாரரும் தம் கடை எதிரே ஒரு கொடி பறக்கவிட்டு அக்கொடி மீது அக்கடையில் விற்கப்படும் பொருள்களின் பெயர்களைப் பொறித்து வைத்தனர்" என்று கூறுவதிலிருந்து அவர்களின் நுண்ணறிவை அறிய முடிகின்றது.

### 4.21 வணிகரின் நீதி:

நீதி என்பது எப்படியும் சாயாமல் தராசுக்கோல் முள் போன்றிருத்தல், வணிகர்கள் வேளாளருடைய நெடிய நுகத்தில் தைக்கப்பட்ட பகலாணி போல நடுவுநிலை நின்று வணிகம் செய்தனர்.

வாணிகம் செய்வார்க்கு வாணிகம் பேணிப்

பிறவும் தம்போற் செயின் – குறள் 120

தம் பொருளையும் பிறர் பொருளையும் சமமாகக் கருதினர். தாம் வாங்கும்போது தாம் கொடுக்கும் பொருளுக்கு மிகையாக வாங்காமலும்; தாம் கொடுக்கும்போது வாங்கும் பொருளுக்குக் குறையக்கொடாமலும் வணிகம் செய்தனர். தாம் விற்கும் பல பண்டங்கட்கு விலையை வெளிப்படையாகக் கூறி பெற்றனர் என்பதை பட்டினப்பாலை

நடுநுகத்து பகல்போல
நடுவு நின்ற நல்நெஞ்சினோர்
வடுவஞ்சி வாய் மொழிந்து
தமவும் பிறவும் ஒப்பநாடி
கொள்வதூஉ மிகை கொளாது
கொடுப்பதூஉங் குறையாது
பல்பண்டம் பகர்ந்துவீசும்
தொல்கொண்டித்து வன்றிருக்கை[158]

என்று கூறுகின்றது. இச்செய்யுளில் கூறப்படும், “நடுவுநிற்றல், நன்னெஞ்சுடைமை”, ‘வடுவஞ்சி வாய்மொழிதல்’, ‘ஒப்ப நாடுதல்’, ‘மிகை கொளாமை’, ‘குறைகொடாமை’ ஆகியவை எந்நாட்டு வணிகரும் எக்காலத்தும் கைக்கொள்ள வேண்டிய ‘வணிகநீதி’[159] என்று ஏ.வீரப்பன் கூறுவதிலிருந்து உலக வணிகர்களுக்கே வழிகாட்டியாய் தமிழ் வணிகர்கள் இருந்ததைக் காட்டுகின்றது.

### 4.22. வணிகர் குடிசிறப்பு:

ஒருவரின் குடிச்சிறப்பு என்பது அவருடைய நற்பண்புகளின் வெளிப்பாடாகும். வணிகர் ‘வேளாளரின் நுகத்தினடியில் நடுவிலிடப்பட்ட பகலாணி போல நடுவுநிலை தவறாது. தம் பொருளை பிறர்க்குக் கொடுத்தும்; பிறர் பொருளை தாமும் பெற்றனர். பல பண்டங்களை விற்கும் வணிகர் அவற்றின் உண்மையான விலை கூறி விற்றனர்’[160] என்று பட்டினப்பாலையில் உருத்திரங்கண்ணனார் கூறுவதிலிருந்து அவர்கள் நியாயமானவர்கள். பழம்பொருளினை உடைய செல்வந்தர்களாக இருந்ததை அறியமுடிகின்றது.

வணிகர்கள், மதுரை மாநகரின்கண் விழாவினைக் காண காலாட்படை வீரர்கள் சூழச் சென்றதை மதுரைக் காஞ்சி காட்டுகின்றது.[161] மேலும் இவ்விழாவினைக் கண்ட வணிகரின் வீட்டுமகளிர், 'தெருவெங்கும் மணம் வீசும் படியான புனுகு போன்ற மணப்பொருள்களை உடலெங்கும் பூசியிருந்தனர். பொன்னாலான அணிகலன்களும் சிலம்பும் அணிந்திருந்தனர். பூத்தொழிலாளான வளையலணிந்திருந்தனர். அவர்களுடைய வீட்டிலிருந்து அம்மகளிரின் முகம் நிலவு போன்று தோன்றி மறைந்தது. அவர்களின் ஒருகால் தோன்றி ஒருகால் மறைய நின்று கண்டனர்'[162] என்று மதுரைக்காஞ்சி கூறுகின்றது.

### 4.23 வணிகரின் வளவாழ்வு

'வணிகர்கள் அறநெறியிலிருந்து பிறழாதவர்கள் இல்லறம் செவ்வனே நடத்துபவர்கள். மலைகளின் திரட்சியை கண்டாற்போன்று மருந்துகள் இளைப்பாறிச் செல்லும் தொழில் மாட்சிமை மிகுந்த இல்லத்தில் வாழ்பவர்கள். பல்வேறு பண்டங்கள், உணவுப் பொருட்கள், நிலம், நீர் மற்றும் கடலிடத்து கிடைக்கும் பவளம், முத்து முதலியவற்றை பண்டமாற்றாகப் பெற்று அயல்நாட்டிலிருந்து கொணர்ந்த பண்டங்களை விற்றனர்[163] என்று மதுரைக்காஞ்சி கூறுவதிலிருந்து அவர்கள் மாளிகைகளில் வசித்ததையும் பெருவணிகர் என்பதையும் காட்டுகின்றது.

### வணிகரின் வளமான வாழ்வு

அயல்நாட்டு வணிகம் செய்த வணிகர்கள் "நூலோர் தமக்கோதிய நெறியிற் பிறழாதவர்கள் இல்லறத்தினிற்பவர்கள். மலைகளின் திரட்சியைக் கண்டாற்போன்று பருந்துகள் இளைப்பாறிச் செல்லும் தொழில் மாண்புடைய இல்லத்தைக் கொண்டவர்கள். இவர்கள் மலை, நிலம், நீர் மற்றும் பிற இடங்களினின்றும் வரும் பொருட்களையும் மணிகளையும் விற்பனை செய்தனர்"[164]

என்று மதுரைக் காஞ்சி கூறுவதிலிருந்து இவர்களுடைய இல்லம் உயரமானதும், தொழில்திறம் வாய்ந்த பல அடுக்கு உயரமானதும், தொழில்திறம் வாய்ந்த பல அடுக்குகளையுடையது என்பதும்

புலப்படுகின்றது. மேலும் இவ்வீட்டில் பல்வகை மணிகளும் உணவுப்பொருட்களும் கொட்டிக் கிடைக்கின்றன என்பதால் இவர்கள் அயல்நாட்டு வணிகம் செய்த 'பெருவணிகர்கள்' என்பதும் புலப்படுகின்றது. மேலும் வணிகர்க்கென்று தனித்தெரு இருந்ததையும்; அவர்கள் பெரிய மாளிகைகளில் வாழ்ந்ததையும் குறிப்பிடும் சிலப்பதிகாரம்

மாட மோங்கிய மணல்மலி மறுகில்
பரதர் மலிந்த பல்வேறு தெருவில்
சிலதர் காக்கும் சேணுயர் வரைப்பு[165] என்கிறது.

**வணிகர் மாளிகை**

வெளிநாட்டு வாணிகத்தில் பெரும் பொருள் ஈட்டிய வணிகர்கள் புகார், காஞ்சி முதலான நகரங்களில் வாழ்ந்தனர் என்பதையும்; அவர்களின் மாளிகைகள் சேணுயர் வரைப்பினாகவும்; கூழுடை நல்லில் என்றும் போற்றப்பட்டதைப் பட்டினப்பாலை

"குறுந்தொடை நெடும் படிக்கால்
கொடுந்தண்ணை பஃறகைப்பிற்
புழைவாயிற் போகிடைகழி
மழைதோயும் உயர் மாடம்" (பட்.142 -145) என்கிறது.

**வணிகரின் சிறப்புத் தன்மையும் பாதுகாவலும்**

வணிகரின் பாதுகாப்பு என்று கூறுவதைவிட அவர்களின் சிறப்புத்தன்மை கருதியே இவ்வாறு குமட்டூர்க் கண்ணனார் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனிடம்

...........ஞாலத்து
கூலம் பகர்நர் குடிபுறந் தராஅக் [166]

என்று நிலத்தே விளையும் அவரை, துவரை, வரகு, தினை, சாமை போன்ற எண்வகைக் கூலங்களையும் விளைவித்து விற்பனை செய்யும் வணிகர் குடியைப் பாதுகாத்தல் அரசனது கடமை. அப்போது மழைவளம் குன்றாது பசி நோயறியாது. உன் நாடு சிறக்கும் என்று கூறுகின்றார். இதற்குக் காரணம், 'உழவும் வணிகமும் நாட்டின் இரண்டு கண்களாகப் போற்றப்படுவது தான்'[167] என்று கூறலாம்.மேலும் அ.தெட்சிணாமூர்த்தி

அவர்கள் தன் நூலில், "நாட்டின் இரண்டாவது பெரிய வருவாய்க்கு வாணிகம் வழிவகுத்தலால் அவர்களைப் பாதுகாத்தலைச் சிறப்புக் கடமைகளுள் ஒன்றாக அரசன் கொள்ளல் வேண்டும்" என்கிறார்.

**வணிக மகளிர் தோற்றம்:**

மாளிகையில் வாழ்வதனால் பசிய பூண் அணிந்த அல்குலினையும், பவளம் போன்ற மேனியையும்; மயில் போன்ற சாயலினையும், கிளி போன்ற மொழியினையும் உடையவர்களாக இருந்தனர் என்பதை பட்டினப்பாலை

பாசிழைப் பகட்டல்குல்
தூசுடைத் துகிர் மேனி
மயிலியல் மானோக்கின்
கிளி மாலை மென்சாய லோர்[168]

என்று கூறுகின்றது.

**4.24 மகளிரின் ஆடை அணிகலன், விளையாட்டு ஆடை**

கொன்றையின் அரும்புடைய கிளையிலே பனி மாசு தவழ்வது போன்று மகளிரது அல்குலிலே நுண்ணிய ஆடையானது படர்ந்து கிடந்தது என்பதை

கொன்றை மென்சினைப் பனிதவம் பவைபோற்
பைங்கா ழல்குல் நுண்டுகி னுடங்க[169]

என்ற பெரும்பாணாற்றுப்படை அடிகள் கூறுவதிலிருந்து அவர்கள் விலை உயர்நித ஆடைகள் அணிந்திருந்ததை அறிய முடிகின்றது.

**அணிகலன்:**

'ஆடை பாதி அணிகலன் பாதி' என்பது இன்றைய காலகட்டத்தை மட்டுமின்றி அன்றைய சங்க காலத்திற்கு பொருந்தும் என்பதையும் அவர்களின் செல்வச் செழிப்பையும் எடுத்துக்காட்டுகின்றது. இதனை

'கொடும்பூண் மகளிர்'[170]

என்ற பெரும்பாணாற்றுப் படை வரியில், 'மென்மையான தன் உடலை வருத்தும் படி அணிகலன்கள் அணிந்திருந்ததை உருத்திரங்கண்ணனார்' வெளிப்படுத்துகின்றார்.மேலும் அவ்வணிக மகளிர் மார்பில் பசிய மணிகள்

கோர்த்த வடம் அணிந்திருந்தையும், காலில் பொற்சிலம்பு அணிந்திருந்தையும் பெரும்பாணாற்றுப்படை வெளிப்படுத்துகின்றது. [171]

**விளையாட்டு:**

தன்காற் பொற்சிலம்பொலிக்க வரிப் பந்தாடியதையும்; பொன்கழங்கு வைத்து முத்துப்போன்ற மணற்பரப்பில் கழங்காடியதையும் பெரும்பாணாற்றுப்படை கூறுவதிலிருந்து அவ்வணிக மகளிரின் வளமான வாழ்வு வெளிப்படுகின்றது.[172]

**தொகுப்புரை:**

சங்க இலக்கியப் பாடல்கள் அக்கால வாழ்வியலைச் சித்தரிக்கின்றது. அதனால் நாட்டில் வருவாய்க்கு வழி வகுக்கும் வணிகரின் வாழ்வியலை இவ்வியல் எடுத்துரைக்கின்றது. இவ்வியலால் அறியப்பெறுவன.

குண்டூசி முதல் ஆகாய விமானம் வரை விற்பனை செய்வோரை ‘வணிகர்’ என்றே அழைக்கின்றோம். ஒரு பொருளைத் தனியாக விற்போரை அப்பொருளின் பெயரைக் கூறியே துணிக்கடைக்காரர், பாத்திரக்கடைக்காரர், பொன்வணிகர், அப்பவணிகர், கூலவணிகர் என்றே அழைக்கின்றோம்.

‘உப்பிட்டவரை உள்ளளவும் நினை’ என்பதற்கேற்ப நம் உணவில் உப்பு அவசியமானதொரு பொருளாகும். ‘உப்பு’ சுவை கூட்டவும், உணவை உண்ணவும் பயன்படுகின்றது. இன்று தமிழ்நாட்டில் தூத்துக்குடியில்தான் உப்பளங்கள் அதிக அளவில் உள்ளன. சங்க காலத்தில் மரக்காணம், ஆயத்துறை, வாரியூர், குமரி ஆகிய இடங்களில் உப்பளங்கள் இருந்தன என்கிறார் க.பா.அறவாணன்.

உலக நாகரிகங்களில் முதன்மையான நைல்நதி நாகரிகம் சிறந்து விளங்கியதற்குக் காரணம் அங்குக் கிடைத்த இயற்கையான உப்புவளமே என்கின்றனர். அதேபோல சங்க இலக்கியத்தில் உப்பு வணிகர் பற்றிய குறிப்புகளே அதிகம் உள்ளது. பண்டமாற்று வாணிபமான உள்நாட்டு வணிகத்தில் உப்பு முதன்மையானதாக இருந்தது என்பதில் ஐயமில்லை.

உப்பு வணிகரான 'உமணர்' எருது பூட்டப்பட்ட வண்டியில் குடும்பத்தோடு நெடுந்தொலைவு சென்று வணிகம் செய்தனர். மேலும் உப்பிற்கு பண்ட மாற்றாக எவ்வந்நிலங்களில் கிடைக்கும், மலைத்தேன் பால், தயிர், நெய், நெல், பயிறு, இறைச்சி, மீன் ஆகியவற்றைப் பெற்றனர்.

மேற்குத் திசைப்பகுதியைச் சேர்ந்த நாடுகளான எகிப்து, ரோம் நாட்டு வணிகர்கள் 'யவனர்' எனப்பட்டனர். அவர்கள் ஏற்றுமதி, இறக்குமதி வணிகத்தில் ஈடுபட்டனர். ஏற்றுமதி, இறக்குமதி வணிகத்தில் ஈடுபட்டனர். இன்றைய காலகட்டத்தில் நடைபெறும் பகல்சந்தை, அந்திச்சந்தை போன்று சங்க காலத்திலும் பூம்புகாரில் நாளங்காடி, அல்லங்காடிகள் செயல்பட்டனர். பூம்புகார் நாளங்காடியில் அரபிக்குதிரை முதல் இலங்கை, பர்மா, வடஇந்தியா ஆகியவற்றிலிருந்து வந்திறங்கிய பொருட்கள், நவரத்தினங்கள், மணப்பொருட்கள் என பலநாட்டுப் பொருட்கள் ஓரிடத்தில் நிலம் நெளிய குவிந்து கிடந்தன என்று கூறுவதிலிருந்து பூம்புகார் சிறந்த துறைமுகமாக மட்டுமின்றி மிகப்பெரும் வணிக மையமாக இருந்தது. வணிகச் சிறப்புச் சேர்த்த பூம்புகார் போன்று அல்லங்காடிகள் மதுரைக்கு சிறப்புச் சேர்த்தது.

உள்நாட்டு வணிகத்தில் பண்டமாற்று வணிகமே இருந்தது. பண்டமாற்றாக உப்பிற்கு நெல், தேன், கிழங்கு, மீன், நெய், கள், கரும்பு, அவல், மீன், இறைச்சி, பயறு மான் தசை ஆகியவற்றை கொடுத்தனர். மேலும் தென்னிந்திய வடஇந்திய வணிகத்திற்கு தாமரலிப்தி துறைமுகம் பேருதவியாய் இருந்தது. நிலவழி நடைபெறும் இவ்வணிகத்தில் போக்குவரத்திற்கு எருமை, கழுதை போன்றவைகளே பயன்படுத்தப்பட்டன.

வெளிநாட்டு வணிகம், நீர்வணிகமேயாகும் அதில் பெரும்பாலும் பரி, ஓடம், திமில், படகு, அம்பி, தோணி, வங்கம், நாவாய் ஆகியவை பயன்பட்டன. இவ்வணிகத்தில் முசிறி, கொற்கை, புகார், தொண்டி ஆகியத் துறைமுகங்கள் முக்கியப்பங்கு வகித்தன. ஏற்றுமதியில் முசிறியின் மிளகு, கொற்கையின் முத்து ஆகியவை மிகப்பெரும்பங்கு வகித்தது. மேலும் வடநாட்டு வட்டக்கல், பொதிகையின் சந்தனக்கட்டை, மேருவின்

மாணிக்கம், சாம்புநதம், அகில், கீழ்க்கடல் பவளம் மட்டுமின்றி கடாரம் மற்றும் ஈழத்துப் பொருட்களும் இத்துறைமுகங்களிலிருந்து ஏற்றுமதியாயின. ரோம் நாட்டு ஏற்றுமதியில் மிளகே முதலிடம் பெற்றிருக்கின்றது. மேலும் வாசனைத்திரவியங்கள், தந்தம், துணி ஆகியவையும் ஏற்றுமதி செய்யப்பட்டன. பாபிலோனியாவிற்கு பட்டு ஏற்றுமதியானதையும் அறிய முடிகின்றது.

இறக்குமதியில் அரேபியக்குதிரைகள், பொன் ஆகியவற்றைக் கூறலாம். இன்று சுற்றுலாத் தலமாக மட்டுமே உள்ள மகாபலிபுரத்திலும் மற்றும் முசியிலும் அரேபியக்குதிரைகள் வந்திறங்கியதைச் சங்க இலக்கியம் குறிப்பிடுகின்றது.

உள்நாட்டு வணிகத்தில் பண்டமாற்று வணிகமே இருந்தது. ஆனால் வெளிநாட்டு வணிகத்தில் அதிலும் ரோமர்கள் தங்க நாணயங்கள் பயன்படுத்தியதை ‘கோட்டம், கலியன்புத்தூர், பொள்ளாச்சி, கருவூர், புதுக்கோட்டை ஆகிய இடங்களில் கிடைத்த கி.மு.முதல் நூற்றாண்டின் அகஸ்டஸ், ஸ்ட்ரோபோ கால நாணயங்களே உறுதிப்படுத்துகின்றன’

பொதுவாக வணிகர்கள் நடுவுநிலை தவறாது வணிகம் செய்துள்ளனர். வணிக முத்திரையை அன்றே பயன்படுத்தி உள்ளனர். ‘வல்கு’ எனப்படும் சுங்கவரியை வசூலித்தனர். இதில் உள்நாட்டு வணிகத்தில் பண்டமே வரிப்பொருளாகப் பயன்பட்டது. துறைமுகச்சிறப்பு எனும் போது, சோழர்களின் புகாரில் அன்றே கலங்கரை விளக்கம் இருந்தது. பொருட்களை சேமிக்கும் சேமிப்புக் கிடங்குகள் இருந்தன. மேலும் புகார் மிகப்பெரும் துறைமுகமாகும். ஏனெனில் நதிமுகத்துவாரத்தில் படகுகளின் உதவியின்றி வரும் வகையில் ஆழம், பரப்பளவு நிறைந்ததாக இருந்தது என்று கூறுவதிலிருந்து அறிய முடிகின்றது. சீர்காழிக்குத் தென்கிழக்கே ஒன்பது மைல் தொலைவில் காவிரியானது கடலில் கலக்கிற புகார் முகத்திலே இன்று ஒரு சிறு கிராமமமாக காட்சியளிக்கினற்து.

சேரர்களின் மிகச்சிறந்த துறைமுகமாக விளங்கிய முசிறி கி.பி.1341இல் வெள்ளத்தில் மூழ்கியது. தற்போது, அங்கு கொடுங்களூர் என்ற பெயரில்

கேரளாவின் திரிச்சூர் மாவட்டத்தில் அமைந்துள்ளது. ஆனால் சங்க காலத்தில் தோணிகளும், கப்பல்களும் நிறைந்த அரேபியக்குதிரைகள், தங்கக் கட்டிகள் வந்திறங்கிய வளமான முசிறியாக விளங்கியது. ரோமர்கூட இங்கு காசு ஆலை நிறுவியிருந்ததே முசிறியின் வளத்திற்கு எடுத்துக்காட்டாகும்.

சங்க காலத்தில் பாண்டியர்களின் சிறந்த துறைமுகமாக விளங்கிய கொற்கை முத்துக்குளிப்பில் முதன்மை பெற்றது. கிரேக்களும் ரோமரும் பயன்படுத்திய முத்துக்களிலிருந்தும் ரோம் பேரரசி பௌலீனா அணிந்த நான்கு கோடி பொன் மதிப்புள்ள முத்துக்களிலிருந்தும் ரோமர் இறக்குமதி செய்த கொற்கை முத்தின் சிறப்பை அறிந்து கொள்ள முடிகின்றது. இன்றைய காலத்தில் 'கொற்கை' என்ற பெயரில் தூத்துக்குடி மாவட்டம், ஸ்ரீவைகுண்டம் வட்டத்தில் தாமிரபரணி நதிக்கு 13 கி.மீ தொலைவில் வடக்குப் பக்கம் ஒரு கிராமம் உள்ளது. அன்றைய கொற்கைப்பகுதி இன்று மணல் மேடாக காட்சியளிக்கின்றது.

வணிகர்களின் வணிகத்திற்கு இன்று ஊடகங்களும் வலைதளங்களும் உறுதுணையாக இருக்கின்றன. ஆனால் சங்க காலத்தில் உயரமான கம்பத்தில் கொடிகட்டி அதில் கடையில் விற்பனை செய்யப்படும் பொருட்களின் பெயர்களைப் பொறித்து வைத்திருந்தனர்.

வணிகர்கள் நடுநிலை தவறாமல் வணிகம் செய்தனர். வணிகரின் இல்லம் பருந்துகள் இளைப்பாறிச் செல்லும் உயரமானதாக கூழுடை நலில்லாக இருந்தது. வணிக மகளிர் உடல் வருத்தும்படி அணிகலன், ஆடை மற்றும் வாசனைத்திரவியங்களைப் பயன்படுத்தினர். மேலும் வணிகச்சிறுமிகளின் கால்பொற்சிலம்பு, கைகளில் வைத்து விளையாடிய பொன்கிழங்கு ஆகியவை அவர்களின் வளமான வாழ்வினைக் காட்டுகின்றது.

மதுரைக்கூல வாணிகன் சீத்தலைச்சாத்தனார், அறுவை வணிகன் இளவேட்டனார் போன்ற புலவர்கள் வளமான வாழ்க்கை மட்டுமின்றி புலமை நிறைந்தவர்களாகவும் வாழ்ந்துள்ளனர் என்பதைக் கூற முடிகின்றது.

# இயல் - 5

# வேளாளர்

**அறிமுகம்**

தொல்காப்பியம் குறிப்பிடும் நால்வகை மாந்தரில் நான்காவதாகக் குறிப்பிடப்படுபவர் ‘வேளாளர்’ ஆவார். ஐயாயிரத்து ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன்பே இவ்வேளாளரைப் பற்றியும் இவர்களின் உழவுத் தொழிலைப் பற்றியும் தொல்காப்பியம் குறிப்பிடுவதால் இவர்களின் தொன்மையைப் பற்றி அறிய முடிகின்றது. அவர்கள் உழவுத் தொழிலைக் கண்டறிந்து, தாமும் நாகரிகத்தில் சிறந்து பிறரையும் சிறப்புற வாழ் செய்தவர்கள்.

“பண்டைத் தமிழரில் உழவுத் தொழிலால் சிறந்து நாகரிக வாழ்க்கையை வகுத்த நன்மக்கள் ‘வேளாளர்’ எனப்படுவர்”[1] என்று மறைமலையடிகள் கூறுகின்றார். இதிலிருந்து வேளாளரின் சிறப்பை அறிய முடிகின்றது.

சங்க காலம் முதல் இன்று வரை உணவு உற்பத்தி மிகவும் அவசியமான தொன்றாகும். அன்று காவிரி, வைகை, தென் பெண்ணை, பாலாறு என பல ஆறுகள் பெருக்கெடுத்தோடின. அதனால் உழவுத்தொழில் சிறந்து விளங்கியது.

“சாலி நெல்லின் சிறைகொள் வேலி
யாயிரம் விளையுட் பாகக்
காவிரி புரக்கும் நாடுகிழ வோனே”[2]

என்று கரிகாலனின் நாடு சிறப்பிக்கப்படுவதிலிருந்து அறிய முடிகின்றது. இன்று காவிரி பொய்த்துப் போய்விட்டது. மழை மண்ணுக்கு வர மறந்து போய்விட்டது. ஆனால் உழவர்களான ‘வேளாளர்கள்’ மட்டும் தங்கள் தொழிலை ‘சொட்டுநீர்ப்பாசனம், ஆழ்குழாய் மற்றும் நீர்மூழ்கி எந்திரம் மூலம்’ செவ்வனே செய்து வருகின்றனர். அன்று ஆறு மாதகாலம் ஓய்வு எடுத்த வேளாளர்கள் இன்று அரைநிமிடம் கூட ஓய்வு எடுக்க முடியாத

நிலையில் உழைத்துக் கொண்டிருக்கின்றனர். இவ்வேளாளர்களின் வாழ்வியலை இவ்வியல் எடுத்துரைக்கினறது.

### 5.1. வேளாளர் பெயர்க்காரணம்

புதிதாய் வந்தவர்க்கும் அன்புடன் விருந்தோம்பி வேண்டுமளவுக்கு உபசரித்தனர் என்பதை திரிகடுகம்

'வேளாளன் என்பான் விருந்திருக்க உண்ணாதான்'[3]

உரைப்பதிலிருந்து அறியலாம். மேலும் தமக்கு வேண்டிய பொருட்களைச் சொந்தமாக வைத்திருந்தனர் என்பதை

"எருது உடையான் வேளாளன்"[4]

என்று நான்மணிக்கடிகை கூறுகின்றது.

உழவுத் தொழிலிலன் மேன்மை உணர்ந்த புலவர்கள் தம்மை 'புலன் உழுதுண்மார்' என்று கூறிக் கொண்டனர். இவ்வளவு பெருமை வாய்ந்த உழவர்கள் தமக்குள் ஒரு தலைவனை ஏற்படுத்தி 'வேள்' என்னும் பெயரால் அழைத்தனர்.[5] இதுவே பின் 'வேளாளர்' என்று அழைக்கப்பட்டிருக்கலாம்.

### 5.2. வேளாளர் வேறு பெயர்கள்:

வேளாளர்கள் 'உழவர்கள்' எனப்பட்டனர். "அவ்வுழவர்களில் 'உழுதுண்போர்', 'உழுவித்துண்போர்' எனப்பட்டனர். இவர்களில் 'கருங்களமர்' என்றும், 'காராளர்' என்றும் அழைக்கப்பட்டனர் உழுவித்துண்போர்: 'வெண்களமர்' என்றும்; 'வெள்ளாளர் என்றும் அழைக்கப்பட்டனர். இவ்விருசாரார்க்கும் வேளாளர் என்பது பொதுப்பெயராகும்' என்கிறார் தேவநேயப் பாவாணர்[6] இவர் 'களமர்' என்று உழுவோரையும் உழுவித்துண்போரையும் குறிப்பிட்டிருப்பது சரியெனப்படும் வகையில் 'உழவர்' என்ற பொருளில் 'களமர்' என்னும் சொல் சங்க இலக்கியங்களில் பல இடங்களில் வந்துள்ளது.

வேளாளர் என்பதற்கு 'ஈகையுடையார்' என்று மறைமலையடிகள் பொருள் கூறுகின்றார். [7]

உழுவித்துண்போர், உழுதுண்போர் என்ற இருவகை யினரும்

வேளாண் மக்களே ஆவர். இதில் உழுவித்துண்டோர் ‘கிழார்’ என்று அழைக்கப்பட்டிருக்க வேண்டும். ‘கிழார்’ என்பது பண்டைக்காலத்தில் வேளாண் மக்களுக்கு வழங்கப்பட்ட ஒரு பட்டப்பெயர் என்பதை தொல்காப்பிய உரை அம்பர்கிழான் நாகன், வல்லாங்கிழான் மாறன் என்பன வேளாளர்க்குரியன எனக்குறிப்பிட்டு இதிலிருந்து அறிய முடிகின்றது.

‘கிழார்’ என்பதற்கு ‘உரிமையுடையவர்’ என்று பொருள். நிலத்திற்கு உரிமையுடையவர் என்ற பொருளில் நிலக்கிழார் எனப்பட்டனர்.

‘கிழார்’ என்ற பெயரில் அரிசில்கிழார், ஆலந்தூர் கிழார், ஆவூர் கிழார் எனப் பலபெயர்கள் வந்துள்ளன. இதேபோல் அந்தணப்புலவர்களும் ‘கிழார்’ என்ற பெயரில் இருந்துள்ளனர். இவற்றிற்கு அவர்களின் உடைமையே காரணமாகும். மதுரைக்காஞ்சியில் ‘மென்றொடை வன்கிழாஅர்’[10] என்று வந்துள்ளது. ஆனால் இது ஓர் நீரிறைக்கும் கருவியைக் குறிக்கின்றது. இவ்வாறு ‘கிழார்’ எனும் சொல் நில உடைமை அடிப்படையிலேயே அன்றிலிருந்து வழங்கப்பட்டு வருகின்றது.

உழுதுண்போரில் உழுவோரைக் குறிக்க ‘அகவர்’, ‘உழவர்’, ‘உழவன்’, ‘ஏராளர்’, ஏரின் வாழ்நர் இலக்கியத்தில் இடம் பெற்றுள்ளன. வயல்வெளிகளில் பணி செய்வோரைக் கடியலூர் உருத்திரக்கண்ணனார் ‘மடியா வினைஞர்’ என்று குறிப்பிடுகின்றார். மேலும் உழவுத் தொழில் செய்வோரைக் குறிக்க அரிஞர், அரிநர், அரிவார், கடைசியர், களமர், தொழுவர், புனவன் எனப் பல சொற்கள் சங்க இலக்கியத்தில் ஆளப்பட்டுள்ளன[11] என்று பெ.மாதையன் கூறியுள்ளார்.

வேளாளர்கள் ‘உழவர்கள்’ எனப்பட்டனர் அவர்கள் ‘பரதவர்’ என்றும்; ‘மள்ளர்’ என்றும்; ‘மறவர்’ என்றும் அழைக்கப்பட்டனர்.

வேளாளர் ‘உழவர்’ என்று குறிக்கப்பட்டதை உழாஅ உழவர் [12] என்று நற்றிணையும், ‘உழாஅ நாஞ்சில்’[13] என்று புறநானூறும் கூறுகின்றது. இது உப்பு விளைவித்த பரத வரைக குறிக்கின்றது.

உழுவோர் ‘மள்ளர்’ என்றும் அழைக்கப்பட்டனர். மள்ளர் என்றால்

படைமறவன், உழவன் என்பதைக் குறிக்கின்றது. உழவர்கள் படைமறவர்களாகவும் இருந்துள்ளனர் என்பது ‘வேறுபடு பைஞ்ஞலம்’[14] என்ற புறநானூற்று அடி மூலம் தெளிவு பெறலாம். இது வீரர்கள் நாட்டின் பல்வேறு பகுதிகளிலிருந்து திரட்டப்பட்டதைக் குறிக்கின்றது.

### 5.3. வேளாண்மை–பெயர்க்காரணம்

வேளாண்மை என்றால் ‘ஈகை’ என்று மறைமலையடிகள் பொருள் கூறுகின்றார்[15]. மேலும் வேளாண்மைத் தொழிலான பயிர்த்தொழிலைச் செய்வதன் காரணமாக ‘வேளாளர்’ ஆகுபெயராயிற்று என்பர்.

வேளாண்மை என்பதற்கு, ‘உபகாரம், கொடை, பயிர் செய்யும் தொழில்’ என்று செந்தமிழகராதி கூறுவதிலிருந்து அதன் சிறப்பையும் பெருமையையும் அறிய முடிகின்றது.

‘வேளாண்மை’ என்பதைக் குறிப்பிடுவதற்கு ‘ஈகை’ என்பதே பொருந்துவதைக் குறளிலும் காணலாம்.

இருந்தோம்பி இல்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி
வேளாண்மை செய்தற் பொருட்டு[16]

‘பொருளை பாதுகாத்து இல்வாழ்வு வாழ்வதெல்லாம், மக்கள் வரும் விருந்தினரை உபசரித்து அவர்கட்கு வேண்டுவன செய்வதற்கே ஆகும்’ என்ற குறள் கூறுவதிலிருந்து வேளாண்மைத் தொழில் செய்தோர் ஈகையுடையோராக இருந்ததைப் புலப்படுத்துகின்றது.

‘வேளாண்மை’ என்னுஞ் சொல்லுக்கு தனிவரியில் அடிகள் ‘வேளாண்மை யுபகாரம் ஈகையும் விளம்பும்’[17] என்று திவாகரச் சூத்திரம் குறிப்பிடுவதை மறைமலையடிகள் ‘கூறுவதிலிருந்து வேளாண்மை செய்தோர் ஈகையுடையோராக இருந்ததை வெளிப்படுத்துகின்றது’.

### 5.4. வேளாளரின் குடிச்சிறப்பு:

தமிழகத்தில் ஆட்சி புரிந்த குறுநில மன்னர்களுள் சிலர் வேளிர் குடியினராவர். அவர்களில் ஒருவரான இருங்கோவேள் தன் குடியின் நாற்புத்தொன்பதாவது தலைமுறையினன் என்று கபிலரால்

பாராட்டப்பட்டான்.[18] இக்குறிப்பைக் கொண்டு இக்குடியின் பழைமையை ஏழாம் நூற்றாண்டிற்கு எடுத்துச் செல்கின்றார் எஸ்.இராமகிருஷ்ணன்.[19]

வேளிர் தொன்மைக் குடியினவரன்பதை 'தொல் முதுவேளாிர்'[20] என்று அகநானூறு கூறுவதிலிருந்து அறிய முடிகின்றது. மேலும் வேளிர், 'எவ்வித்தொல்குடி'[21] 'தொன்று முதிர்வேளிர்'[22] என்று பாராட்டு பெறும் போதும் பழமையான பெருமைமிகு குடியினர் என்பதை அறிய முடிகின்றது.

வேளாளர் குடிச்சிறப்பினை உருத்திரங்கண்ணனார், 'கொலைபுரிவாரிடத்து அக்கொலைத் தொழிலை நீக்கினர். தேவரைப் போற்றி வழிபட்டனர். வேள்வி செய்தனர். நல்ல பசுக்களோடு எருதுகளையும் பாதுகாத்தனர். நான்மறையோரின் புகழைப் பரப்பினர். விருந்தினர்க்கு உணவு முதலிய பண்டங்களையும் அளித்தனர். தம்வீடு தேடி வரும் விருந்தினர்க்கு மட்டுமல்ல அனைவர்க்கும் பசிய உணவளித்தனர். பிறர்க்கு குளிர்ந்த நிழல் தரும் மரமாக வாழ்ந்தனர் வளைந்த மேழியினைக் கொண்டு உழும் உழவுத்தொழிலை விரும்பும் வேளாளர்கள்'[23] என்று கூறுவதிலிருந்து தன் ஈகையாலும் விருந்தோம்பாலும் நல்லுழைப்பாலும் மற்றவர்கட்கு சான்றாக விளங்கினர் என்பதை மறுக்கவியலாது. இங்கு பசிய உணவு என்று கூறப்பட்டிருப்பது, 'புதிதாக ஆக்கப்பட்ட உணவு' என்றே கூறலாம். இச்செயல் இன்றைய காலகட்டத்தில் கோயில்களில் கொண்டுவரப்பட்ட முழுநேர அன்னதான திட்டத்தினை நினைவூட்டுகின்றது.

### 5.5 மருத நிலவளம்:

மருதநிலம் வயல்வளம் நிறைந்தது. அங்குள்ள, 'ஒரு தாமரைப் பொய்கையிலே ஒரு வரியுடைய வண்டு தேனுண்டு மகிழ்ந்திருந்தது அதனருகில் உள்ள வயலில் குவளை மலர்கள் மலர்ந்திருந்தன. குவளையை வயலிலிருந்து கொய்து விற்பதற்காகக் கொண்டு சென்றனர். குவளை மலருடன் தாமரைப் பொய்கை வண்டு ஊருக்குள் வந்துவிட்டது. பெரிய களிறுகள் அவ்வூரிலிருந்தன அதன் மதநீர் வாடையைக் கண்டதும் அக்குவளை மலரை விட்டு மதநீரை நாடிப் போய்விட்டது. இவ்வாறு வண்டு பகல் பொழுதை ஒன்று மாற்றி மற்றொன்றாகக் கழித்தது'[24] என்று மருதநில

வளத்தை மருதனிள் நாகனார் மருதக்கலியில் கூறியுள்ளார்.

### 5.5.1. மருத வயலழகு, பொய்கையழகு

இன்றைக்கு சொற்களில் பார்க்கக் கூடிய அழகை அன்று வாழ்க்கையில் கண்டனர் என்பதை பெருங்கடுங்கோ பாடல்வழி 'கருமணி போலத் தெளிந்த நீரையுடைய பொய்கை. அங்கே அன்னம் தன் பேட்டுடன் விளையாடிக் கொண்டிருந்தது' என்று கூறுகின்றார். மேலும் 'கதிரவன் தன் கதிர்களைப் பரப்பும் தாமரை முகைகள் எல்லாம் முறுக்கவிழ்ந்து மலரத் தொடங்கின. அங்கு வண்டுகள் தேனுண்டு மகிழ்ந்து சுற்றிக் கொண்டிருந்தன. அப்பொழுது தாமரை இலைகளுக்கு நடுவே இருந்த முகையில் கதிரொளி படாததால் மலராமல் இருந்தது. பின் கதிரொளி படவும், தலைவனைக் காணாது வருந்திய தலைவி அவனைக் கண்டவுடன் அடைந்த முகமலர்ச்சி போல அம்மலரும் மலர்ந்திருந்தது'[26] என்று பொய்கையழகை பெருங்கருங்கோ கூறியுள்ளார்.

மருதநிலத்தில் குளக்கரையின் ஓரம் வரை நீர் பெருகிக் கிடந்தது அதனையொட்டி வளர்ந்திருந்த பகன்றைக் கொடிகளிலே வெள்ளிக்கிண்ணம் போன்ற மலர்கள் நிறைந்திருந்தன. அம்மலர்களோடு உராயுமாறு நீண்டு வளர்ந்திருந்தது. ஒரு தாமரைமொட்டும். பகன்றையோடு உராய்ந்து அதுமலர்ந்த காட்சி, வெள்ளிக் கிண்ணத்தில் வார்த்திருந்த மதுவைக் குடித்ததும் ஒரு மங்கயின் முகம் களிவெறியால் மலர்ந்தது போன்றிருந்தது என்று கூறுவதிலிருந்து இயற்கையழகு கடுங்கோவின் சிந்தனைக்கு மெருகூட்டுவதை மருதக்கலி வழி அறியலாம்.

### 4.5.2. வயல் வளம்

செழியன் பெயரில் வெட்டப்பட்டிருந்த குளத்தில் மடைதிறந்து கொண்டோடியதனாலே அக்குளத்திலிருந்து வெளியே வந்த வாளைமீன் கால்வாய் வழி ஆங்கு உழுது கொண்டிருந்த சேறுடைய எருமைக்கடாவின் காற்சேறுபட்டிருந்த இடத்தில் துள்ளி ஓடியது. பலபடியாக மறித்து உழுகின்ற அவ்வுழவர்களின் படைத்தற்கு மஞ்சாது சேற்றின் வரம்படியில் கிடக்கும்[28] என்று நக்கீரர் பாடல் வயல்வளத்தை எடுத்துரைக்கின்றது.

மருத நிலம் வளமிக்கது. அங்கு நெல் மலைபோல் குவிந்து கிடக்கின்றது. சோற்றுவளம் மிகுந்த சோழ நாட்டில் திடர்தோறும் மட்டுமன்றி வீடுகள்தோறும் நெற்கூடுகள் இருந்தன. அங்கு ஒரு வேலி நிலத்தில் ஆயிரம் கலம் விளைந்தது என்பதை

சாலி நெல்லின்சிறைகொள் வேலி

ஆயிரம் விளையுட் டாக

காவிரி புரக்கும் நாடுகிழ வோனே.

என்ற அடிகளால் அறிய முடிகின்றது. இதனாலேதான் ‘சோழநாடு சோறுடைத்து’ என்று வழங்கலாயிற்று.

### 5.6. வேளாளரின் வளவாழ்வு

‘வேளாளர்கள் வீடுகளைப் பெரிதாக கட்டியிருந்தனர். பலருக்கும் விருந்தளிப்பதற்காக பெருக சமைத்து வைத்துள்ளனர். அவர்களின் வீட்டில் இரண்டு கதவுகள் போடப்பட்டிருந்தன. அதனடியில் நின்று தன் மகனைத் தெருவிற்கு விளையாட அழைத்துச் சென்ற செவிலியைக் காணாது வருந்திப் புலம்புகின்றாள்’[29] தலைவி என்று கூறுவதிலிருந்து இவர்கள் செல்வர்களில் வேளாளர் என்பதையும்; செவிலியர் வைத்து வேலை பார்க்கும் அளவிற்கு செல்வமிக்கவர்கள் என்பதையும் அறியமுடிகின்றது. மேலும் இத்தலைவியின் மகனின் மெய்க்கண் அணிந்த அணிகலன்களையும் அழகையும் பார்த்த இவனின் வேற்றுத்தாயர் முருகனோ என மெய்சிலிர்த்தனர் என்று கூறுவதில் இருந்து இச்செல்வர்களில் சிலருக்குப் பரத்தையர்பால் செல்லும் வழக்கமிருந்ததையும் மெய்ப்படுத்துகின்றது. இதனை

‘பெருந் திரு நிலைஇய வீங்கு சோற்று அகல் மனை

பொருந்து நோன் கதவு ஒற்றிப் புலம்பி யாம் உலமர மனை’

இவ்வடிகளின் மூலமும் அறிய முடிகின்றது.

‘தச்சச் சிறாஅர் நச்சப் புனைந்த

ஊரா நற்றே குருட்டிய புதல்வர்’[30]

என்ற வரிகளுக்கு வேளாளர்களின் மக்கள் சிறுதேர் உருட்டி விளையாடுகின்றனர். தச்சர் பிள்ளைகளும் விரும்பும்படியான தேருருட்டி விளையாடுகின்றனர் என்று கூறுவதிலிருந்து அது அழகான

வேலைப்பாடமைந்தது என்பதைக் கூறுகின்ற ‘அவர்கள் தேருருட்டி விளையாடி விட்டு வீட்டுக்குச் சென்றவுடன் அவர்களைச் சீராட்டி பாராட்டி உறங்க வைக்கும் போது படுக்கையிலேயே பாலும் செவிலியர் கொடுக்கின்றனர்.’[31] என்பதிலிருந்து செல்வச் செழிப்பு மேலிடுக்கின்றது.

## 5.7. வேளாளர்களின் வளமும் சேமிப்பும்

மலையைச் செய்து வைத்தாற்போன்ற நிலை பொருந்திய மிக்க நெற்களையுடைய பல பெரிய சேர்களைக் கட்டி வைத்திருக்கின்ற எருமைப் பூட்டி உழுகின்ற உழவனே![32] என்று நற்றிணையில் தூங்கலோரியார் கூறுவதிலிருந்து இவர்கள் சேமிப்பு விருந்தோம்பலையும் விழிப்புணர்வையும் செல்வச் செழிப்பையும் உணர்த்துகின்றது.

வேளாளர்கள் பெருஞ்செல்வர்கள் என்பதை ‘பிறரடைய அரிதான கடவுள் காக்கக்கூடிய இடத்தில் உள்ளது. அது பெரிய தேன்கூடுகள் தொங்கக்கூடிய காட்டின் எல்லையில் உள்ள பெரிய பாழி மலையின் உச்சியிலிருந்து அடியில் புதைத்து வைத்துள்ள பெருஞ்செல்வம் பழைய வேள்குடிமக்களுடையது’[32] என்று கூறுவதிலிருந்து அறிய முடிகின்றது. இதனை அகம்

“அருந்தெறற் மரபிற் கடவுள் காப்பப்
பெருந்தேன் தூங்கும் நாடுகாண் நனந்தலை
அணங்குடை வரைப்பிற் பாழி ஆங்கண்
வேண்முது மாக்கள் வியனகர்க் கரந்த[33]
அருங்கல வெறுக்கையின் அரியோர் பண்புநினைந்து”

என்கிறது.

## உழவரின் சேமிப்பு

தான் பயிர்செய்த நெல்லினை விற்றது போக அவர்கள் வீட்டில் நெற்கூடுகளில் நெல்லை சேமித்து வைக்கின்றனர். அதனை பெரும் பாணாற்றுப்படை

‘ஏணி யெய்தா நீணெடு மார்பில்
முகடுமித் தடுக்கிய பழம்பல் லுணவிற்

குமரி மூத்த கூபோங்கு'[34]

ஏணிக்கும் எட்டாத உயரமுடைய நெற்கூடுகளில் சேமித்து வைத்து விருந்தோம்பல் செய்கின்றனர். புதுநெல் வந்த பிறகும் அதில் தீராமல் நெல் இருக்கின்றது என்பதிலிருந்து அவர்களின் சேமிப்பின் முக்கியத்துவம் வெளிப்படுகின்றது.

### 5.8. நிலம் தொடர்பான தொழில் பயிர்த்தொழில்

வளமார்ந்த மருத நிலத்தில் நெல், கரும்பு போன்றவை பயிரிடப்பட்டன. முல்லையில் திணை, அவரை போன்றவையும், குறிஞ்சியில் தினையும் உழுது விதைத்து அறுவடை செய்யப்பட்டன. மருத நில மக்கள் வயல்களை உழுதல், நெல் விதைத்தல், நாற்று நடுதல், களை எடுத்தல், வயல்களுக்கு நீர் பாய்ச்சுதல், அறுவடை செய்தல், கடா விடுதல் முதலிய பயிர்த்தொழில் தொடர்பான தொழில்களில் ஈடுபட்டதைச் சங்க இலக்கியம் கூறுகின்றது.

#### 5.8.1. உழவு

உழுவதற்கு அன்று ஏர் பயன்பட்டது. சென்னைப் பல்கலைக்கழக அகராதி முதலி 'பொன்னேர்' என்பதற்கு பருவகாலத்தில் நல்லநாளில் முதல் முறையாக உழுங்கலப்பை என்று விளக்கங்கூறியுள்ளது.[35]

பண்டைய மகத நாட்டூர்களில் ஆண்டுதோறும் முதலுழவு உழும்போது ஊர்த்தலைவன் பொன்னால் செய்த ஏரைப்பூட்டி உழவர் வரிசையில் முதலில் நின்று பிறர்பின்வர ஒரு படைச்சாலோட்டி தொடங்கி வைப்பர்[36] என்று சொல்லப்படுவதனால் குமரி நாட்டில் அதற்கு மூலமான வழக்கம் இருந்திருக்கலாமென்று கருத இடமுண்டு.

ஏர் அன்று உழவுக்கருவிகளில் முக்கிய இடம் பிடித்திருந்ததை ஓரேருழவனார் கூற்றிலிருந்து அறிய முடிகின்றது. ஓரே ஒரு ஏரையுடைய உழவன் மழையை எதிர்பார்த்து காத்திருந்தவன். மழை வந்தவுடன் அதன் ஈரம் கெடுவதற்கு முன் மிகவும் விரைவாக உழுவான் என்பதை

ஈரம்பட்ட செவ்விப் பைம்புனத்து

ஓர்ஏர் உழவன் போல

பெருவி துப்பு உற்றன்றால்[37]

என்ற வரிகளில் ஓர் ஏரை உடைய உழவனின் வேகத்தைக் கூறியதால் அப்புலவர்க்கு ஒரேருழவனார் என்ற பெயர் வந்தது.

### 5.8.2. உழவின் மேன்மை:

உழவினால் உலகத்துயிர்கள் அனைத்தும் உயிர் வாழ்கின்றன என்பதை உணர்ந்த வள்ளுவர்,

உழவினர் கைம்மடங்கின் இல்லை விழைவதூஉம்

விட்டேம் என்பார்க்கும் நிலை[38]

என்ற குறளில் உழவர்தம் தொழில் செய்யாது கை மடங்கியிருப்பாராயின் அனைவரும் விரும்பும் உணவும் இல்லை. துறவிகளும் இல்லை என்கிறார். இதிலிருந்து உழவின் சிறப்பை உணர முடிகின்றது.

ஐங்குறு நூற்றில் ஓரம்போகியார்

விளைக வயலே[39]

என்று வாழ்த்தக் காரணம் உலகத்துயிர்களை வாழ்விக்கக்கூடிய உழவுத்தொழில் சிறந்து விளங்கினால்தான் எல்லாரும் எல்லா நலனும் பெற முடியும் என்பதை உணர்த்துகின்றார். இந்த வேட்கைப்பத்தில் மூன்றாம் பாடலில்

பால்பல உளறுக பகடுபல சிறக்க

என்று ஆவும் எருமையும் வளம் பெற்றுச் சிறக்க என்கின்றனர். ஏனென்றால், எருமைக்கடாக்கள் பெருகினால்தான் உழவு சிறக்கும் என்பதைக் குறிப்பால் உணர்த்துகின்றார் புலவர். வரப்புயர நீர் உயரும்; நீர் உயர நெல் உயரும், நெல் உயர குடி உயரும்; குடி உயர கோன் உயர்வான் என்பதை அறிந்த புலவர் ஊன் பொதிப்பசுங்குடையார் சேரன் இளஞ்சேட் சென்னியைப்பாடும் போது

கழிந்தது பொழிந்தென வான்கண் மாறினும்

தொல்லது விளைந்தென நிலவுளங் கரப்பினும்

எல்லா வுயிர்க்கு மில்லால் வாழ்க்கை[40]

என்று வானும் மண்ணும் பொய்ப்பின் உலகத்தில் உயிர்கள் இல்லை. எனவே

உழவையும் எம்மைப்போன்றோரையும் காப்பது உன் கடமை என்கிறார் புலவர்.

மன்னுயிர் செழிக்க நீரும், நிலனும் வளமாக இருக்க வேண்டும். படையின் வெற்றியும் அரசனின் வெற்றியும் உழவுத்தொழில் சிறப்பின் வழியே பெறமுடியும் என்பதை வெள்ளைக்குடி நாகனார் தன் பாடலில்

பொருபடை தரூஉம் கொற்றமும் உழுபடை
ஊன்றுசால் மருங்கின் ஈன்றதன் பயனே[41]

மூலம் அரசனை விழிப்புடன் இருக்க வற்புறுத்தியதை அறிய முடிகின்றது. மேலும் இவர் குடிகளைப் பேண வேண்டுமாயின்

பகடு புறந்தருநர் பாரம் ஓம்பு[42] என்கின்றார்.

“உழவுத் தொழிலின் மேன்மை உணர்ந்த புலவர்கள் தம்மைப் ‘புலன் உழுதுண்மார்’ என்று கூறிக்கொண்டனர்”[43] என அ.தெட்சிணாமூர்த்தி அவர்கள் கூறுவதிலிருந்து அதன் அருமையை உணர முடிகின்றது.

### 5.8.3. உழவின் இனிமை:

சங்க காலத்தில் ‘ஏர்’ உழுகருவியாய் பயன்பட்டதால், ‘இரண்டு ஏரும், வீட்டில் விதைநெல்லும், நீரருகே உள்ள நிலமும், ஊருக்கருகில் உள்ள நிலமும், உழவுத்தொழிலாளியும் சொற்தப்பாமல் செய்தால் உழவே இனிது’ என்பதனை ரா.பி.சேதுப்பிள்ளை கூறுவதிலிருந்து உழவின் இனிமையை அறியமுடிகின்றது.

உழவின் உண்மைப் பெருமையினை உணர்ந்த வள்ளுவர் ‘உழுவார் உலகத்தார்க்கு ஆணி’ எனவும், உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்மற் றெல்லாந் தொழுதுண்டு பின்செல் பவர் எனவும்,

உழவினார் கைம்மடங்கின் இல்லை விழைவதூஉம்
விட்டேம்என் பார்க்கு நிலை[45].

எனவும் கூறியுள்ளார். எல்லாத் தொழில் செய்வார்க்கெல்லாம் முதன்மை ஆனவர்களாக விளங்குபவர்கள் வேளாளர்களேயாதலின் அவர்களை, ‘உலகத்தார்க்கு ஆணி’ என்றார். தமக்கு மற்றும் தம்மைச் சார்ந்தோர்க்கும் பொருட்களை விளைவிப்போர் உழவராவான். இரத்தல் தொழிலைச்

செய்யாதோரும், ஈகை குணம் உடையோரும்தான் வேளாளர் என்கிறார் வள்ளுவர்.

உழவர் உழவுத்தொழில் பயின்ற பெரிய எருதுகளைப் பூட்டி ஏரை உழுதனர். கலப்பையின் கொழு, நிலத்தில் மறைய அமுக்கி உழுதனர் என்பதை

'பிடிவாய் அன்ன மடிவாய் நாஞ்சில்
உடுப்பு முகமுழுக கொழுமுழ்க ஊன்றி
தொடுப்பு எறிந்து துளர்படு துடவை'[46]

என்ற அடிகள் உணர்த்துகின்றார். இதனையே பி.சேதுரேமனும் தன் 'ஆற்றுப் படை இலக்கியத்தில் தமிழர் வாாழ்வியல்' என்ற நூலிலும் கூறியுள்ளார்.

### 5.8.4. குறிஞ்சி உழவு

'குறிஞ்சி' மலையும் மலை சார்ந்த பகுதியாகும் மலைப்பகுதிகளில் என்பதைவிட மலையைச் சுற்றியுள்ள அடிவாரப்பகுதிகளில் எள், தினை, அவரை, வரகு, மூங்கில், வெண்சிறு கடுகு, இஞ்சிக் கிழங்கு, மலைவாழை, மா, பலா என்பவை பயிர் செய்யப்பட்டன. 'என்னண்ணன்மார் உழுது விதைத்த தினைக்கதிர்கள் கொய்யப்பட்டன' என்று

'இருங்கல் வடுக்கத்து என்னையர் உழுத
கருங்காற் செந்தினை கடியும் உண்டன'[47]

என்று கூறுவதிலிருந்து குறிஞ்சியிலும் உழவு நடக்கிறது என்பதை அறியமுடிகின்றது.

### 5.8.5. முல்லைநில உழவு

பலசால் உழுது புரட்டிய பழங்கொல்லை புழுதியில் நிறைவுற முறையே வரகு விதைக்கின்றனர் என்று முல்லைநில உழவரின் உழவு, விதைப்பு முறையினை ஒரு சிறைப்பெயரியனார்.

விதையற் கொன்ற முதையற சூழி
இடுமுறை நிரப்பிய ஈரிலை வரகின்றது[48]

கூறுவதிலிருந்து அறிய முடிகின்றது.

முல்லை நில மக்களான கோவலர் ஆயர் உழவுத்தொழிலைச்

செய்ததனால் அவர்களும் உழவர் என்று அழைக்கப்பட்டதையும் அவர்கள் உழுது விதைத்ததையும் குறுந்தொகை

முதைப்புனங் கொன்ற வார்கலி யுழவர்
விதைக்குறு வட்டி போதொடு பொது[49]

என்று கூறுகின்றது. மேலும் 'தண்டலை யுழவர் தனிமட மகளே'[50] எனத் தோப்புழவர் அழைக்கப்படுவதையும் நற்றிணை கூறுகின்றது.

வயலில் உழுபவர்கள் காளைகளை உரப்பியோட்டுவதினால் எழுகின்ற ஓசைக்கஞ்சி மயில் குன்றில் தங்கும் என்பதை பரணர்

கழனி யுழவர் கலிசிறந் தெடுத்த
கறங்கிசை வெரீஇப் பறந்த தோகை
அணங்குடை[51]

அறிவுறுத்துவதிலிருந்து உழவர் தம்பணியை மகிழ்ச்சியுடனும் பெருமையுடனும் கவனத்துடனும் செய்கின்றனர் என்பதனை அறிய முடிகின்றது. மேலும் கழனி யுழவர் குற்ற குவளையும்[52] என்று வயலில் உழுவோரையும் அவர்கள் பறித்து வந்த குவளை பற்றியும் கூறுகின்றது.

நாற்று நடுதலுக்கு முன் நிலத்தை உழுதபின்னும்; விதைப்பதற்கு முன்னும் அதனை மட்டம் செய்தனர். அதற்கு பல்லியாடுதல் என்று பெயர்.[53]

### 5.8.6. நாற்று நடுதல்

பலமுறை நன்றாக உழப்பட்டு களைநீக்கி, உரமிட்டு, நீர் பாய்ச்சப்பெற்ற வயல்களில் நாற்றுகளை நன்றாக அழுந்த நடுவர் என்பதனை

முடிநா றழுத்திய நெடுநீர்ச் செறுவின்[54]

என்று நெற்பயிர் நன்கு பருத்து முதிர்வதற்கு நல்ல காற்று இன்றியமையாததாகவின் நான்கு திசைக்காற்றும் ஊடறுத்து வீசப்பெற்றமையால் நன்கு விளைந்தன.

பால்வார்ப்பு கெழீஇப் பல்கவர் வளி பேகழ்வு
வாலிதின் விளைந்தன ஐவனம் வெண்ணெல்[55]

என்று கூறுவதில் இருந்து நடும்போது நன்கு இடைவெளிவிட்டு (அமானிய நடவு) நட்டனர் அதனால் பயிர்கள் கிளைத்துச் செழித்துப் பால்கட்டி

*வளர்ந்தன என்று கூறுவதிலிருந்து பயிர்த்தொழிலுக்கு சூழ்நிலைகளைக் கவனித்து அதற்கேற்றபடி தொழில் செய்யும் அறிவு உழவர்கட்கிருந்ததை அறிய முடிகின்றது.*

### *5.8.7. களையெடுத்தல்*

*நாற்று நடுவதற்கு முன் களையெடுப்பர். அதனை, 'தரிசுக்களை' என்பார்கள். நாற்று நட்டபின் களையெடுத்து, பயிர்களை நன்கு வளர விடுவர். நாற்று நடுவதற்கு முன் களையெடுப்பதை தூங்கலோரியார் உழவனே! நீ உழுகின்ற வயலிலுள்ள கோரைகளையும் நெய்தல்களையும் களையெனக் களையாதுவிட்டு விடுக*[56] *என்று கூறக் காணலாம்.*

*மேலும் களைபறிக்க இன்று இரும்பு கருவிகள் வந்துவிட்டன என்றாலும் அன்றே மரத்தாலான களை எடுக்கும் கருவிகள் இருந்ததை*

*கோடுடைக் கையா துளரெறி வினைஞர்*[57]

*என்ற அடி கூறுகின்றது.*

### *5.8.8. நீர் பாய்ச்சுதல்*

*மன்னர்கள் நீர்ப்பாசனத்திற்காக அணைகள் கட்டினர். கரிகாலன் கல்லணையைக் கட்டினான். இவ்வாறு சேர மன்னனும் அணை கட்டினான். அணையை 'நிறுத்த கதவு' என்று பதிற்றுப்பத்து*

*'பொய்கை வாயிற் புனல்பொரு கதவின்'*[58]

*கிணறு வெட்டி ஏற்றம் வைத்து நீர் இறைக்கும் பழக்கமும் இருந்ததென்பதை*

*'நீர்த்தெவ்வும் நிரைத் தொழுவர்*
*பாடுசிலம்பு மிசையேற்றத்*
*தோடு வழங்கும் அகலாம்பியற்*
*கயனகைய வயல் நிறைக்கும்'*[59]

*என்று மதுரைக் காஞ்சி கூறுகின்றது.*

*'வெள்ளத்தினைத் தடுக்க மணல் மூட்டைகளைப் பயன்படுத்தியுள்ளனர்'*[60] *என்பதனை பதிற்றுப்பத்து கூறுகின்றது. மேலும் இரவும் பகலும் நீர்நிலைகளை காப்பதற்கும் நீரை ஒழுங்குபடுத்துவதற்கும் காவலர்கள் இருந்ததை*

ஈங்கை

துய்யவிழ் பனிமலர் உதிரவீசி

தொழில்மழை பொழிந்த பானாட் கங்குல்

எறிதிரைத் திவலை தூஉம் சிறுகோட்டுங்

பெருங்குளக் காவலன் போல[61]

அகநானூறு கூறுகின்றது.

### 5.9 நீர்ப்பாசன வசதி:

பண்டைத் தமிழகத்தில் காவிரியும் வையையும் பெண்ணையாறும் பாய்ந்து வளம் செய்தன. இவ்வாறுகளிலிருந்து வயல்கட்கு நீர் பாய மன்னர்கள் ஏற்பாடு செய்தனர் என்பதற்குச் சான்றாக ஆறுகள் இல்லாத பகுதிகளில் நீர்நிலைகளைப் பெருக்குதல் மன்னன் கடமையாக வற்புறுத்தப்பட்டது. புலவர் குட்புலவியனார் நெடுஞ்செழியனுக்கு அறிவுரை நல்கும் பொழுது

நீரின் றமையா யாக்கைக் கெல்லாம்

உண்டிக் 'கொடுத்தோர் உயிர்கொடுத் தோரே

உணவெனப் படுவது நிலத்தோடு நீரே

நீரும் நிலனும் புணரியோ ரீண்டு

உடம்பும் உயிரும் படைத்திசி னோரே'[62]

எனக்கூறியிருக்கிறார். மேலும் நீர்நிலைப் பெருக்குதற் சிறப்பை

நிலன்எளி மருங்கின் நீர்நிலைப் பெருகத்

தட்டோ ரம்ம விவன்தட் டோரே[63]

என்று வற்புறுத்தி இருக்கின்றார்.

### 5.9.1. குளம் வெட்டுதல்

பிறை வடிவந்தோன்ற கரைகளமைப்பது அன்றே இருந்ததையும் அதையமைத்த பாரியின்மையால் அச்சிறுகுளம் மிக்க நீர் நிரம்பிப் பாதுகாப்பாரில்லை. கரையுடைந்து வீற்று ஓடியழிகின்றன என்று கபிலர் கூறுவதிலிருந்து குளம் வெட்டி வளம் பெருக்கியதை அறிய முடிகின்றது.[64]

### 5.9.2. அணை கட்டுதல்

நீரைத் தேக்கி அணை கட்டுதல் வேளாண்மைக்கு அவசியம். பெரிய அணைகளை அரசாங்கம் கட்டியது. சிறு அணைகளை உழவர்களே கட்டியதை அகநானூறு எடுத்துரைக்கின்றது. இதனை

மென்கழைக் கரும்பின் நன்பல மிடைந்து

பெருஞ்செய் நெல்லின் பாசவல் பொத்தி

வருந்தி கொண்ட வல்வாய் கொடுஞ்சி[65]

உழவர்கள் காஞ்சி மரத்தின் சிறிய துண்டுகளை நட்டு அதன் குறுக்கே இனிய சுவையுடைய மெல்லிய தண்டினையுடைய கரும்பின் சிறந்த பல கழிகளைக் கட்டி வைத்துள்ளனர். அது பசுமையான பல பள்ளங்களைக் கொண்ட பெரிய நெற்பரப்பினை உடைய நன்செய் நிலங்களுக்கு நீரைத் தேக்கி வைக்கும் அணையாகப் பயன்படுகின்றது[66] என்று நக்கீரர் எடுத்துரைக்கின்றார்.

### 5.9.3. மழைநீர்ச் சேமிப்பு தொட்டி

இன்று வீட்டுக்கு வீடு, ‘மழைநீர் சேமிப்புத் தொட்டி’ அன்றோ மழைநீரைச் சேமிக்க ஊர் வடிகால் பகுதியில் பெரியகுளம் வெட்டப்பட்டிருந்தது. நீரில் அவசியத்தை அன்றே உணர்ந்திருந்ததை அவற்றை மன்னனுக்கு அறிவுறுத்திய குடபுலவியனார் பாடல் வழி

ஆழ்ந்த அகழியும், நெடிய மதிலும் உடைய

மல்லல்மூதூர் வயவேந்தனுக்கு அறிவுரைப்பாராய், ‘செல்லும் உலகத்துச் செல்வம் வேண்டினும் ஞாலங்கப்பாருள் தலைமை வேண்டினும் அரசன் நீர்நிலைகளை அமைத்து விளைச்சலைப் பெருகச் செய்ய வேண்டும்’ என்கிறார். மன்னனின் நன்மை தீமைகளை அவனுக்கே அறிவுறுத்தும் துணிச்சலும் வாய்ப்பும் புலவர்களுக்கிருந்ததை இப்பாடல் காட்டுகின்றது.

### 5.10. அறுவடை

நெற்கதிரை அறுக்க நெய்தல் மலரையும் சேர்த்துக் கொண்டு வந்தது. அக்கூரிய அரிவாள் என்று புலவர், வயலில் கூறுவதிலிருந்து நெய்தல் மலர் மலரும் என்பதைக் காட்டுகின்றது. இதனை,

“நெல்லரி தொழுவர் கூர்வாளுற் றெனப்”[68]

“நெல்லை அறுவடை செய்து நெற்போர்

என்பர் இடும் இடத்து உறையும் மருத நிலத் தெய்வங்கட்கு பலி வழங்குதல்"[69] உண்டெண்பதை பெரும்பாணாற்றுப்படை அடியால் அறிய முடிகின்றதை கு.வெ.பாலசுப்ரமணியன் வெளிப்படுத்துகின்றார்.[70] அரிவாள் கூர்மழுங்கின் அதனை வயலாமையின் முதுகின் ஒட்டில், தீட்டி, கூராக்கி, அறுவடை செய்வர் என்று புறம் கூறுவதை எச்.சித்திரபுத்திரன் கூற்றின் வழி மெய்ப்பிக்கலாம்.

### 5.10.1 கடாவிடுதல்

நெல்லை அறுவடை செய்து அடித்து, தூற்றி நெற்போரினை இடுவர். பின் வைக்கோலில் உள்ள நெல்லை அதனின்று எடுக்க "வைகறைப் பொழுதிலே மிகவும் மகிழ்ச்சியுடன் எழுந்து வைக்கோலைப் பிரித்துக் கடாக்களை விட்டு அலைத்தெடுத்து தூற்றாப் பொலியினின்றும் முகந்த வலியற்ற நுண்ணிய கூலங்கள் இருண்ட மேகம் போல திசையெங்கும் மறைப்பத் தூற்றினர்"[71] என்று விற்றூற்று மூதெயினார் கூற்றுவழி அறியமுடிகின்றது.

### 5.10.2. நெற்கூடு அறுவடை

அறுவடை செய்த நெற்குவியலை, தமக்கு தேவையானதை, "வட்டமாக உயர்ந்த ஞாயிறு போன்ற அழகிய நெற்குவியலை நெற்கூடாக்கிச் சுற்றி அதன் மேல் சாணம் பூசி காய வைத்து பயன்படுத்துவர்"[72]. மேலும் அந்நெற்கூடு தவிர குவிக்கப்பட்ட நெற்குவியல், 'மலையை செய்து வைத்தாற் போன்றிருப்பதாக தூங்கலோரியார்'[73] கூறியுள்ளார்.

## 5.11. நெற்விளைச்சலும் உழவனின் ஈகையும்

அறுவடை செய்து குவிக்கப்பட்ட நெற்குவியல் வடதிசையிலுள்ள மேரு மலையினும் சிறப்புற்றுத் தோன்றும். இத்தகு தலையாய தொழில் செய்த உழவர்கள் வளமிக்க மருதநிலம் சூழ்ந்த அசையாத குடியிருப்புகளில் வாழ்ந்தனர். இத்தகு வேளாளரைப் பொருநர் முதலிய கலை வல்லுநர் பாடுதலியல்பு. அவர்களுக்கு நெல்லை வழங்குதலும் உண்டு. இதனைச் சிறப்பிக்கும் வகையில் சில பாடல் அடிகள் உள்ளன. அவற்றில், 'ஏணிக்கும் எட்டாத யச்சியுடைய பழம் பல்லுணவுகள் செறிந்த களஞ்சியங்களைக்

கொண்ட நல்ல இல்லம் என்றும்'[74] 'தொல்பசியறியா துளங்கா இருக்கை' என்றும்,[75] 'மல்லற்பேரூர்' என்றும் கூறப்பட்டிருப்பது நிலக்கிழார்களாக இருந்த வேளாளர்களின் வளமையைக் காட்டுகின்றது. இவ்வேளாளர்களின் பேரூர் மருதத்தண் பணைகளால் சூழப்பட்டிருந்தது ஆனால் வினைஞர் குடியிருப்போ வயல்வரப்புகளிலேயே என்று கூறுவதிலிருந்து அவர்கள் பேரூர்களிலும் சிற்றூர்களிலும் வாழ்ந்தனர் என்பதை அறியமுடிகின்றது.

### 5.12. பொருளாதாரத்தில் உழவரின் பங்கு

பண்டைத் தமிழகத்தின் பொருளாதாரம் பெரிதும் உழவர்களையே நம்பியிருந்தது. உழவர்க்கு அடுத்த நிலையில் வணிகர் சிறப்பிடம் பெற்றிருந்தனர். மன்னனுடைய படை தருகின்ற வெற்றியும் உழவர்தம் உழைப்பின் பயனாற்கிட்டத்தக்கதே என்று புலவரொருவர் கூறியுள்ளார்.

பொருபடை தரூஉம் கொற்றமும் உழவர்
ஊன்றுசால் மருங்கின் ஈன்றதன் யனே

இரப்போரின் சுற்றத்தினையும் புரப்போர் கொற்றத்திணையும் உழவின் கண் விளைப்போர் என் று உழவரை இளங்கோவடிகளும் பாராட்டியுள்ளார்.

### 5.13 நிலப்பாகுபாடு:

நிலம் இரண்டு வகைப்படும் ஒன்று நன்செய். மற்றொன்று புன்செய். வேளாண்மைக்குரிய நிலம் சங்க இலக்கியங்களில் வன்புலம், மென்புலம் என்று குறிப்பிடப்பட்டுள்ளது. நன்செய் நிலம் மருத நிலத்தையும் அங்குப் பயிரிடப்படும் நெல்லையும் பெரும்பாலும் குறித்தது. ஆனால் வன்புலம் அல்லது புன்செய் நிலமானது குறிஞ்சி, முல்லை நிலப்பகுதிகளையே குறித்தது.

#### 5.13.1. நன்செய் வேளாண்மை:

செடிகொடி புற்களைதல், கல்லெடுத்தல், உரமிடுதல், பன்முறையுழுதல், கட்டியடித்தல், பரம்படித்தல் புழுதியாக்குதல்

காயவிடுதல் என்னும் பலவகையில் திருத்தப்பட்ட நிலம் ‘செய்’ எனப்பட்டது[78]. பேரளவில் திருத்தப்பட்ட நிலம் ‘நன்செய்’[79] எனப்பட்டது.

நன்செய் நிலத்தில் உரம் மிகுதியாக வைக்கப்படுதலால் ‘வயல்’ என்றும்; சேறுபடுதலால் ‘செறு’ என்றும்; பள்ளமாயிருத்தலால், ‘பண்ணை’ என்றும்; போரடிக்கும் களஞ்சேர்ந்திருப்பதால் ‘கழனி’ என்றும்; நீண்ட காலம் பயன்படுத்தப்பட்டுப் பழமையானதால் ‘பழனம்’ என்றுப் பெயர் பெற்றது.[80]

‘மருதம் வேளாண் உற்பத்தியை ஆதாரமாகக் கொண்டது. உபரி உற்பத்தியிருப்பதால் அடிப்படை பொருள் சேமிப்பிற்கு உதவியது. நீர்வளமிக்க ஆற்றங்கரையோரப்பகுதியாக மருதநிலம் இருந்ததால் கோடைக்காலம் எவ்விதமாற்றத்தையும் ஏற்படுத்தவில்லை’[81] என்று பெ.மாதையன் கூறுவது ஏற்கத்தக்கதாகும். ஆனால் இன்றைய காலகட்டத்தில் மழைக்காலத்தில் கூட அதிகம் மழைபெய்வதில்லை. ஏனென்றால் காடுகள் அழிக்கப்பட்டு வீடுகள் கட்டப்படுவதும் ஒரு காரணமாகும்.

நீர்வளமுள்ள நன்செய் பகுதிகளை சங்க இலக்கியம் மென்புலம், மென்பால் எனவும் குறிப்பிடுகின்றது. ‘மென்பால்’[82] என மருதநிலத்தையும்; ‘மென்புலம்’[83] என்று நெய்தல் நிலத்தையும் குறிப்பிட்டு உள்ளது.

‘மென்புலம்’ என்பது நெய்தல்[84], மருதம்[85] மற்றும் மருதம் சார்ந்த முல்லை[86]ஆகியவற்றையும் குறித்தது. மேலும் மருதநில வயல்கள், ‘தண்ணடை’ எனவும் குறிப்பிடப்பட்டுள்ளது.

...........வாளை
நெல்லுடை நெடுநகர்க் கூட்டுமுதற் புரளும்
தண்ணடை ......................[87] என்றும்;
கள்ஆர் வினைஞர் களம்தொறும் மறுகும்
தண்ணடை[88] ........... என்றும்;

மருத நிலம் சார்ந்த வளமான பகுதிகளைக் குறிக்கின்றது. மேலும்

பசியை அறியாத இடமாகவும் உள்ளதென்பதை

பசி என அறியாப் பணை பயில் இருக்கை[89]

என்று கூறுகின்றது.

பொருளாதாரத்தினைப் பெருக்கக் காரணமான நெல்லும் கரும்பும் விளையும்[90] பகுதிகளாக காட்டப்பட்டுள்ளதை

.......... வணங்கு கதிர்நெல்லின்

யாணர்த் தண்பணை[91]

கரும்பு அல்லது காடு அறியாப்

பெருந் தண்பணை[92]

என்ற அடிகள் உணர்த்துகின்றன.

**நெல்:**

மருத நிலத்திற்கு சிறப்பு சேர்ப்பது அங்கு விளையும் நெல்லே ஆகும். ஒரு அரசனை வாழ்த்தும் போது கூட

'நெற்பல பொலிக பொன் பெரிது சிறக்க'[93]

என்று சேரலாதன. வாழ்த்தப்படுவதைக் காணமுடிகின்றது. மேலும் நெல்லை முதன்மைப்படுத்தி மன்னர்களுடன் அவர்தம் ஊர்களும் புகழப்பட்டுள்ளதை

'பழம்பல நெல்லின் ஊணூர்'[94]

'நெல்லுடை மறுகின் நன்னர் ஊர'[95]

'பழம்பல் நெல்லின் வேளூர் வாயில'[96]

'காய்நெல் படப்பை வாணன் சிறுகுடி'[97]

'நெடுங்கதிர் நெல்லின் வல்லம் கிழவோன்'[98]

'நெல் அமல்புரவின் இலங்கை கிழவோன் [99]

'நெல்விளை-கழனி அம்பர் கிழவோன்'[100]

என்ற பாடல் அடிகள் மூலம் அறியமுடிகின்றது.

**நெல் வழிபாடு**

தற்போது பூ தூவி வழிபடும் முறைதான் உள்ளது. ஆனால் சங்க காலத்தில் நெற்றூவி வழிபடும் முறை இருந்துள்ளதை சங்க இலக்கியப்

பாடல்களின் மூலம்

'நெல்லும் மலரும் தூஉய் கைதொழுது
மல்லல் ஆவணம் மாலை அயர'[101]
'செம்முதுப் பெண்டி ரோடு நெல்முன்நிறீஇ
கட்டின் கேட்கும்'[102]
'நெல்நீர் எறிந்து விரிச்சி ஓர்க்கும்
செம்முதுப் பெண்டு'[103]

என்று அதன் சிறப்பை அறிய முடிகின்றது. நெல்லின் உணவை அறியாதவன் எனப் பகைவனும் இகழப்படுகின்றான்.

**நெல் மதிப்பிழப்பு**

நெல் அரசின் முக்கிய வருவாய்க்கும் வளர்ச்சிக்கும் வழிவகுத்தாலும், 'அரசு உருவாக்கத்தின் காரணமாக நெல்லும் நீரும் பின்தள்ளப்பட்டு அரசனின் உயிரே முதன்மையாகக் கருதப்பட்டது'[105] நெய்தல் நில விளைபொருளான உப்பும், மீனும் நெல்லுக்கிணையான பண்டமாற்றுப் பொருளாய் கருதப்பட்டதை

'உமணர் தந்த உப்புநொடை நெல்'[106]
'வெள்ளை உப்பின் கொள்ளை சுற்றி
நெல்லோடு வந்த பல்வாய்ப் பஃறி'[107]
'உப்புநொடை நெல்லின் மூரல் வெண்சோறு[108]'
வராஅல் சொரிந்த வட்டியுள் மனையோள்
யாண்டுகழி வெண்ணொல் நிறைக்கும் உளர'[109]

என்ற அடிகள் மூலம் அறிய முடிகின்றது. நெல்லும் உப்பும் சமமாய் கருதப்பட்டதை

'நெல்லின் நேரே வெண்கல் உப்பு'[110]
'நெல்லும் உப்பும் நேரே ஊரீர்
கொள்ளீரோ ..........'[111]

என்றும் அகநானூற்று அடிகள் உணர்த்துகின்றன.

### 5.13.2 புன்செய் வேளாண்மை:

சிற்றளவாக திருத்தப்பட்டது 'புன்செய்' என்கிறார். தேவநேயப்

பாவாணர் மேலும் சோளமும், கேழ்வரகும் புன்செய் நிலமான முல்லையில் பயிர் செய்யப்படுகின்றது. தினை, சாமை போன்றவற்றை கொல்லைப்பகுதியில் அதாவது குறிஞ்சி நிலப் பகுதிகளில் பயிரிட்டனர்.[112] நீர்ப்பாசன வசதி இருக்குமிடமெல்லாம் புன்செய்யை நன்செய்யாக்கின. பதினெண் கூலமான நெல், புல், வரகு, சாமை, தினை, இறங்கு, தோரை, ராகி, எள்ளு, கொள்ளு, பயிறு, உளுந்து, அவரை, துவரை, கடலை, மொச்சை, சோளம், கம்பு போன்றவைகளும் மற்றும் இஞ்சி, மஞ்சள், பருத்தி போன்றவையும் விளைவிக்கப்பட்டன[113].

**வரகு பயிர் செய்யும் முறை:**

குறிஞ்சி நிலக் கொல்லைப்பகுதிகளில் கொல்லையழவர்கள், ‘வரகினைப் பயிர் செய்ய முதலில் அதிகாலையிலேயே எழுந்து ஏர்புட்டி அகலவும், ஆழவும் உழுகின்றனர். அந்நிலம் செம்மண் என்பதால் ஊனைக் கிழித்தாலொத்து காணப்படுகின்றது. பின்னர் விதைத்தனர் அது பரவி முளைதவுடன், பயிர்கள் வளையும்படி ஒதுக்கிக் களையெடுக்கின்றனர். அப்போது பறையும் ஒலிக்கின்றது. களையெடுக்கும் போது கார் கால மழையினின்று தாம் தப்பிக்க ஓலைக்குடையை தன் தலையில் சூடிக்கொள்கின்றனர். அவ்வுழவர்கள் கூழ் உண்ண விட்டு வைத்த குருந்த மரத்தின் அடியில் வரகு முற்றியவுடன் காவல் செய்யும் மகளிர், எழுப்பும் ஒலி போலமர்ந்து குடுமித்தலையுடைய மயில் அகவும்[114] என்று வரகு பயிர் செய்யும் முறையை இடைக்காடனார் கூறுகிறார்.

## 5.14 நிலவரி

செல்வம் ஈட்டுதல் மன்னற்குச் சிறந்தது என்று கருதப்பட்டது. [115] அச்செல்வம் நிலவரி சுங்கவரி முதலான வரிகளின் வாயிலாக வசூலிக்கப்பட்டது. இவற்றுள் நிலத்திலிருந்து வரும் வரியே முதன்மையானதாகக் கருதப்பட்டது[116].

தன்னாட்சிக்குட்பட்ட நாட்டில் வாழ்வாரிடம் வரிபெறும் உரிமை மன்னனுக்கிருந்தது. வேளாளர்களிடமிருந்து வசூலிக்கப்பட்ட வரிகள் ‘இறை’, ‘புரவு’ போன்றவைகளாகும்.

### *5.14.1. இறை:*

*இஃது இறைவன் என்று மக்களால் மதிக்கப்படும் அரசனுக்கு மக்களால் செலுத்தப்படும் வரி எனலாம்*[117]*. 'இறை' எனும் சொல் மன்னனைக் குறிப்பது எனவே இறைவனுக்குரிய கூறு என்ற பொருள்பட அச்சொல்லைப் பயன்படுத்தினர். மேலும் 'இறு' என்பதன் அடியாகப் பிறந்த 'இறை' என்பது மக்களால் இறுக்கப்படுவது அல்லது வழங்கப்படுவது என்னும் பொருள் கொண்டது. இது பெரும்பாலும் நிலத்தின் மீது விதிக்கப்படும் வரியாகும். நிலமுடையார் எல்லோரும் அரசுக்கு வரி கட்டுதல் வேண்டும் என்பது அன்றிலிருந்து இன்று வரை உள்ள நடைமுறையாகும்.*

### *5.14.2 புரவு*

*புரவு என்பது புரத்தல் அல்லது காத்தல் எனப்பொருள்படும். எனவே இது ஒரு காப்பு வரியாகும். புரவு என்பது விளை நிலத்தை காத்தல், அதாவது காக்கப்பட வேண்டிய நிலம் என்னும் பொருளில் அது நிலத்தைக் குறித்தது. போர்களின் போது பேரழிவுக்குள்ளானது. விளை நிலமே யாதலின் அதனைக்காக்கும் பொருட்டு மக்கள் வரி செலுத்தியமை பொருத்தமேயாகும். புரவு என்பது நிலக்கிழார்கள் கொடுத்த வரியென்பதை*[118] *பிற்காலத்திற் காணப்பட்ட புரவுவரித் திணைக்காலம் என்னும் அமைப்பினைக் கொண்டும் உணரலாம்.*[119]

*நிலவரி மகசூலில் ஆறிலொன்றாகப் பெறப்பட்டது என்பதனை புறநானூற்று வழி*

*'படுவதுண்டு'*[120]

*என்பது ஆறிலொரு பங்காகிய இறையையுண்டு என்று பொருள் கூறுவதன் வழி அறியமுடிகின்றது. ஆறு என்பது பற்றி பரிமேலழகர் தன் குறள் உரையில கூறுகின்றார். அதாவது*

*'தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென்றாங்கு*
*ஐம்புலத்தா றோம்பல் தலை'*[121]

*என்ற குறளுக்கு உரைகாரர், ஒருவன் தன் வருவாயை ஆறாகப் பிரித்து கொண்டு அவற்றல் ஐந்து பகுதியைப் பெற்றோர், தெய்வம், விருந்தினர், சுற்றத்தினர், தான் என்று ஒதுக்கிக் கொண்டு மீதமுள்ள ஒரு பகுதியை*

அரசனுக்கு வரியாகச் செலுத்துவான் என்று கூறுகின்றது.

### 5.15 கடன் தள்ளுபடி

இன்றைய காலகட்டத்தைப் போலவே அன்றும் வேளாண்குடிமக்கள் பலராகவே இருந்தனர். மழைபொய்த்தல் முதலிய பல்வேறு காரணங்களால் சில ஆண்டுகளில் விளைச்சல் பாதிக்கப்படுவதுண்டு. அதனால் வேளாளர்கள் தாம் கட்ட வேண்டிய வரியை கட்ட முடியாமல் இடர்ப்பட்டனர். அக்கடன்நீக்க துணிவுடன் சோழன் குளமுற்றத்து துஞ்சிய கிள்ளிவளவனை நோக்கி வெள்ளைக்குடி நாகனார்.

பகடு புறந்தருநர் பாரம் ஓம்பில்
குடிபுறந் தருகுவை ஆயின்
அடிபுறந் தருகுவர் அடங்கா தோரே[122]

என்று புறத்தில் கூறுவதன் மூலம் கடன்தள்ளுபடி செய்யும் நிலை அன்றும் இருந்ததை அறியமுடிகின்றது.

### 5.16 வேளாளர்களின் உணவு, உடை, உறையுள்

மனித வாழ்விற்கு அடிப்படையானது உணவு அதற்கடுத்தது உடை, உறையுள் மூன்றும் ஒருங்கே ஒரு பாடலில் கொடுக்கப்பட்டுள்ளது. அதனைச் செல்வர்கள் தம் குழந்தைகட்கு நல்லுணவு ஊட்டினர். நல்லணிகளும் ஆடையும் அணிவித்தனர். அவர்களின் குழந்தைகளை வளர்க்கச் செலவிலியர்கள் இருந்தனர். நிலக்கிழார் தம்மனைகளில் குழந்தைக்குப் பாலூட்டுவது முதல் அனைத்தையும் செவிலியரே செய்தனர். பூப்போன்ற மெத்தையில் தூங்க வைத்தனர் என்று பெரும்பாணாற்றுப்படை[123] கூறுவதிலிருந்து. வேளாளர்களான நிலக்கிழார்கள் பெருஞ்செல்வந்தர்களாக இருந்ததை அறிய முடிகின்றது.

**உணவு:**

மருதநிலத்தில் வாழும் உழவர்கள் காலையில் பழஞ்சோற்றை உண்கின்றனர். அவர்கள் மருதநிலத்தை உழுத உழவர்கள் தங்களது எருதுகளை இப்போதைய தரிசு நிலமான புன்செய் நிலத்தில் மேயவிட்டனர். இவர்கள் இரவில் குறுமுயலின் சூடான இறைச்சி மற்றும் நெடுவாளை மீன்

குழம்பை புது சமையலாக செய்து உண்டனர்[124] என்பதை புறம் எடுத்துரைக்கின்றது.

நெல் அரிசியை புழுங்கக் காய வைத்து இரும்பு உலக்கையினால் குத்தி அரிசியாக்கி உண்டதை

'இருங்காழ் உலக்கை இரும்புமுகம் தேய்த்த
அவைப்புமாண் அரிசி அமலை வெண்சோறு'[125]

என்று சிறுபாணாற்றுப்படை அடிகள் எடுத்துரைக்கின்றன.

சங்க காலத்திலேயே உணவைத் தாளித்து உண்டனர் என்பதை

'சுவைக்கினி தாகிய குய்யுடை அடிசில்'[126]
'குய்குரல் மலிந்த கொழுந்துவை அடிசில்'[127]

என்ற அடிகள் கூறுகின்றன.

### 5.14.1 உணவு

தொண்டை மண்டிலத்தில் நெல் விளைச்சல் குறைவு. புன்செய்ப்பயிர்கள் மிகுதி அங்குள்ள உழவர்கள் பெரும்பாலும் புன்செய் பயிர்களான வரகு, தினை, சோளம், அவரை, துவரை, போன்வற்றைப் பயிரிடுவர் அவர்களுடைய உணவு பெரும்பாலும் புன்செய்த தானியங்களாகவே இருக்கும். வரகரிசி சோற்றைப் புழுக்கிய அவரைப் பருப்புடன் பெருகிய சோற்றை அவ்வுழவர்கள் உண்டு வந்தனர். இதனைப் பருப்புச்சோறு என்பர் நச்சினார்க்கினியர்[128]. இதனையே வந்த விருந்தினர்க்கும் அளித்தனர். வரகரிசி 'பூளைப்பூ' போன்றிருந்தது என்பர். மேலும் வேங்கைப்பூப் போன்றிருந்தது, 'அவரை' என்பர். இதனிரண்டையும் கலந்துண்பதால் சுவைமிகும் என்பதால் அவ்வாறு உண்டதாக நச்சினார்க்கினியர் தன் உரையில் குறிப்பிட்டுள்ளார். இதனைப் பெரும்பாணாற்றுப்படை

நெடுங்குரல் பூளைப் பூவன் அன்ன
குறுந்தாள் வரகில் குறளவிழ்ச் சொன்றி
புகர் இணர் வேங்கை வீ கண்டன்ன
அவரை வான் புழுக்கட்டி பயில்வுற்று

இன்சுவை மூரல் பெறுகுவீர்[129].

அடிகளால் அறியலாம். ஏழை உழவர்களின் உணவு இதுதான் என்பதை இவ்வடிகள் கூறுகின்றன.

தோப்புக்குடிகளில் வாழ்ந்த உழவர்கள் நெற்சோற்றை பெட்டைக்கோழி பொரியலோடு உண்டனர். பலாப்பழம், இளநீர், வாழைப்பழம்,. நுங்கு வள்ளிக்கிழக்கு ஆகியவற்றை உண்டனர்[130]. இதனைப் பெரும்பாணாற்றுப்படை எடுத்துரைக்கின்றது.

### 5.16.2 மருத நிலத்தார் உணவு

தொண்டை நாட்டு மருத நிலத்து சிறுபிள்ளைகள் காலை நேரத்தில் பழைய சோற்றை உண்டனர். அவர்கள் அவலை இடித்து உண்டனர் என்பதை

கருங்கை வினைஞர் காதலம் சிறார்
பழஞ்சோற்று அமலை முனைஇ வரம்பில்
புதுவை வேய்ந்த கவிகுடில் ஒன்றில்
அவல்எறி உலக்கை பாடுவிறந்து அயல[131]

என்ற அடிகளால் அறியலாம்.

ஒய்மா நாட்டு மருத நிலத்தார் வெண்சோற்றையும் நண்டும் பீர்க்கங்காயும் கலந்த கறியை சமைத்து தானும் உண்டு விருந்தினர்க்கும் அளித்தனர் [132]என்பதை சிறுபாணாற்றுபடை கூறுகின்றது.

சோழநாடு சோற்றுவளமிகுந்தது. நல்ல காய்கறிகள் விளையும் ஆதலால் நல்ல அரிசி சோற்றையும் காய்கறிகளையும் உண்டிருக்க வாய்ப்புண்டு. இம்மருதநில மக்கள் கரும்பும் அவலும் குறிஞ்சி நிலத்தார்க்கு கொடுத்து அதற்கு ஈடாக மான்தசையையும் கள்ளையும் பெற்று உண்டனர் என்பதை

தீங்கரும்போ டவல்வகுத்தோர்
மான்கறையோ மதுமறுகவும்[133]

இவ்வரிகள் கூறுகின்றன.

“புளியிட்டு ஆக்கப்பட்ட மாங்கறியையும், மரத்திலிருந்து நேரே இறக்கப்பட் கள்ளையும் உண்டனர். கொள்ளையும் பயறையும் பாலுடன் கலந்து வெள்ளிக்கம்பி போன்ற வெள்ளிய அவிழ்க்கஞ்சியை அதிகமாக உண்டனர் உழவர்கள்[134] என்பதை விற்றூற்று மூதெயினனார் கூறியுள்ளார்.

பழைய நெல்லுணவினை பெரிய முகடுகளை உடைய நெற்கூடுகளில் வைத்துண்டனர் என்பதை

முகடுதுமித் தடுக்கிய பழம்பல் லுணவிற்
குமரி மூத்த கூடோங்கு[135]

இவ் அடிகளில் உருத்திரங்கண்ணனார் கூறுவதிலிருந்து இவர்கள் உழுவித்துண்ணும் வேளாளர்கள் என்பதையும் இவர்கள் அதிக நிலங்களை உடையவர்கள் என்பதையும் அறிய முடிகின்றது.

மருதநில உழவர்கள் அதிகாலையில் அதாவது வைகறைப் பொழுதில் பெரிய தடித்த தசையுடைய வரால்மீன் குழம்புடன் பெரிய அரிசிச் சோற்றுத்திரளையை உண்ட மயக்கத்துடன் தன் உழத்தியருடன் சென்றனர்[136] என்று தூங்கலோரியார் கூறுதிலிருந்து அவர்கள் வயல்களில் வேலை செய்யக்கூடிய வினைஞர் என்பதை அறியமுடிகின்றது. அவர்கள் பழைய சோற்றுடன் முந்தைய நாள் பழைய மீன்குழம்பை இட்டு உண்டனர் என்பதையும் அறியமுடிகின்றது.

### 5.16.3. உழவர்களின் இல்லங்கள்

உழவர்களின் வீடுகள் நெடிய சுவர்களைக் கொண்டிருந்தன. அவற்றில் வண்டிச் சக்கரங்களும் கலப்பைகளும் சார்த்தி வைக்கப்பட்டிருந்தன. வீட்டின் முன்னாலிருந்த பந்தலில் யானைகள் நின்றாற்போலக் குதிர்கள்; வீட்டின் பக்கத்திலேயே மாட்டுத் தொழுவம் ஆகியவை இருந்தன. வைக்கோலால் வீடுகள் வேயப்பட்டிருந்தன. முள்வேலி இடப்பட்டிருந்தது[137] என்று பெரும்பாணாற்றுப்படை உழவர் இல்லத்தோற்றத்தினை அழகுற விவரிக்கின்றது.

### *5.16.4. உழவரின் இல்லங்களின் அழகு*

*உழவர் செல்வங்களில் முதன்மையானது "பகடு" அதாவது எருமை அதனால் எருமையும், கன்றுகளுடன் கூடிய பசுக்களும் வீட்டின் முற்றத்தில் நெடிய தாம்புகளைக் கொண்ட முளைகளில் கட்டப்பட்டிருந்தன. நீண்ட ஏணிக்கு எட்டாத நெடிய வடிவினையுடைய குதிர்களில் அதன் மேற்பக்கத்தின் வழியே சொரியப்பட்ட பழைய நெல்லாகிய உணவினையும் கொண்டிருந்தது. அதுவீட்டின் முன்னால் நிரப்பட்டிருந்தன. அத்தகைய முதிர்ந்த நெற்கூடுகள் பல நின்ற இல்லங்களைக் கொண்டிருந்தது. இது வேளாளர்களின் செல்வ நிலையை உணர்த்துகின்றது. அதாவது, உழவர்களிடம் சேமித்து வைக்கும் அளவிற்கு அதிக செழிப்பு இருந்ததைக் காட்டுகின்றது.*

*தென்னந் தோப்புகளுக்கிடையில் வாழ்ந்த உழவர்கள் தென்னை ஓலைக் கொண்டு வேயப்பட்ட வீடுகளில் வாழ்ந்தன. இவ்வீடுகள் தற்போதைய ஓலைக்குடிசைகளை குறிக்கும் வீட்டின் முன்வாசலில் மஞ்சள் பயிரிடப்பட்டிருந்தது. மேலும் வீட்டின் பின்புறம் மணங்கமழும் பூந்தோட்டங்களும் இருந்தது என்பதனை உருத்திரங்கண்ணனார் கூறியுள்ளார்.*[139]

*வயல்களில் பணிபுரிந்தோரை வினைஞர் என்பார் உருத்திரங்கண்ணனார் அவர்கள் வயல்வரப்பில் தங்கிப் பயிர்களைப் பாதுகாக்கப் புதிய வைக்கோலால் வேய்ந்த கவிழ்ந்த குடிலை அமைத்துக் கொண்டனர். அதன் முற்றத்தில் உழத்தியர் அவலை இடித்து உண்டனர் என்பதை*

*"பழஞ்சோற்று அமலை முனைஇ வரம்பில்*
*புதுவை வேய்ந்த கவிகுடில் முன்றில்*
*அவல்எறி உலக்கைப் பாடுவிற்ந்து அயல"*[140]

*என்ற பெரும்பாணாற்றுப்படை கூறுகின்றது.*

### *5.17 அணிகலன்*

நம் ஊர் விளையாட்டுச் சிறுமியர் தம் காலிலே செந்நிறச் சிலம்புகள் ஒலிக்க வயல்களிலே மலர்ந்திருக்கும் தாமரை மலரையும் ஆம்பல் மலரையும் பறிக்கச்செல்லும் போது ஆரல்மீனைத் தின்று கொண்டிருக்கும் பறவையினங்கள் எல்லாம் அஞ்சி பறந்து உயர்ந்த மரத்தின் உச்சிக் கொம்புகளிலே அமர்ந்த பலப்பல குரல்களை எழுப்பின[141]

அவை புகழ் அரங்கின்மேல் ஆடுவாள் அணிநுதல்

வகைபெறச் செரீஇய வயந்தகம் போல[142]

அம்மலர்களை அவையோர் புகழ ஆடலரங்கின் மேலே ஆடுகின்ற ஆடல்மகள் தன் அழகிய நெற்றியிலே அழகுடன் செருகியிருந்தாள்.

ஒரு தாய் தன் மகனைக் கொஞ்சும்போது அவன் அணிகலன்களையும் பெருமைப்பட பாராட்டுவதை பாவை பெருங்கடுங்கோ, ‘ஒளி வீசும் மூன்றுவட முத்துமாலை உன் தலையிலே கிடந்து மின்னுகின்றதே! ஒளிவீசும் முத்துக்களை விளிம்பிலே பதித்துப் பவளத்தால் செய்யப்பட்ட சக்கரங்கள் சுழல கவழள அறியாத, கைமாறி செய்த யானையை புரிபுனைந்த பூங்கயிற்றினால் பையப்பைய இழுத்துக் கொண்டே நின்காலிற்கட்டிய கெச்சைகள் ஒலிக்குள்படியாக மெல்ல நடந்து இங்கே என்பால் வருக என்று கூறுவதிலிருந்து வேளாளர்களின் செல்வச் செழிப்பை மூன்றுவட முத்துமாலை, முத்து பவள யானைத்தேர், கெச்சைகள் ஆகிய அணிகலன்கள் காட்டுகின்றன.[143]”

பொலம் பிறையுள் தாழ்ந்த புனைவினை உருள்களின்[144]

என்ற அடி

“பொன்பிறையினுள் சேர்த்தமைக்கப்பெற்ற முத்துவட நெற்றிச்சுட்டி குழந்தை அணிந்ததைக் கூறுகின்றது. இடபம் பொறித்த பூணினை அணிவித்ததை”[145] கடுங்கோ கலித்தொகையில் கூறியுள்ளார்.

சுறா ஏறு பொறித்த மோதிரத்தை சிவந்த விரல் உடைய சிறுவனுக்கு அணிவித்ததை மருதக்கலி கூறுகின்றது[146] (காமன்கொடி)

‘ஆள்பாதி ஆடைபாதி’ என்பது மாறி ஆள்பாதி ஆடை அணிகலன் பாதி என்பது போல பொன்னாலும் மணிகளாலும் அணிகலனணிந்து

பட்டாடை உடுத்தியிருந்ததை பசும்பொன்னை உருக்கி இரண்டு வடங்களாக்கிப் பின்னி நெருப்பிலிட்டும் ஒளி பெறச் செய்த அழகிய பாதசரம் காலணியாகவும் இடுப்பிலே கைவேலைப்பாடு மிகுந்த பொற்காசுகளையும் அதன்மேல் பவளங்களையும் வடம்போல பதித்து அணிந்ததையும்; மேலும் மென்துகில் பட்டாடையும் அணிந்திருந்தான். அவனுடை தொடி நண்டுக் கண்ணைப் பரோல முழுவதும் சுற்றியமைத்து அரும்பு வேலைப்பாடுகளுடன் அமைந்திருந்தது. அவ்ன கழுத்தில் கருஞ்சிவப்பு நிறமுடைய தம்பலப்பூச்சி போன்ற தகட்டிலே இடப இலச்சினையிட்ட அணியினை அணிந்திருந்தார்.மேலும் முத்தும் பலவகை மணிகளும் பிறவும் ஒன்றாகச் சேர்த்துக் கோத்த மூன்றுவட மாலை கழுத்தை அழகுசெய்தது. கூந்தலிலே கருமணிமாலை அழகு செய்கின்றது என்று

தாய் தன் மகனின் அழகைக் கூறுவதில்
இருந்து அவர்கள் செல்வர்களாக இருந்ததை
அணிய முடிகின்றது.[147]

சிறுவன் தலையில் மூவடக்கோவையும், கழுத்திலே இடப இலச்சினையிட்ட அணியும், தேரைவாய் போன்ற சதங்கைகளைக் காலணியாகவும், அணிந்து இருந்ததை[148] மருதக்கவி எடுத்துரைக்கின்றது. ஒய்மா நாட்டு உழவர் மகள் 'தொடி' அணிந்திருந்ததை பி.சேதுராமன் கூற்றின் வழி அறிய முடிகின்றது[148(அ)].

### 5.18 உழவர்களின் விழாக்கள்

தற்போதைய 'பொங்கல் விழா' சங்க காலத்தில் அறுவடை விழாவாக இருக்க வேண்டும். தைத்திங்களில் நீராடி நோன்பு நோற்றிருந்து அன்று ஆக்கப்படும். மாட்சிமைப்பட்ட உணவை உண்ணுதல் என்று நற்றிணை

'வான்பெயல் நனைந்த புறத்த நோன்பியர்
தையூ ணிருக்கையில்'[149]

கூறுவதிலிருந்து அது உழவர்களின் விழாவான 'பொங்கல் விழாவாக' இருக்க வேண்டும்.

#### நீர்விழா:

வேளாண்மைக்கு ஆதாரம், நீர், அந்நீர் வரவினை முழவு முழங்க

வரவேற்பதும், அதில் ஆடி மகிழ்வதும் கூறப்பட்டுள்ளது. காவிரிரியில் நீர் வரவை வரவேற்று புனலாடியதை அகம்

முழவுமுகம் புலராக் கலிகொள் ஆங்கண்
கழாஅரீப் பெருந்துறை விழலின் ஆடும்[150]

கூறுகிறது. இது இன்றைய காலத்தில் மக்கள் அனைவரும் ஒன்று கூடி ஆற்றுத்துறை, குளம், வாய்க்கால்களில் ஆடிப் பதினெட்டாம் நாளில் கொண்டாடும் 'ஆடிப்பெருக்கினை ஒத்தது'. இதே போல் 'வைகையிலும் வெள்ளம்போல் வந்த புதுநீரினை மலர்களும், பொன்மீன்களும் கொண்டு வைகையாற்றுக்கு நீராடச் சென்றதை'[151] பரிபாடல் கூறுவதிலிருந்து உழவர்கள் நீர்விழாவைக் கொண்டாடியதை அறிய முடிகின்றது.

### 5.19. தெய்வ வழிபாடு

மருத மரநிழலில் நெற்போர் இடுமிடத்து உறையும் தெய்வங்கட்குப் பலி உண்டென்பது[152] கு.வெ.பாலசுப்ரமணியன் கூறுகிறார். இதனை மெய்ப்பிக்கும் வகையில் நச்சினார்க்கினியரும் 'ஆண்டுறையும் தெய்வங்கள் பலிபெறுகின்ற களம்'[153] என்பார். இதனை விளக்கும் வரி

'பலி பெறு வியன்கள மலிய வேற்றிக்'

என்ற அடி விளக்குகின்றது.

### 5.20. மருத நில மகளிர் மாண்பு

குளிர்ந்த வயல்களை உடையது மட்டுமின்றி சான்றோர், அரியகாவல், அகன்ற வீடுகள், அகழி ஆகிய பெருமைக்குரிய நல்லியக்கோடனின் ஆமூரில் உழவர்கள் ஆண்டு முழுவதும் திறனுடன் உழைக்கும் உரம் பெற்ற எழுதுகளைக் கொண்டவர்கள் அவருடைய தங்கையின் முதுகும் பின்னலும் பிடியினது கையையொத்தது. அவர்கள் வீடுதேடி வருபவர்களுக்கு மரியாதை கொடுத்து வெள்ளிய அரிசி உணவையும் நண்டினது கலவையையும் கொடுத்து உபசரிக்கின்றனர் என்று நல்லூர் நத்தத்தனார் மகளிரின் சிறப்பைக் கூறுகின்றார்.[154]

உழவர்கள் பயிர் செய்வது மட்டுமல்ல வாணிகம் செய்வதிலும் ஈடுபட்டனர் என்பதையும்; பதினெண்வகை கூலங்களை மட்டுமல்லாது

பூக்களையும் பயிர் செய்து வந்தனர் அவர்கள் செயலை, 'அழகுடைய பஞ்சு போன்ற புறவிதழையுடைய பசிய குருக்கத்தி, மலரையும், சிறுசண்பக மலரையும் கொள்வீரோ' வென்று கடகப் பெட்டியில் வைத்துக்கொண்டு அவ்வுழவர்ப்புல மகள் விற்றதை நற்றிணையில்

'துய்த்தலை இதழ் பைங்குருக் கத்தியொடு
பித்திகை விரவுமல் கொள்ள ரோவென
வண்டுசூழ் வட்டியன் திரிதரும்
தண்டலை உழவர் தனி மகளே'[155]

என்ற மாறன்வழுதி பாடல்வழி அவர்களின் தொழிலை அறியமுடிகின்றது.

### 5.21. வேளாளரின் பாதுகாப்பு

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனின் ஆட்சியில் மக்கள் விளைநிலங்கட்கு வரி கட்ட முடியாமல் கடனாய் விடுகின்றனர். அதனைக் கண்ட வெள்ளைக்குடி நாகனார் அவ்வரசனிடம் கடனை வாங்காமல் தள்ளுபடி செய்ய வேண்டும் என்கிறார். ஏனென்றால் படைதரும் வெற்றி, உழவுத்தொழினால் வரும் வருமானமே அரசனுக்கு வெற்றியைத்தரும். மழை பெய்யாவிட்டாலும், விளைச்சல் குறைந்தாலும் அப்பழி அவ்வரசனையே சாரும் எனவே, புறங்கூறுவாரின் பேச்சைக் கேளாமல் ஏரைப் பா காக்கும் வேளாளர் குடியைக் காப்பாயாக [156] என்று புலவர் கூறுவதிலிருந்து வேளாளர்களைப் பாதுகாப்பது அரசனுக்கு, 'பகை போக்கி வெற்றிக் கொடுக்கும்' என்பது புலனாகின்றது. இதனையே மன்னனுடைய படை தருகின்ற வெற்றி உழவரின் உழைப்பில் பயனால் கிடைக்கத்தக்கதே என்கிறார் அ.தெட்சிணாமூர்த்தி[157] கூறுகின்றார்.

### 5.22 விருந்தோம்பல்

இருந்தோம்பி இல்வாழ் வதெல்லாம் விருந்தோம்பி
வேளாண்மை செய்தற் பொருட்டு[158]

என்ற குறளுக்கேற்ப விருந்தளித்தவர்கள் வேளாளர்கள் சொந்த நிலம் உடைய வேளாளர் வீட்டிற்குச் சென்றால் இனிப்பான சுவைநிறைந்த பெரிய பலாப்பழம், இன்சுவை இளநீர் கிடைக்கும். யானைக் கொம்புகளைப் போன்ற தோற்றமுடன் வளைந்த குலையிலே பழுத்திருக்கும்

வாழைக்கனிகள் கிடைக்கும். நல்ல பனைநுங்கு கிடைக்கும். சேப்பம் இலையுடன் முற்றிய நல்ல கிழங்குகளும் கிடைக்கும் இவற்றை எல்லாம் வீட்டிற்கு வந்த விருந்தினர்க்கு உபசரிப்பார் பெரும்பாணாற்றுப்படையில் கூறியுள்ளதிலிருந்து அவர்களது விருந்தோம்பற் சிறப்பினை அறியமுடிகின்றது.

தாம் விரும்பும் வகையில் வந்த விருந்தினரை உபசரிக்க வேண்டும் என்று கருதுபவர்களாதலால் தாம் வளர்த்த பெட்டைக்கோழியைப் பொரியல் செய்து அதனுடன் தான் விளைவித்த வெள்ளிய நெற்சோற்றை வரும் விருந்தினர்க்கு உபசரிப்பர்[160] என்பதை உருத்திரங்கண்ணனார் கூறியுள்ளார்.

யானைக்கூட்டம் கலங்கிக் கத்திபதைப் போன்ற ஆரவார ஓசையுடன் கரும்பஞ்சாற்றாலைகள் இயங்கியது. புகை சூழ்ந்த தொட்டில்கள் தோறும் செல்வோர்க்குக் கருப்பஞ்சாற்றை கொடுத்தனர் என்பதை

விசயம் அடூரம் புகைசூழ் ஆலைதொறும்
கரும்பின் தீஞ்சாறு விரும்பினிர் மிசைமின்[161]

என்ற தொடர்கள் வெளிப்படுத்துகின்றன.

### 5.23 உழவரின் இரக்க குணம்

தம்மோடு ஒத்த மக்களின் துயர்களைதலேயன்றி, மக்களினுந்தாழ்ந்த ஆடு, மாடு, குதிரை, கொக்கு முதலான சிற்றுயிர்கள் படுந்துன்பத்தினையும் தாமுணர்ந்து அவைகட்குத் தம்மாலும் பிறராலும் தீங்கு நேராதபடி கொல்லா அறத்தை வளர்க்கவல்ல ஆற்றல் வேளாளர்க்கே உரியது[162]. என்று மறைமலையடிகள் கூற்றை மெய்ப்படுத்தும் வகையில் நற்றிணையில்

''உழவர்கள் உழும் எருது முன்புள்ள நடையின்
சிறப்பு நீங்கியதேயென்று விற்றுவிடாமல் புல்
நிறைந்த தோட்டத்திலே தொழில் செய்யாதபடி
விட்டிருந்தனர்'' என்ற செய்தி அம்மூவனார் பாடலில் உள்ளது.[162.]

'வாடிய பயிரைக் கண்டபோதெல்லாம் வாடினேன்' என்று வள்ளலார் கூறினார். அதற்கு ஒருபடி மேலே போய், 'உழவர்கள் தான்

உழுகின்ற வயலிலுள்ள கோரைகளையும் நெய்தல் களையும் களையெனக் களையாது பாதுகாத்தனர்'[164] என்று தூங்கலோரியார் கூறுகின்றார். இது மறைமலை அடிகளின் கூற்றான, 'இரக்கமும் ஈகையும் விருந்தோம்பலும் அறிவும் தொன்றுதொட்டு வரும் இயல்பாகும்' என்பதனை மெய்ப்படுத்துகின்றது.

### 5.24 பொழுதுபோக்கு

சிறுவர், சிறுமியர் கோரைப் பொம்மை செய்து விளையாடியதை மருதக்கலி கூறுகின்றது[165]. மேலும் சிறுபிள்ளைகள் பனை நுங்கினை, உருளும் சிறுதேராக்கி கயிற்றினாலே கட்டி இழுத்து விளையாடியதை மருதக்கலி கூறுகின்றது[166].

இரண்டு யானைகள் தம்முள்ளே போரிடுவது போலப் பவள உருளைமேல் அமைந்த விளையாட்டு யானையை வைத்து சிறுவர்கள் விளைாடியதையும்; தொடி புனைந்த சிறுமியர் மணல்வீடு கட்டி விளையாடியதையும் மருதக்கலி கூறுகின்றது[167].

வளைந்த காம்பினையும் மறிந்த வாயையும், உடைய கரிய மலரான முள்ளி மலரைப் பறித்து, வாயையும், கோரையை மென்று மென்று அதை நாராகக்கிழித்து அதைக் கொண்டு கண்ணியாக தொடுத்து தலையில் சூடி விளையாடினர். அவர்கள் மென்மையான தோலினை உடையவர்கள். வலிய தொழிலைச் செய்யும் உழவர்களின் குழந்தைகள் என்று பெரும்பாணாற்றுப்படை கூறுகின்றது[168].

மருத நிலத்தில் வாழும் உழவர்கள் மகிழ்ச்சியாக இருக்கின்றனர் என்பதற்குச் சான்றாக 'வயலில் பயற்றங்கொத்துக்கள் போன்ற பூங்கொத்துக் களிலுள்ள பசிய பூந்தாதுக்கள் தம்மீது படியும் பொருட்டு உழவர்கள் வளைத்து விளையாடுகின்றனர். அது நறுமணமிக்க மலர்களையும், மெல்லிய கிளைகளையும் உடைய காஞ்சி மரமாகும்'[169] என்ற செய்தியை ஓரம் போகியார் கூறுவதிலிருந்து அவர்கள் எப்போதும் மகிழ்ச்சியாக இருப்பதை

அறியலாகின்றது.

### 5.25 கார்காலமும் உழவரின் மகிழ்ச்சியும்

ஆவணி, புரட்டாசி மாதங்கள் கார்காலமாகும். மழைபெய்யத் துவங்கும். மழை உழவர்க்கு மகிழ்ச்சியைத் தரும். 'கரிய வானம் அதிர இடித்து பெய்த மழைநீரினால் நிலம் குளிர்ந்து எங்கும் தழைத்தது. உழவைத் தேர்வு செய்யும் நுண்ணிய அறிவுடைய உழவர்கள் உழுதல் விதைத்தல் என்று எங்கும் மகிழ்ச்சிகுரல் ஒலித்தது' என்று அளக்கர் ஞாழார் மகனார் மள்ளனார் பாடல் அடி

'இனந்தேர் உழவர் இனங் கரலியம்ப'[170] என்கிறது.

### வையையின் வரவும் உழவரின் மகிழ்ச்சியும்

நரந்தம் புற்களின் மேல் பரவியுள்ள வேங்கை மரப்பூங்கொத்துக்களையும்; மலைச் சிகரங்களில் உள்ள மரங்களை காற்றாலே வளைந்து முறிந்த கொம்புகளுடன் கூடிய பெரிய மரங்களை வேரோடும் உருட்டிக் கொணர்ந்து மேலும் குறிஞ்சி, முல்லை பகுதிகளிலுள்ள பொருள்களையும் வாரிக்கொண்டு வந்து மருத நிலத்திலும் நெய்தனிலத்திலும் பரப்பியது வையையாறு[171]. அதனைக் கண்ட உழவர்கள் மகிழ்ச்சியடைந்தனர்.

ஆற்றுநீரை எதிர்ப்பார்த்திருந்த உழவர்க்கு இவ்வையையாற்றுநீர் வெள்ளமாக வந்து வயல்களை மேடாக்கியது. கழுகு, தென்னை மரங்களிளைவுக்கு உயர்ந்தது. நூற்றங்கால்களை மேடாக்கியது அதைப் பார்த்து கவலை கொள்ளவில்லை அதற்குப்பதிலாக அவர்கள் கருமுதிர்ந்த வாளைமீன் போன்று விலாப்பருக்க உணவு உண்டு தம் சுற்றத்தாரோடு கூடி தொழில் செய்யும் பொருட்டு பரவி நின்றனர் என்பதை

வித்திடு புல மேடாயிற்றென
உணர்த்த வுணரா ஒள்ளிழை மாதரைப்
புணர்த்திய விச்சத்துப் பெருக்கத்திற் நுனைந்து
சினைவளர் வாளையிற் கிளையொடு கெழீஇப
பழனவுழவர் பாய்புனற் புரத்தந்[172]

பரிபாடல் கூறும்வழி ஆற்றுவளத்தையும் உழவர் மகிழ்வையும் அறிய முடிகின்றது.

### 5.26 மருதமும் பரத்தமையும்

'உழவுத்தொழிலின்' தோற்றத்தோடு நாகரிகம் பிறந்தது' என்று எலியட் ஸ்மித் 'இயற்கை' என்ற நூலில் கூறுவதை அ.தட்சிணாமூர்த்தி கூறுகிறார்[173].

மருத நிலம் காவிரி, வையை, பாலாறு பெரியாறு என்னும் பெரிய ஆறுகளின் கரைகளில் உருவானதை சங்க இலக்கியங்கள் வழி அறியலாம். மேலும், மருத நிலத்தின் செல்வச் செழிப்பே பரத்தமை ஒழுக்கத்திற்கு காரணம் என்றும், நாகரிகம் வளர்ச்சியுறும் போது நெகிழ்ச்சியான போக்கு தோன்றும் என்றும் இராம.பெரியகருப்பன் கூறுவதாக அ.தெட்சிணாமூர்த்தி கூறுவதைக் காணலாம்[174].

மருத நிலத்திலேற்பட்ட கலை வளர்ச்சியும் அடிக்கடி அங்கு நிகழ்ந்த திருவிழாக்களும் பரத்தமைக்கு உறுதுணை புரிந்தன[175] என்பதை நற்றிணைக் கூறுவதைக் காண முடிகின்றது.

மருதத்திணை பாடல்களில் தலைவர்கள் பலர் ஆற்றில் நீர் வரும் முதல் நாள் பரத்தையுடன் நீராடியமை பற்றிக் கடிந்துரைக்கப் படுகின்றனர். அவர்கள் காலையில் வீடு திரும்புவோராகக் காணப்படுகின்றனர்[176]. சிலர் பகலிலும் பரத்தையர் வீடு சென்றனர் என்பதை அகநானூறு எடுத்துரைக்கின்றது.

### 5.27 வேளாளரின் தூண்கள்-வினைஞர்

வினைஞர் தந்த வெண்ணெல் வல்சி
மனைவாழ் அளகின் வாட்டொடும் பெறுகுவர்

இங்கு வினைஞர் என்று பார் வேளாளரின் பணிமக்களே என்பது உறுதியாகின்றது. பழைய உணவுப் பொருள்களைக் கொண்டோர்க்கு நேர்மாறாகப் புது நெற்சோற்றை உண்போராக 'வினைஞர்' குறிக்கப்படுகின்றனர். இவர்பால் உணவுப் பொருள் சேமிப்பில்லை

அறுவடை செய்தபின் பெறும் கூலியினை உண்ணும் நிலையிலிருந்ததை அறியமுடிகின்றது.

வினைஞர் ஊர்ப்புறத்தே வயல் வரப்புகளில் புதிய வைக்கோலால் வேய்ந்த கவிழ்ந்த குடிலில் பசித்து வந்தனர் என்பதை, 'வரம்பில்

புதுவை வேய்ந்த கவிகுடில் முன்றில்

என்ற அடிகள் உணர்த்துகின்றன.

வினைஞரின் பெண்டிரைக் 'கடைசியர்' என்றும்

கொண்டைக் கூழைத் தண்டழைக் கடைசியர்[182]

புறம் கூறுவதைக் காணலாம். மேலும் வினைஞரில் நாற்று நடுவாரை 'நடுநர்'[183] என்கிறது நற்றிணை. மேலும் தமிழ்ப்பேரகராதியும் கடைஞர் கடைசியர் என்பதற்கு வயிலில் பணியாற்றும் கீழ்க்குலத்தோர்[184] என்று கூறுகின்றது.

கரும்புக் கழனியிலும் நெற்கழனியிலும் பணிபுரியும், மாந்தரைக் 'களமர்' என்பர் இதனை,

இனக் களமர் இசை பெருக[185]

என்ற அடி இவர்கள் திரளாக நின்று பணி செய்ததைக் காட்டுகின்றது. வினைஞர் போலவே களமரும் கள்ளை விரும்பியுண்கின்றனர். ஆமைப்புழுக்கினை யுண்கின்றனர் என்பதை அறிய முடிகின்றது.

### 5.25 வேளாளருள் அரசர்கள்

வேளாளர் ஓதுதற்கும் கடவுள் வழிபாட்டிற்கும் தம்மினின்று ஓர் அந்தணக் குடியை வகுத்து வைத்திருந்தனர். இன்றும் நடைமுறையில் கோயில் வழிபாட்டில் அந்தணர்களே முதன்மை வகிக்கின்றனர். இதுபோலவே, 'போர் செயவதற்குரிய ஆற்றலும் குடிகளைப் பாதுகாத்தற்குரிய அறிவு வலிமையுமுடைய வேளாண்மக்கள் அரசாண்டார்கள். அவர்கள் தங்களுக்குள் ஓர் தலைவனை ஏற்படுத்தி 'வேள்' என்றும் அழைத்தார்கள் என்கிறார் சு.வைத்தியநாத மறைமலையடிகள். இதுவே பின்னர் 'வேளாளர்' ஆயிற்று என்கிறார். இவர்கள் அரசர்களாக இருந்தார்கள் என்பதற்கு சான்றாக வேள் எவ்வி, வேள் பாரி, ஆய்அண்டிரன்,

கொண்காணங்கிழான், சிறுகுடிகிழான் பண்ணன், மல்லிகிழான் காரியாதி, இருங்கோவேள், வல்லார்கிழான் ஆகியோரைப் பற்றிய பாடல்கள் உள்ளன.

'வேளாண் மாந்தர்க்கு உழுதூண் அல்லது
இல்லென மொழிப பிறவகை நிகழ்ச்சி'[189]

என்ற நூற்பா, 'உலகின் முதல் நாகரிக குடியை ஏற்படுத்தியதாலும் அது மக்கள் உயிர் வாழ்வதகும், அரசு உருவாக்கத்திற்கும் காரணமாய் இருந்ததனால் அவர்களது முதன்மையான தொழிலாக உழவு கருதப்பட்டடது. அவர்கள் கொடைத்திறன் மாரிக்கு நிகராக சொல்லப்படும் பாரி; யானைக் கொடை வழங்கிய ஆய்; எவ்வியின்றி பாணர் தலை பொற்பூ சூடாத வறுந்தலையாயின என்ற அடிகளே சான்றாக உள்ளன. வேளிர் குடியில் பிறந்தவர்கள் குறுநில மன்னர்களாக இருந்தாலும் தங்களது பெயரைப் பதிவு செய்திருக்கின்றனர்.

**எவ்வி**

எவ்வி என்பான் வேளாளர் வகுப்பினனும் மிழலைக் கூற்றத்து தலைவனுமாவான். இவன் யாழ்ப் பாணர்களுக்கு பெரிதும் பரிசில் வழங்கிப் போற்றியவன் இவன் இறந்தபின்னர் வழங்குவாரின்மையின் அவர்கள் தலை பொற்பூ சூடாத வறுந்தலையாயின என்ற செய்தி  புலவர் கூற்று வழி

எவ்வி இழந்த வறுமையாழ்ப் பாணர்
பூவில் வறுந்தலை[190]

என்பதை அறிய முடிகின்றது. இது எவ்வியின் கொடைச்சிறப்பை விளக்குகின்றது.

எவ்வியின் ஊர் 'நீடூர்' அறந்தாங்கி வட்டத்தின் தென்பகுதியும் இராமநாதபுரம் மாவட்டத்தின் கீழ்ப்பகுதியும் தன்கண் கொண்டது. அவன் யானைகள் பல பரிசிலர்க்குக் கொடுப்பவன். அவன் போருடற்றி முகத்திலும் மார்பிலும் புண்கள் பலபட்டு இறந்தான். இதனையறிந்த வெள்ளெருக்கிலையார்

பொன்புனை திகிரியிற் பொய்யா கியரோ[191]

என்ற அடியில் பொன்னாற் செய்யப்பட்ட ஆழிபோல பொய்யாகுக என்று கூறுவதில் இருந்து அவன் மேலிருந்த பேரன்பினையும் பெரு மதிப்பினையும்

எடுத்துரைக்கின்றார். மேலும் அவன் இறந்த வருத்தம் தீராததனால் அவனுடைய மனைக்கு வந்தார். அப்போது அவனது உயிர்நீத்த எவ்வியின் மனைவி மெழுகி அதன் மேல் புல்பரப்பி சிறு உணவை வைத்து வழிபட்டாள். அதனைக் கண்ட வெள்ளெருக்கிலையார்

தன்னமர் காதலி புன்மேல் வைத்த
இன்சிறு பிண்டம் யாங்குண் பனன்கொல[192]

என்று கூறுவதிலிருந்து எவ்வி பலருக்குக் கொடுத்து பலரோடு உண்பவன். அவன் தனித்து இச்சிறு உணவை உண்ண மாட்டான் எனப்தில் இருந்து அவனது வள்ளல் தன்மையை வெளிப்படுத்துகின்றார்.

'வேள் எவ்வியினுடைய மிழலைக் கூற்றம் பல்வளம் கொண்ட ஊர்களைக் கொண்டது. நெல்லையரியும் பெரிய உழவர், திண்ணிய திமிலை உடைய நுளையர், புன்னை மலர் மாலை சூடிய ஆடவர் வெம்மையுடைய மதுவையுண்டு மகிழ்ச்சியுடன் இருந்தனர். மேலும் இவர்கள் அழகிய வளையலணிந்த மகளிர்க்குக்கை கொடுத்து மகிழ்ந்தனர். மகளிரும் கடல் முள்ளிப்பூவால் தொடுக்கப்பட்ட மாலையணிந்து மகிழ்ந்தனர். அவர்களது கூற்றம் வளமுடையது என்பதனை அவர்கள் குடித்த பனைநுங்கு நீர், கரும்புச்சாறு, இளநீர் ஆகிய முந்நீர் மட்டுமல்லாது; முந்நீர் பாயும் கடலிடத்து வாழ்ந்ததும் காண்பிக்கின்றது. அவனுடைய வல்லண்மையால் காவலற்ற வளம் வாய்ந்த பல நல்ல ஊர்களைக் கொண்டது என்ற மாங்குடி மருதனார் கூற்றிலிருந்து

அஞ்சாமை ஈகை அறிவூக்கம் இந்நான்கும்
எஞ்சாமை வேந்தர்க் கழகு[294]

என்பதை தெளிவு பெற முடிகின்றது.

**இருங்கோவேள்**

இருங்கோவேள் பதினெண்குடிவேளிருள் ஒருவன் தமிழகத்தின் வடபகுதியாகிய மைசூர் நாட்டைச் சேர்ந்த துவரை என்னும் நகரிலிருந்து ஆட்சி புரிந்தவன் இது தற்போது துவாரசமுத்திரம் என அழைக்கப்படுகின்றது. இருங்கோவேள் பதினெண்வேளிருள்

நாற்பத்தொன்பதாவது தலைமுறையினன். புலி கடிமால் என்பது இவனது குடி முதல்வனுக்குப் பெயர். போர்வன்மை மிக்கவன் என்று கபிலர் பாடல் தெரிவிக்கின்றது.

**ஒல்லையூர்கிழான் மகன் பெருஞ்சாத்தன்**

புதுக்கோட்டைத் தனியரசின் கீழிருந்த ஊர்களில் ஒன்று ஒல்லையூர். இப்போது அதன் பெயர் ஒலியமங்கலம் என அழைக்கப்படுகின்றது. ஒல்லையூரில் வாழ்ந்த 'கிழானின்' மகன் பெருஞ்சாத்தன் அவன் பாண்டியரின் வெற்றிக்குத் துணை புரிந்தான். அதனால் அவனது போர்த்திறம், கொடைத்தன்மை தாளாண்மை ஆகியவை பெரிதும் போற்றப்பட்டது. அவனது இறப்பிற்குப் பின் அவ்வூர் வழியே வந்த குடவாயிற் கீரத்தனார். அங்கு பூத்திருந்த முல்லையைப் பார்த்து, 'முல்லையே பெருஞ்சாத்தன் இறந்தபின் துன்பத்திலிருக்கின்றனர். ஆகவே, உன்னை இளையாம் சூடார்; வளையலணிந்த பருவ மகளிரும் சூடார்; பாணனும் சூடான்; பாணினியும் சூடாள் இவ்வொல்லையூரில் நீ ஏனோ பூத்துள்ளாய்'[196] என்று கூறுவதிலிருந்து அச்சாத்தனது பெருமையை அறிய முடிகின்றது.

**வேள் பாரி:**

பாரி பறம்பு மலையைச் சூழ்ந்த நாட்டையுடையவன். இப்பறம்புமலை முந்நூறு ஊர்களைக் கொண்டது. இது தற்போது பிரான்மலை என்று வழங்கப்படுகின்றது. இவர் வேளிர் குலத்தில் எவ்வியின் குடியில் பிறந்தவன். கபிலர் என்னும் நல்லிசைப் புலவர்க்கு நல்ல நண்பன் இவரைப் பற்றி பாடியுள்ளார். முல்லைக்குத் தன் தேரை ஈந்தவன் மூவேந்தரின் சூழ்ச்சியால் இவன் இறந்ததனால் இப்பாரியினது மகளிரை ஔவையார் துணை கொண்டு மணம் புரிவித்து வைத்தார் கபிலர்[197].

பாரியின் பறம்பு மலை அருவியின் நீரால் வளமிக்கதாகும். மழைபெய்யினும், பெய்யாவிட்டாலும் வளம் மிகுந்த பறம்புமலையின் தலைவன் பாரியிடம் சென்றால் நீ நினைத்தது கிடைக்கும் என்கிறார் பாரி விறலியிடம் கூறுகின்றார்.

**நற்குணம்**

பாரி கடவுளைவிட மேலானவன் என்பதை

‘நல்லவுந் தீயவு மல்ல குவியிணர்ப்
புல்லிலை யெருக்க மாயினு முடையவை
கடவுள் பேணே மென்னா’[198]

என்ற அடிகளில் கூறுகிறார். அதாவது கடவுள் குவிந்த பூங்கொத்தினையும் புல்லிய இலைகளையுமுடைய எருக்கம்பூவினை விரும்புவதில்லை. ஆனால் பாரி அறிவில்லாதவராயினும், சிறிய குணங்களை யுடையவராயினும் அவர்களுக்கு வேண்டியது கொடுப்பவன். மேலும் இவரது கைவண்மையை மற்றொரு பாடலில் மாரிக்கு நிகராகக் கூறியுள்ளார். [199]

**படைவலிமை:**

பாரி இரவலர்க்கு அள்ளிக்கொடுப்பவன். ஆனால் அவனை வெல்ல முடியாது என்பதனை

‘வேலின் வேறல் வேந்தர்க்கோ வரிதே’

என்கிறார்.

**விருந்தோம்பல்:**

வேள் பாரி தன்னை நாடி வருவார்க்கு விரும்பிய பரிசு, கள், ஆட்டுக்கறி உணவு என உபசரிப்பவன் என்றும்[201] பாரி இருக்கும்போது அவனது பறம்புமலை எங்கிருந்து காணினும் அழகுறத் தோன்றும்; அவனின் அம்மலை வெறும் மலையாய் காட்சியளிக்கின்றது[202] என்ற கபிலர். மேலும் அப்பறம்பு பற்றி, ‘இக்குன்றம் பாரி இருந்த காலத்தில் ஒருபக்கம் அருவிகளொலித்தது. ஒரு பக்கம் பாணருக்கு வழங்கத் தேவையான கள், கற்களை உருட்டிக்கொண்டொழுகியது[203] என்கிறார்.

**கபிலரின் புலம்பல்**

பாரியிருந்தபோது பறம்புமலை மீதேறிச் செல்லும் குதிரைகளை எண்ணினோம். ஆனால் இன்று அவனினல்லாததால் அம்மலையில் உமணர் வண்டிகளையே காணமுடிகின்றது[204]. பாரியிருந்த போது பறம்புமலை செங்கோன்மையினால் மழைவளம் பெற்றிருந்தது இன்று வெறும் புல்லாய்

காட்சியளிக்கின்றது[205].

பாரியிடம் கொண்டிருந்த நட்பினால் அவனிறந்தபின் அவன் மகளிர் இருவரையும் வேந்தர் சிலரிடம் மணம் புரிவிக்க முயன்றார் கபிலர். முடியவில்லை பின் மலையமான நாட்டுத் தலைநகராகிய திருக்கோவலூரை அடைந்து அம்மகளிரை அவ்வூர்ப் பார்ப்பாரிடம் அடைக்கலமாகத் தந்தார்.[203] பின் பாரியின்றி வாழ நினையாத கபிலர், 'தென்பெண்ணையாற்றின் நட்டாற்றுத் துருத்தியில் வடக்கிருந்து உயிர் துறந்தார்' இன்றும் கோவலூர்க்கருகில் தென்பெண்ணையாற்றின் கரையில் 'கபிலக்கல்' என்ற கல் உள்ளது என்று[207] ஔவை துரைசாமிப்பிள்ளை கூறுகின்றார்.

**வேள் ஆய்**

வேளிர்குலத்துப் பாரிபோல ஆயும் வேளிர் குலத்தவன். இவன் 'ஆய் அண்டிரன்' என்றும் சான்றோரால் பாராட்டப்படுகின்றான். இவரது பெருமையினை ஏணிச்சேரி மூடமோசியார் பாடியுள்ளார். இவர் சிறப்பைத் 'திருந்துமொழி மோசி பாடிய ஆயும்'[208] என்று பெருஞ்சித்திரனார் கூறுவதிலிருந்து அறியலாம்.

'பிறர்க்கீயாது தாமே தனித்துண்டு களிக்கும் செல்வமனைகளில் காணப்படும் ஆரவாரம், பொலிவு ஆகியவை யானைகளையே கொடுத்த ஆய் மனையில் இல்லை' என்று கொடையையும்,[209] ஆய் அண்டிரனை பரிசிலர் எளிதில் அணுகலாம், ஆனால் வேந்தரெவரும் போர் செய்ய அவரை அணுக முடியாது என்று அவரது பேராண்மையினையும்[210] வெளிப்படுத்துகின்றார். மூடமோசியார்

ஆய் அண்டிரனின் யானைக் கொடையை
இரவலர்க் கீத்த யானையிற் கரவின்று
வான மீன்பல பூப்பி னானா
தொருவழிக் கருவழி யின்றி
பெருவெள் ளென்னிற் பிழையாது மன்னே[211]

என்றும்

'நின்னுநின் மலையும் பாடி வருநர்க்
கின்முகங் கரவா துவந்துநீ யளித்த
அண்ணல் யானை யெண்ணிற் கொங்கர்க்
குடகட லோட்டிய ஞான்றைத்
தலைப்பெயர்த் திட்ட வேலினும் பலவே'[212]

என்றும் வியந்து பாராட்டியுள்ளார் மோசியார். மேலும், 'காட்டில் யானைகளைக் கண்டவுடன் இக்காடு ஆயை பாடியதோ'[213] என்று கூறும்போது ஆயின் கொடைத்திறம் வெளிப்படுகின்றது.

**வேள் ஆயின் கொடைத்திறன்**

பொருளைப் பரிசிலர்க்கு வழங்கினால் இம்மையில் இன்பமும் மறுமையில் புகழும் வரும் என்பதை எதிர்பார்த்து உதவிய அறவிலை வணிகன் அல்லன் ஆய் அவன் சான்றோர் கூறியவழி நடந்தவன் என்று மூடமோசியார் கூறுவதிலிருந்து ஆயின் கொடைத்திறம் புலப்படுகின்றது. மேலும் மூடமோசியார் ஆயைக் காணச்சென்றபோது ஆயும் அவருக்கு வேண்டிய அளவு தேரும் மாவும் களிறும் கொடுக்கின்றான். அதை ஏற்காமல்

நின்னைக்
காண்டல் வேண்டிய வளவை[214]

என்று கூறுவதிலிருந்து ஆய் அண்டிரனின் நற்குணம், கொடை வெளிப்படுகின்றது.

ஓடைகிழார் காவிரிக்கரையில் உள்ள துறையூரினைச் சேர்ந்தவர். அவர் ஆய் அண்டிரனை அடைந்து, 'வேந்தே என் உடையில் சீலைப்பேனும்பசிநோயும் துன்புறுத்துகின்றது. நான் பரிசில் பெற்றுச் சென்றாலும் ஆறலைக் கள்வர் அதனைப் பறித்துக் கொள்கின்றனர். இத்தகையத் துன்பங்களையெல்லாம் ஒருசேரப் போக்கி எனக்கு அருளவல்லவன் நீயே! அப்படிச் செய்தால் என்னூர் துறை மணலிறும் அதிக நாட்கள் வாழ்வாயாக! என்று வாழ்த்தி மகிழ்வோம்[215] என்று கூறுவதிலிருந்து அவரின் கொடைச்சிறப்பை அறிய முடிகின்றது.

**ஆயின் பெருமை**

ஆய் இறந்தபின் அவனுடைய உரிமை மகளிரும் அவனுடையின் சிதையில் வீழ்ந்து உயிர் துறக்கின்றனர். அதனைக் காணமுடியாத மூடமோசியார் கண்ணை மூடிக் கொண்டார்[216]. அப்போது அவர் மனக்காட்சியைப் பாடலின் வழி வெளிப்படுத்துகின்றார். இம்மையில் ஆய் வாழ்ந்த அறவாழ்வைப் போற்றி மறுமையுலகிலும் அவனும் உரிமை மகளிரும் இன்ப வாழ்வு வாழும்படி இந்திரனே வரவேற்கும் காட்சியையும் முரசம் முழங்க விண்ணுலகமே அதிர்வதாக[217] தம் பாடலில் கூறுவதிலிருந்து ஆயின் சிறப்பை வெளிப்படுத்துகின்றது.

ஒருவரின் புகழைப் பாடினால் அவர்தான் பரிசு அளிப்பர். ஆனால் அவர் நாட்டினரே விருந்து அளிக்கின்றனர் என்றால் அவர் மதிப்பை மிகவும் வியந்து பாராட்டலாம், ஆயைப் புகழந்து பாடி வரும் பொருநர்க்கு அம்மலையில் வாழும் மலைவாணர், ‘புலித்தோலைப் பரப்பி மான்கறி, சந்தனக்கட்டை, யானைக்கோடு ஆகியவற்றை நல்குவர்’ என்கிறார் மூடமோசியார். இவர் பரிசு பெற்ற மகிழ்வினால்

புலவர் புக்கிலாகி நிலவரை
நீலிஇய ரத்தை நீயே[218]

என்று கூறுவதிலிருந்து ஆயின் கொடைத்திறத்தினை அறிய முடிகின்றது.

**கொண்கானங்கிழான்**

கொண்கானநாடு என்பது பிற்காலத்தே கொங்கண நாடு என மருவி வழங்கலாயிற்று. இது சேலம், கோயமுத்தூரின் கீழ்ப்பகுதி நாடாகும். இந்நாட்டு கொங்கு வேளாளர் குடியில் சிறந்த வள்ளலாக திகழ்ந்தவர் இவர். இந்நாடு பொன்வளம் மிகுந்திருந்தது என்பதனை,

‘பொன்படு கொண்கானம்’[219]

என்கிறது. நற்றிணை இக்கிழான் பெருஞ்செல்வத்தோன்றல் அல்லனாயினும் தன்பால் நாடிவரும் பரிசிலர்க்கு இயன்றன. நல்கி இன்புறுத்தும் இயல்பினன். இவன்பால் மோசிகீரனார் வரக்கண்டதை இக்கிழான், ‘பெருவேந்தரால் பேணிக் காப்பதை பெரும்பேறாகக் கொண்ட நீங்கள் என்னைப் பாராட்டுவது எனது நல்வினைப்பயனே’ என்று கூறுவதிலிருந்து அவரது

நற்குணம் வெளிப்படுகின்றது. அதற்கு மோசீகீரனார், 'கடல் நீரே ஆனாலும் நீர் வேட்கை உடையோர்' சிறு ஓடையை நாடிச் செல்வர் அது போல நானும் வந்தேன். எனக்கு ஈவது அரிது ஆனால் உன்னையும் உன் கொண்கானத்தையும் பாடுவது எளிது[22] என்று கூறுவதிலிருந்து கொண்காணங்கிழானின் வள்ளல்தன்மையையும் பெருமையையும் வெளிப்படுத்துகின்றார்.

கொண்கானங்கிழான், 'சூரியனை எதிர்நோக்கியிருக்கும் நெருஞ்சி போன்றவன்[221]. இவன் நாடு 'இரப்போர்க்களித்தக் கடன் பெறுவோரும்; திறை செலுத்தும் சிற்றரசர்களும் நிறைந்திருக்கும் இரண்டு பயன்களை உடையது'[222] என்று கூறுவதிலிருந்து இவருடைய வள்ளல்தன்மையும் எதையும் எதிர்கொள்ளும் வல்லண்மையும் வெளிப்படுகின்றது.

**சிறுகுடிகிழான் பண்ணன்**

சிறுகுடியென்பது சோழநாட்டின் காவிரிக் கரையில் இருந்ததோர் ஊர். இவ்வூரில் வாழ்ந்த வேளாளர் தலைவன் இப்பண்ணன். இவனை, 'தனக்கென வாழாப் பிறர்க்குரியாளன் பண்ணன்'[223] என்று கொற்றங்கொற்றனாரும்; இவனது பேராண்மையை வியந்து, 'வெள்வேல் இலைநிறம் பெயர, வோச்சி மாற்றோர் மலைமருள, யானை மண்டம ரொழித்த கழற்கால் பண்ணன்'[224] என்று செயலூர் இளம்பொன் சாத்தன் கொற்றனாரும் கூறுவர்.

மதுரை அளக்கர் ஞாழார் மகனார் மள்ளனார் தான் பெற்ற கொடையின் சிறப்பை

'இடுக்கண் இரியல் போக'[225]

அள்ளிக் கொடுத்தான் என்று கூறுவதிலிருந்து அவனது குணம் வெளிப்படுகின்றது. இப்பண்ணன்பால் பேரன்பு கொண்டவர் சோழன் குளகுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன். தன் மேல் கொண்டிருந்த நட்பின் சிறப்பாக பண்ணனின் கொடை நலத்தை, 'பாணன் கூற்றில்' பாடியுள்ளார்.

பண்ணனின் இல்லத்திற்கு சென்று சோறுண்ட கையினராய் செல்லும் சிறார்கள் எறும்பு ஊர்ந்து செல்வதுபோல் சென்று கொண்டிருக்கின்றனர்.

அவனிடம் பரிசில் பெற்றவர்கள் 'யான்வாழும் நாள் இப்பண்ணன் வாழிய'[226] என்று வாழ்த்திச் செல்கின்றார்கள். அவனது இல்லம் ஊனொலி அரவம் மிகுந்ததாக உள்ளது. எனவே அவனது இல்லத்தை, 'பசிப்பிணி போக்கும் மருத்துவனில்லம்' என்று கிள்ளிவளவன் பாராட்டுவதிலிருந்து பண்ணனின் கொடைத்தன்மை வெளிப்படுகின்றது.

***மல்லிகிழான் காரியாதி***

சீவில்லிபுத்தூர்க்கருகில் உள்ள மல்லி என்னும் ஊர்க்குத் தலைவன். இவன் வேளாண்குடி முதல்வனாக பரிசிலர்க்கு வேண்டுவன நல்குபவன். இம்மல்லிகிழான் ஊரில் அவன்தந்த கள்ளையுண்டு பிறர்க்கும் கொடுத்தனர். அதன் செருக்கு மிகுந்து (ஈச்சம்பழம்) துடரிப்பழம், களாப்பழம் ஆகியவற்றை புளிப்புச் சுவைக்காக உண்டனர். பின் நாவற்பழத்தையும் பின் குடநாட்டுமறவர் சமைத்த பன்றியின் நிணங்கலந்த உணவையும் உண்டு மற்றவர்களுக்கு அளித்து மகிழ்ந்ததையும் கண்ட ஆலூர் மூலங்கிழார்,

வருநர்க்கு வரையாது தருவனர் சொரிய
இரும்பனங் குடையின் மிசையும்
பெரும்புலர் வைகறைச் சீர்சா லாதே[227]

என்ற அடிகளில் பரிசிலர் பாடிப்பெறும் களிறுகளைக் காட்டிலும் மல்லிகிழானின் கைவண்மையே சிறந்தது என்று கூறுவதிலிருந்து இவரின் பெருமையை அறிய முடிகின்றது.

**வல்லார்கிழான் பண்ணன்**

வல்லார் என்னும் ஊரைச் சேர்ந்தவன் 'இவ்வூரில் விளாமரத்தின் காய்கள் கனிந்து உதிர்ந்து கிடந்தன. அவற்றை மறத்தியரின் குழந்தைகள் ஓடிச்சென்றெடுப்பர். அதே சமயத்தில் யானையின் இளங்கன்றும் அக்கனியை ஓடிவந்தெடுக்கும்'[228] இத்தகைய வளம் சிறந்த வல்லார் கிழானின் ஊருக்குச் சென்றால் உனது பசிக்குப் பகையாகிய பரிசிலை நல்குவான் என்று புலவர் சோணாட்டு முகையலூர்ச் சிறுக்குத் தும்பியார் கூறுவதிலிருந்து இக்கிழானின் கொடைத்தன்மையை அறிய முடிகின்றது.

**தொகுப்புரை**

*சுழன்றும் ஏர்பின்னது உலகம்*

*உழன்றும் உழவே தலை*

*என்ற குறளுக்கேற்ப முதன்மையான தொழிலாக விளங்கும் வேளாண்மையைச் செய்யும் வேளாளர் பற்றி சங்க இலக்கியங்கள் தெளிவுறுத்தி செய்திகளை இவ்வியல் கூறுகின்றது.*

*வேளாளர்கள் சங்க இலக்கியங்கள் உழுதுண்டார், உழுவித்துண்பார் என்று இருவகையாகப் பிரித்துள்ளது. உழுவத்துண்போர் பெருமளவில் நிலக்கிழார்களாகவும், உழுதுண்பார் 'மள்ளர்' அரிஞர், தொழுவர், ஏரின் வாழ்நர், வினைஞர் என்றும் அழைக்கப்பட்டனர்.*

*'வேளாளன் என்பான் விருந்திருக்க உண்ணாதான்' என்ற திரிகடுக வரிகள் அவர்களின் விருந்தோம்பல் பண்பை வெளிப்படுத்துகின்றது. அவர்கள் வரும் விருந்தினர்க்கு பலாப்பழம், இளநீர், நுங்கு, கரும்புச்சாறு, வாழைப்பழம் மற்றும் நெற்சோற்றைப் பெட்டைக்கோழிப் பொறியலுடன் சேர்த்து உபசரித்தனர்.*

*நாகரிகம் தோன்றிய மருத நிலமே வயல்வளமும் நீர்வளமும் மிகுந்தாக இருந்ததற்கு சான்றாய்*

*சாலி நெல்லின் சிறைகொட் வேலி*

*ஆயிரம் விளையுட் பாக*

*காவிரி புரக்கும் நாடு கிழவோனே*

*என்ற பொருநராற்றுப்படை அடிகளையேக் கூறலாம். மேலும் பசியறியாத இடம் 'மருதம்' என்கிறது அகம்.*

*மருத நில உழவர்கள் காலையில் பழஞ்சோற்றை வரால் மீன் குழம்புடன் உண்டனர். தாளித்துண்ணும் பழக்கம் இருந்தது. இரவில் குறுமுயலின் சூடான இறைச்சியைப் புதிதாய் சமைத்துண்டனர்.*

*தொண்டை மண்டல உழவர்கள் வரகரிசி சோறுடன் அவரைப்பருப்பைப்புழுக்கி உண்டணர்.*

உழவர்களின் இல்லம் வைக்கோலால் வேயப்பட்டு சுற்றிலும் முள்வேலி இடப்பட்டிருந்தது. மாட்டுத்தொழுவம், பெரிய குதிர்கள் இருந்தன.

வேளாளர் வீட்டுச் சிறுவர் சிறுமியர்களை வளர்க்க செவிலியர் இருந்தனர். மேலும் அவர்கள் அணிந்திருந்த முத்துமாலை, இரட்டைவடச் சங்கிலி, ஒட்டியாணம், பட்டாடை மூன்றுவடமாலை மற்றும் செந்நிறச்சிலம்பு ஆகிய அணிகலன்களும், அவர்கள் வைத்து விளையாடிய பவளத்தாலான போரிடும் யானைகள் அவர்களின் செல்வச் செழிப்பைக் காட்டுகின்றது. மேலும் அவர்கள் பெருஞ்செல்வர்கள் மட்டுமல்ல சேமிப்பாளர்கள், புத்திசாலிகள் என்பதை பாழிமலையில் தேன்கூடுகள் தொங்குமிடத்திற்க கீழே செல்வத்தைப் புதைத்து வைத்திருந்தனர் என்ற செய்தியே தெளிவுப்படுத்துகின்றது. வீட்டிலும் ஏணிக்கும் எட்டாத உயரமான நெற்கூடுகளில் நெல்லை சேமித்து வைத்திருந்தனர்.

வேளாளர் ஆண்டுதோறும் பயிர்செய்யத் தொடங்கும்முன் ‘பொன்னேர்’ கட்டி உழவை வழிபட்டனர். அவர்கள் குறிஞ்சி நிலத்தில் மலை நெல்; முல்லையில் திணைப்பயிர்கள்; மருதத்தில் நெல், வாழை, கரும்பு என நிலத்தின் தன்மைக்கேற்ப பயிர் செய்தது அவர்களின் அறிவுத்திறனைக் காட்டுகின்றது.

உழவு முறையில் உழுதல், களை எடுத்தல், மட்டம் செய்தல் விதைவிடல், நாற்றுபறித்து நடல் ஆகியவற்றை செய்தனர். நீர்நிலைகளை வெட்டுதலும் அணைகட்டுதலும் அரசனின் கடமைகளாக கருதப்பட்டது. அறுவடைக்கு அரிவாள் பயன்படுத்தினர். நெற்பொலி ‘மேருமலை’ போல் காட்சியளித்தது. உழவின் சிறப்பை ‘மன்னனின் படை வெற்றி உழவனின் உழைப்பில் அடங்கியுள்ளது’ என்ற சிலம்புக் கூற்றே போதுமானது.

நெல்லை முதன்மைப்படுத்தி ஊர்க்கும் மனிதர்க்கு பெயர் உள்ளது. பழம்பல் நெல்லின் ஊர், நெடுங்கதிர் நெல்லின் வல்லம் கிழவோன். இது நெல்விளைச்சல் பெருக்கத்தைக் காட்டுகின்றது. நெல்லும் உப்பும் சமமாகக் கருதப்பட்டது.

சங்க காலத்தில் விவசாயம் முதன்மையானதாகக் கருதப்பட்டதால் அரசுப் பொருளாதார முன்னேற்றத்தில் நிலவரி முதன்மையானதாகக் கருதப்பட்டது. இறை, புரவு போன்ற வரிகள் வசூலிக்கப்பட்டன. அவை விளைச்சலில் ஆறில் ஒரு பங்காக வசூலிக்கப்பட்டது. இன்று போல் அன்றும் விளைச்சலில்லாத போது வேளாளர்கள் வாங்கிய கடனைத் தள்ளுபடி செய்யும் வழக்கம் இருந்ததை வெள்ளைக்குடி நாகனார் பாடல் தெளிவுப்படுத்துகின்றது.

சிறுவர் சிறுமியர், கோரைப் பொம்மை செய்தும் மணல் வீடு, கபடியும் விளையாடினர்.

மருத நிலம் வளமானதாக இருந்ததனால் பரத்தமை ஒழுக்கமும் பரவிக்கிடந்தது.

வேளாளரில் ‘உழுவித்துண் போரின் தூண்களாக’ உழுதுண்போரான ‘வினைஞர்’ இருந்தனர்.

வேளாளர்கள் ‘உலகத்தார்க்கு அச்சாணி’ மட்டுமல்ல மண்ணாளும் வேந்தனாகவும் இருந்ததை பாரி, எவ்வி, அண்டிரன் பண்ணன், வல்லார்கிழான், இருங்கோவேள் ஆகியோரைச் சான்றாகக் கூறலாம். அவர்கள் கொடை வள்ளல்களாகவும் திகழ்ந்தனர் என்பதை சங்க இலக்கியம் எடுத்துரைக்கின்றன.

# முடிவுரை

*சங்க இலக்கியத்தில், 'நால்வகை மாந்தரின் வாழ்வியல் நிலைகள்' என்ற தலைப்பிலான இவ்வாயில் ஆரிய வர்ணம் கூறும் நால்வகை மாந்தரான அந்தணர், அரசர், வணகர், வேளாளர் பற்றி சங்க இலக்கியம் வழி 1. வர்ணம் - ஓர் அறிமுகம், 2. அந்தணர், 3. அரசர், 4. வணிகர், 5. வேளாளர் ஆகிய ஐந்து இயல்களில் இவ்வாய்வு எடுத்துரைக்கின்றது. அந்தந்த இயல்களில் கண்டறியப்பட்ட உண்மைகள் தொகுப்புரையாக இயல்முடிவில் தரப்பட்டுள்ளன.*

**ஆய்வில் பெற்ற உண்மைகளின் குறிப்பிடத்தக்கன:**

*வர்ணம் என்ற சொல் சமஸ்கிருதச் சொல்லாகும். அது 'தேர்வு' என்ற பொருளை உடையது. இதன் பொருள் வேதகாலத்திற்கு முன்னும் புராண காலத்திலும் அவரவர் செய்யும் தொழிலையேக் குறித்தது. இதிகாச காலத்தில் திறமையின் அடிப்படையில் 'குருவால்' வர்ணம் நிர்ணயிக்கப்பட்டது.*

*வேத காலத்தில் முதலில் செய்யப்படும் தொழில், பின் தொழிலை மாற்றலாம்; பிறகு மாற்ற முடியாத குல அடிப்படைத் தொழிலாகவும் இருந்தது. இக்காலத்தில் எழுதப்பட்ட 'மனு'வின் 'மனுதர்மசாத்திரம்' எனும் நூல் முதலில் நால்வர்ணம் பற்றி எடுத்துரைத்த நூலாகும்.*

*தமிழின் தொன்மையான இன்றும் போற்றப்படும் முதல் இலக்கண நூலான தொல்காப்பியமும் நால்வகை மாந்தர் தொழில் பற்றி எடுத்துரைக்கின்றது.*

*சங்க இலக்கியம் குறிப்பிடும் ஐந்திணைகளில் இந்நால்வகை மாந்தரில் எவரும் தலை மக்கள் இல்லை. இந்நால்வருள் மேலாண்மை, அதிகாரம் ஆகியவற்றினால் அரசனே முதன்மையானவனாகவும் அவனே அந்தணர், வணிகர், வேளாளர் ஆகியோரைப் புரக்க வல்லவனாகக் காட்டப்படுகின்றான். தொழில் அடிப்படையில் திமிலர், சாகாட்டாளர்,*

உமணர், கணியர், காழியர் எனப்பல பெயர்கள் வழங்கப்பட்டன. ஆனால் மேல் குறிப்பிட்டுள்ள மூவரையும் காப்பதன் அவசியத்தைப் புலவர் பலர் எடுத்துரைத்துள்ளனர்.

'வர்ணம்' என்பதற்கு 'சாதி' என்று பொருள் கூறும் தற்போதைய நிலைக்குக் காரணம் நம் நாட்டை அடிமைப்படுத்தி ஆண்ட ஆங்கிலேயர் கி.பி.1700 ஆம் ஆண்டு நிர்வாக வசதிக்காக உண்டாக்கிய இன மற்றும் மதரீதியான பிரிவு அதன் முடிவில் அவர்களின் கி.பி.1871 ஆம் ஆண்டு மக்கள் தொகைக் கணக்கெடுப்பு ஆகியவையே எனலாம்.

'வர்ணம்' என்பதற்கு வேதம், கீதை, புராணம், இதிகாசம் ஆகியவை தொழிலையே முதன்மைபடுத்தியது. ஆனால் ஆரிய வர்ணமோ நிறம், பிறப்பு ஆகியவற்றையே முதன்மைப்படுத்தியுள்ளது. நம் சங்க இலக்கியமோ நாட்டை ஆளும் அரசர்களே அந்தணர், வணிகர், வேளாளர் ஆகியோரையும் அவர்களின் தொழிலுக்கு வேண்டிய வசதிகளையும் செய்து தர வேண்டுமென்கிறது.

சங்க இலக்கியம் அந்தணர் தோற்றம் பற்றி, 'உறி தாழ்ந்த கரகம், முத்தேவர்களை ஒன்றென உரைக்கும் முக்கோல் மெல்லிய நடை' என்று வெளிப்படுத்துகின்றது.

அந்தணர் வேதமோதுவது நாட்டை வளமடையச் செய்தது. குருவாக விருந்து ஓதுவித்தனர்; கௌணியன் விண்ணத்தாயன் என்ற அந்தணர் அவரே வேள்வி செய்து ஈதலும் செய்தார். நாடு வளம் பெற, தாம் வேண்டியது நிறைவேற அரசர்கள் அந்தணர் கொண்டு வேட்டித்தனர். வேள்வி முடிவில் அந்தணர் விரும்பியதை அரசர் கொடுக்க அவர்கள் ஏற்றனர். இவ்வறுவகைத் தொழில் தவிர தூதனாகவிருந்து போரைத் தவிர்த்தனர். புரோகிதனாக இருந்து நற்காரியங்களுக்கு நல்நிமித்தம் பார்த்துக் கொடுத்தனர். யாகம் செய்யாத பார்ப்பான் சங்கனுக்கும் வேலையையும் செய்தான்.

அந்தணர்களுக்கு அளிக்கப்பட்ட பிரம்மதேயங்களே அவர்களின் பெருமையைப் புலப்படுத்துகின்றது.

அந்தணர்க்கென்று தனி பள்ளி இருந்தது. அவர்கள் பசு மற்றும் கிளி வளர்த்தனர். அந்தண மகளிர் நோன்பு நோற்றல் மற்றும் சமையலில் சமர்த்தராக இருந்தனர்.

மன்னன் எனும் சொல் மருதநிலம் சார்ந்த சிறிய ஊர்களின் தலைவனைக் குறித்து சீறூர் மன்னன், தண்ணடை மன்னன், பருத்தி வேலிச் சீறூர் மன்னன் என்று வழங்கப்படுகின்றது. மன்னர் மன்னன், மன்னர் கோவே, மன்னவர் மன்ன என்ற அடைமொழிகள் சேர, சோழ, பாண்டியர்களையேக் குறிப்பதனால் அவர்களின் வாழ்வியல் உண்மைகளே இங்கு எடுத்துரைக்கப்படவுள்ளது.

சங்க காலத்தில் சேரநாடு மலைபடுவளமும், சோழநாடு நெல்வளமும், பாண்டிய நாடு முத்துவளமும் மிக்கதாயிருந்தது.

மூவேந்தரும் போர் வெற்றியே சிறந்த வெற்றியாகவும், போர் இறப்பையே 'வீர இறப்பாகவும்' கருதினர். அரசனின் செல்வ ஆதாரமாக படைவளத்தையேக் கருதினர். சான்றாக சோழன் நலங்கிள்ளியின் படைவளத்தைக் கூறலாம்.

அரசன், தானைத்தலைவன், தலைமை வீரர்கள் ஆகியோர் இரண்டு கழல்கள் அணிந்திருந்தனர்.

மூவேந்தரும், 'கொடைமடம் படுதல்லது படைமடம்படார்' இந்தியா முழுவதும் ஆண்ட பெருமை மூவேந்தருக்குமுண்டு.

மூவேந்தரில் சங்கம் வைத்து தமிழ் வளர்த்த பெருமை பாண்டியர்க்கே உரியது. சோழர்களிடையே சகோதரப் போர், வாரிசுரிமைப் போர் நடந்தது.

வேந்தர், புலவர் நட்பு, கொடை, சான்றாண்மை அறநெறிதவறா ஆட்சி, வீரம் ஆகியவை அரசர்களிடம் சிறப்புடன் இருந்தது.

உழவும் தொழிலும் உண்டாக்கிய உணவுப் பொருட்களை விற்பனை செய்தவர்கள் ‘வணிகர்கள்’ எனப்பட்டனர்.

உப்பு வணிகமே, ‘உள்நாட்டு வணிகத்தில்’ முதன்மை பெற்றிருந்தது. அதில் ‘பண்டமாற்று முறையே’ இருந்தது. உப்பிற்குப் பதிலாக நெல், கள், இறைச்சி, தயிர், பயறு, தேன், மீன் ஆகியவை மாற்றிக் கொள்ளப்பட்டன. உமணர்கள் தம் வாகனமாக எருது, கோவேறு கழுதை ஆகியவற்றைப் பயன்படுத்தின.

நாளங்காடிக்குப் புகாரும்; அல்லங்காடிக்கு மதுரையும் சிறப்புற்றிருந்த நகரங்களாகும் அங்கு வட இந்தியா, எகிப்து, கிரேக்கம், பாபிலோனியா, ரோம், நாட்டுப் பொருட்கள் அரேபியக் குதிரை என எல்லாமும் நிலம் தெளியக் குவிந்து உலகச்சந்தை போல் காட்சியளித்தன.

ரோமர்களின் புதுச்சேரியில் உள்ள குடியிருப்பு, வீராம்பட்டினத்து குடியிருப்பு ரோம - இந்திய வணிக வளர்ச்சியை வெளிப்படுத்துகின்றது. இவர்கள் ரோம நாணயங்களை இங்கேயே அச்சிட்டு வணிகத்தில் பயன்படுத்தியதை அறிய முடிகின்றது.

ஏற்றுமதியும் இறக்குமதியும் துறைமுகங்களின் வழியே சிறப்புற நடந்தது. அங்கு சேமிக்க ‘பண்டகசாலைகள்’ இருந்தன. புகாரின் கலங்கரை விளக்கம் வணிகம் இரவுபகல் பாராது நடைபெற்றதைக் காண்பிக்கின்றது.

கி.பி.1958ல் சட்டமாக்கப்பட்ட ‘வணிக முத்திரை’ சங்க காலச் சோழரின் புலி உருவ முத்திரை தமிழரின் அறிவை வெளிப்படுத்துகின்றது.

மிளகிற்கு முசிறியும்; முத்திற்குக் கொற்கையும்; எல்லாப் பொருட்களின் ஏற்றுமதி, இறக்குமதிக்குப் புகாரும் சிறப்பு சேர்த்தது.

வேளாண்மையே நாட்டின் முதுகெலும்பு என்பதை அன்று அரசர்கள் அறிந்திருந்ததால் அணைகள் கட்டினர். ஆறுகளில் பெருக்கெடுத்தோடி வரும் நீரை வாய்க்கால் வழி ஏரி; குளங்கள் வெட்டிச் சேமித்து வேலி நிலத்தில் ஐந்நூறு மூட்டை நெல் விளைய உதவினர். நீர்நிலைகளைப் பாதுகாக்க காவலர்களை நியமித்திருந்தனர்.

சங்க கால 'புரவு வரி' இன்றைய 'பயிர்காப்பீட்டுத் திட்டத்தின் முன்னோடி' எனலாம். நிலக்கடன்கள் கொடுக்கப்பட்டதும் அது மழைப்பொய்க்கும் காலங்களில் தள்ளுபடி செய்யப்பட்டதையும் புறம் கூறுகின்றது.

வேளாளர்கள் பெயருக்கேற்ப ஈகைக்குணமுடையோராகவும் பெரிய இல்லங்களில் வசிப்போராகவும் இருந்தனர்.

இன்றைய 'பொங்கல் விழா' அன்று 'அறுவடை விழா' என்றும்; இன்றைய 'ஆடிப்பெருக்கு' அன்று 'நீர் விழா' என்றும் அழைக்கப்பட்டதை அறியலாகின்றது.

வேளாண்மை செழித்த மருதநிலத்தில் கலை வளர்ந்தது; விழாக்களும் நடைபெற்றன; அதே சமயத்தில் பரத்தமையும் வளர்ந்தது.

வேளாளர்கள் 'வேளிர்' என்ற பெயரில் அரசர்களாகவும்; மையூர்கிழான் போன்றோர் அமைச்சர்களாகவும் இருந்துள்ளனர். இவர்கள் அரசர்களிடையே பெண் கோடல் மரபிருந்ததை அதற்காக அவர்கள் செய்த போரைக் கூறலாம்.

# துணைநூற் பட்டியல்

**முதன்மை ஆதாரங்கள்**


*அகநானூறு - களிற்றியானை நிறை, மணி மிடைப்பவளம், நித்தியக்கோவை, ந.மு.வேங்கடசாமி நாட்டார் உரை, சைவ சித்தாந்தக் கழகம் வெளியீடு, சென்னை - 18, பதிப்பாண்டு 2008.*

*ஐங்குறுநூறு - பொ.வே.சோமசுந்தரனார் உரை, கழக வெளியீடு, சென்னை - 18 மறுபதிப்பு, 2009.*

*கலித்தொகை - நச்சினார்க்கினியர் உரை, கழக வெளியீடு, சென்னை - 18, மறுபதிப்பு, 2007.*

*குறுந்தொகை - பொ.வே.சோமசுந்தரனார் உரை, கழக வெளியீடு, சென்னை - 18, மறுபதிப்பு, 2007.*

*நற்றிணை - அ.நாராயணசாமி ஐயர் உரை, கழக வெளியீடு, சென்னை - 18, மறுபதிப்பு, 2007.*

*பத்துப்பாட்டு - பொ.வே.சோமசுந்தரனார் உரை, கழக வெளியீடு, சென்னை - 18, மறுபதிப்பு, 2008.*

*பதிற்றுப்பத்து - ஔவை.சு.துரைசாமி பிள்ளை உரை, கழக வெளியீடு, சென்னை - 18, மறுபதிப்பு, 2007.*

*பரிபாடல் - பொ.வே.சோமசுந்தரனார் உரை, கழக வெளியீடு, சென்னை - 18, மறுபதிப்பு, 2007.*

*புறநானூறு - ஔவை.சு.துரைசாமி பிள்ளை உரை, கழக வெளியீடு, சென்னை - 18, மறுபதிப்பு, 2007.*

**துணைமை ஆதாரங்கள்:**

*கலிங்கத்துப்பரணி - ஆர்.வி.கன்னையா நாயுடு உரை, கழக வெளியீடு, சென்னை - 18, இரண்டாம் பதிப்பு, 1955.*

*களவியல் - நக்கீரனார் உரை, கழக வெளியீடு, சென்னை - 18, இரண்டாம் பதிப்பு, 1974.*

*சிலப்பதிகாரம் - அடியார்க்கு நல்லார் உரை, கபீர் அச்சுக்கூடம், சென்னை, ஐந்தாம் பதிப்பு, 1966.*

*திருக்குறள் - பரிமேலழகர் உரை, கழக வெளியீடு, சென்னை, பதினாறாம் பதிப்பு, 1976.*

*தொல்காப்பியம் - பொருளதிகாரம், இளம்பூரணர் உரை, சாரதா பதிப்பகம், சென்னை 14. பதினொராம் பதிப்பு, ஜீன் 2011.*

**அகராதிகள்**

*தமிழ்ப்பேரகராதி - தொகுதி இரண்டு பகுதி ஒன்று, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை.*

*செந்தமிழ்ப்பேரகராதி - உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், தரமணி, சென்னை - 13,*

பதிப்பு, 2009.

தொழில் கலைச் சொல்லகராதி - எச்.சித்திரபுத்திரன், இரா.திருநாவுக்கரசு, மா.பார்வதியம்மாள், தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், முதற்பதிப்பு.

சி.பாலசுப்ரமணியன் - A study of the Literature of the Century, சென்னை பல்கலைக்கழகம், 1980.

நீலகண்ட சாஸ்திரி.கே.ஏ. - Studies in Chola History and Administration, சென்னை பல்கலைக்கழகம், 1932.

சேது பிள்ளை, ஆர்.பி. - Words and thier Significance & Tamil Literary and Colloquial, சென்னை பல்கலைக்கழகம், 1932.

அப்பாத்துரை, கா. - தென்னாட்டுப் போர்க்களங்கள், அலமேலு நிலையம், சென்னை , முதற்பதிப்பு, 1971.

அறவாணன், க.ப. - பாண்டியன் காலத் தமிழ் மக்கள் வரலாறு, தமிழ்க் கோட்டம், 2, முனிரத்தினம் தெரு, அமைந்த கரை, சென்னை 29, முதற்பதிப்பு, ஜனவரி 2012.

இராசமாணிக்கனார், மா.டாக்டர். - தமிழக வரலாறும் தமிழ்ப்பண்பாடும், தனலெட்சுமி பதிப்பகம், மதுரை, முதற்பதிப்பு, மார்ச், 1964.

- தமிழர் நாகரிகமும் பண்பாடும், பாரி நிலையம், சென்னை 1, எட்டாம் பதிப்பு, ஜூலை 1975.

இராமச்சந்திரன், க. - இலக்கிய இன்பம் கட்டுரை பகுதி, தினத்தந்தி, பக்.14, 03.10.2015.

இராமச்சந்திரன்,சி.ஈ. - சங்க கால வரலாறு, தமிழ்நாட்டு பாடல்நூல் நிறுவனம், சென்னை, பதிப்பு, 1977

இராமநாதன், பி. - தமிழர் வரலாறு, தமிழ் மண் பதிப்பகம், சென்னை - 17, பதிப்பு, 2008.

இராமலிங்கம், அரங்க. - சங்க இலக்கியத்தில் வேந்தர், மணி பதிப்பகம், சென்னை-10, முதற்பதிப்பு, 1987

இராமன், கே.வி. - பாண்டியர் வரலாறு, தமிழ் நாட்டு பாடநூல் நிறுவனம், சென்னை, பதிப்பு, 1977.

இலக்குவனார், சி.டாக்டர் - இலக்கியம் கூறும் தமிழர் வாழ்வியல் வள்ளுவர் பதிப்பகம், புதுக்கோட்டை, மூன்றாம் பதிப்பு, 1972.

இறையரசன், பா. - தமிழ் நாட்டு வரலாறு, பூம்புகார் பிரசுரம், 63, பிராட்வே, சென்னை - 18, முதற்பதிப்பு, பிப்.1983

ஐயன்பெருமாள் கோனார், திரு.வித்துவான் - பண்டைத் தமிழர் பண்பாடு, பழனியப்பா பிரதர்ஸ், சேப்பாக்கம், சென்னை - 5.

கந்தையா, ந.சி. - தமிழர் சமயம் எது?
அமிழ்தம் பதிப்பகம், சென்னை.
இரண்டாம் பதிப்பு, 2009.

கனகசபை, வி.,
அப்பாத்துரை, க. - ஆயிரத்தெண்ணூறு ஆண்டு கட்கு
முற்பட்ட தமிழகம், கழகம்,
சென்னை, மூன்றாம் பதிப்பு, 1973.

கரிகாலன், நை.சி. - புறநானூற்று ஆய்வுகள்
என்.சி.பி.ஹெச் (பி) லிட்., அம்பத்தூர்,
சென்னை -98, முதற்பதிப்பு,
டிசம்பர் 2011.

கோவிந்தன், கா. - சேரர், சோழர், பாண்டியர்
ராமையா பதிப்பகம்,
சென்னை- 14.
முதற்பதிப்பு, 2014.

தமிழர் வரலாறு,
பூவிழி பதிப்பகம்,
சென்னை, முதற்பதிப்பு, 2012.

சண்முகம்., ப.முனைவர் - சங்க கால காசு இயல்,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,

சண்முகசுந்தரம், முனைவர்.சிவ. - உழவு நெசவு,
கலைச் சொற்கள்,
திலகவதி பதிப்பகம்,
காஞ்சிபுரம், முதற்பதிப்பு,
செப்டம்பர் 1993.

சம்புநாதன், எம்.ஆர். - நான்கு வேதங்கள் ஓர் அறிமுகம்,
மருதம் பதிப்பகம்,
36 கோமுட்டித் தெரு,
ஒரத்தநாடு - 614625
பதிப்பு, நவம்பர் - 2005.

ஜகந்நாதன், கி.வா. - சங்க நூற் காட்சிகள்,

| | | |
|---|---|---|
| | | இராயபேட்டை, சென்னை-14, பதிப்பு, பிப்.2006 |
| சாரங்கபாணி, இரா. சாமிநாதன், பேரா. | - | சங்க இலக்கியத்தில் மேற்கோள்கள் மெய்யப்பன் பதிப்பகம், புதுத்தெரு, சிதம்பரம், முதற்பதிப்பு, டிசம்பர் 2008. |
| சிங்காரவேலு, கா. | - | சங்க காலப் புலவர்கள் கதை, பாரி நிலையம், 59, பிராட்வே, சென்னை -1 இரண்டாம் பதிப்பு, ஜுன் 1960. |
| சிதம்பரனார், சாமி | - | பழந்தமிழர் அரசியல், இலக்கிய நிலையம், 7வது தெரு, சென்னை-31 பதிப்பு, 1973. |
| சிலம்பொலி, முனைவர். | - | சங்க இலக்கியத் தேன், அன்றில் பதிப்பகம், சென்னை. |
| சிவப்பிரகாசம், டாக்டர்.கு. | - | புறநாறூற்றில் வாாழ்வியல் விழுமியங்கள், அய்யனார் ஆப்செட், சென்னை -94, பதிப்பு, 2013. |
| சிவகாமி, ச. | - | பழந்தமிழ் இலக்கியத்தில் புதிய பார்வைகள், மாதவி பதிப்பகம், 17 ஸ்ரீபுரம் 2வது தெரு, சென்னை - 14, முதற்பதிப்பு, நவம்பர், 2012. |
| சுசீலா கோபாலகிருஷ்ணன், பேரா. | - | சங்க இலக்கியத்தில் நிமித்தங்கள், |

பாலாஜி பதிப்பகம்,
கக்கன் தெரு, செ னாய் நகர்,
மதுரை - 20,
முதற்பதிப்பு, பிப்.1987.

சுப்பிரமணியன், ந.டாக்டர் - சங்க கால வாழ்வியல்,
என்சிபிஹெச் (பி) லிட்,
சென்னை - 98.
முதற்பதிப்பு, 1986.

செல்வராசு,வீ.ஜே - சொற்றொடர் பொருளகராதி,
மெய்யப்பன் பதிப்பகம்,
சிதம்பரம் - 608 001.
பதிப்பு, மே 2012.

விஜயக்குமார், பா. - தமிழகத் துறைமுகங்கள்,
அன்பு வெளியீட்டகம்,
தஞ்சாவூர்.

சேதுப்பிள்ளை, ரா.பி. - செந்தமிழ் இன்பம்
அய்யனார் பதிப்பகம், காரணை,
புதுச்சேரி, முதற்பதிப்பு, 2013.

சோமசுந்தரனார், பி.மா - சங்க காலத் தமிழர் சமயம்,
இராணிப்பேட்டை, சென்னை,
பதிப்பு, 1984.

தங்கராசு, முனைவர்.ப. - இறை வழிபாடு, பதிப்பாசிரியர்,
தமிழியல் துறை,
அண்ணாமலைப்
பல்கலைக்கழகம்

துரைசாமிப்பிள்ளை, ஔவை.சு. - சேர மன்னர் வரலாறு,
நாம் தமிழர் பதிப்பகம்,

171 தாச்சி அருணாச்சலம் தெரு,
மயிலாப்பூர், சென்னை - 4,
நான்காம் பதிப்பு, ஜுலை 2012.

தெட்சிணாமூர்த்தி, அ. - தமிழர் நாகரிகமும் பண்பாடும்
ஐந்திணை பதிப்பகம்,
சென்னை-5,
முதற்பதிப்பு, 1994.

தேவநேயப் பாவாணர், ஞா. - தமிழர் மதம்,
பூம்புகார் பதிப்பகம், சென்னை,
முதற்பதிப்பு, ஆகஸ்ட் 2011.

- தமிழர் வரலாறு,
பூம்புகார் பதிப்பகம், சென்னை,
முதற்பதிப்பு, ஆகஸ்ட், 2011.

தேவ நேயன், ஞா. - பழந்தமிராட்சி கழகம்,
சென்னை,
மூன்றாம் பதிப்பு, 1972.

தேவி, ந. - சங்க இலக்கியத்தில் மக்கட் பெயர்
அடைகள், என்சிபிஹெச் (பி) லிட்,
அம்பத்தூர், சென்னை,
முதற்பதிப்பு, ஜுன் 2010.

நரசய்யா - கடல்வழி வணிகம்,
பழனியப்பா பிரதர்ஸ்,
25 பீட்டர்ஸ் சாலை, சென்னை -
14,
முதற்பதிப்பு, 2005.

நாராயணன், ஆர்.எஸ். - இன்றைய விவசாயம்,
என்சிபிஹெச் (பிட்) லிட்,
41பி, சிட்கோ இன்டஸ்ட்ரிஸ்,
அம்பத்தூர், சென்னை,
முதற்பதிப்பு, நவம்பர், 2014.

பாலசுப்பிரமணியன், கு.வெ.டாக்டர். - சங்க இலக்கியத்தில் புறப்பொருள், மீரா பதிப்பகம், புதுக்கோட்டை- 622 001. முதற்பதிப்பு, டிசம்பர், 1985.

பொம்மி, இல. - புறநானூற்றில் போரும் அமைதியும் கிருஷ்ணா பதிப்பகம், சென்னை, முதற்பதிப்பு, ஜூலை 2006.

சுப்பிரமணியன், கு.வெ. - சங்க இலக்கியத்தில் சமூக அமைப்புகள், எட்டாம் உலகத்தமிழ் மாநாடு, பதிப்புச் சுழல் வெளியீடு எண்.517, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், முதற்பதிப்பு, 1994.

மகேஸ்வரி, செ. - பரிபாடலில் சமூகம், என்சிபிஹெச் (பி) லிட், அம்பத்தூர், சென்னை - 98 முதற்பதிப்பு, நவம்பர், 2013.

மறைமலையடிகள் - வேளாளர் நாகரிகம், கழக வெளியீடு, திருநெல்வேலி -6 முதற்பதிப்பு, 1927.

மாதையன், பெ. - சங்ககால இனக்குழு சமுதாயமும் அரசு உருவாக்கமும், பாவை பப்ளிகே ன்ஸ், இராயப்பேட்டை, சென்னை , நான்காவது பதிப்பு, டிசம்பர், 2012.

மாதையன், பெ. - சங்க இலக்கியத்தில் வேளாண் சமுதாயம்,
என்சிபிஹெச் (பி) லிட்,
சென்னை - 98.

மாரிமுத்து - அகநானூற்றில் மருதனிள நாகனார்,
பாடல்களில் வளமும் வரலாறும்,
அருள் பதிப்பகம்,
எம்.ஜி.ஆர்.நகர், சென்னை,
முதற்பதிப்பு, 2008.

முத்து எத்திராசன் - பாடல்கள் கூறும் பல்சுவைச் செய்திகள்,
அருண் புத்தகாலயம்,
எம்.ஜி.ஆர்.நகர், சென்னை-28.
முதற்பதிப்பு, 2001.

மோதி சந்திரர் - இந்திய வணிக நெறிகள்
தமிழாக்கம், எம்.சுப்ரமணியம்,
சாகித்திய அகாதெமி.